அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஸ்ரீ ஜக³த்³கு³ரு க்³ரந்த²மாலா

# ॥ विवेकचूडामणिः ॥

# விவேகசூடா³மணிः

ஸ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.
1975

# விஷயானுக்ரமணிகை



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# முகவுரை

ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு மஹாஸன்னிதானத்தின் அனுக்ரஹத்தின்கீழ் வெளிவரும் ஸ்ரீ ஜகத்குரு க்ரந்த மாலா'வின் "**விவேகசூடா³மணிஃ**" புத்தகம் இது.

ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதாளின் பிரகரண கிரந்தங்களில் மிகவும் மேன்மை வாய்ந்தது இதில் அடங்கிய 'விவேகசூடாமணி' என்ற நூல். ஸூத்ரபாஷ்யம் உபநிஷத்பாஷ்யம், கீதாபாஷ்யம் இவைகளில் அடங்கி உள்ள விசேஷ வேதாந்த தத்துவங்களை சுருக்கமாக வும் தெளிவாகவும் ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இந்நூலில் எடுத்துக் காட்டியிருக்கிறார். இதைப் படித்தால் ஸ்ரீ சங்கரர் சொல்லியுள்ள அத்துவைத வேதாந்தத்தின் எல்லா அம்சங்களும் மனதில் தெளிவாகத் தோன்றும். இதிலுள்ள 582 சுலோகங்களில் எல்லா விவரங்களையும் (தத்துவங்கள், உதாஹரணங்கள்) காணலாம்.

இதைப் படிப்பதற்குமுன் வேதாந்த சாஸ்திரத்தின் அடிப்படைத் தத்துவங்களைப் புத்தக மூலமாகவோ அல்லது உபந்யாஸங்கள் மூலமாகவோ கேட்டு அறிந்திருந்தால் இந்தப் புத்தகத்திலுள்ள விஷயங்களை நன்கு அறிந்துகொள்ள முடியும்.

முதல் சுலோகத்தில் மனித ஜன்மாவின் விசோஷத்தையும், மனிதன் ஆத்மக் ஞானியாகக்கூடிய வழியையும் அவசியத்தையும் சுருங்கச்சொல்லிப் பின்னிட்டு அதன் பூர்ண விவரணத்தைக் கிரந்தத்தில் சொல்லியிருக்கிறார்.

நம்முடைய சாஸ்திரங்கள் எல்லாம் குருசிஷ்ய ஸம்வாதம், கேள்வி - பதில் என்ற முறையில் அமைந்திருக்கின்றன. இதை உபநிஷத் கதைகளில் காண்கிறோம். அதே போல் ஸ்ரீராமாயணம் ஸ்ரீமகாபாரதம் முதலிய இதிஹாஸங்களும் ஸ்ரீபகவத் கீதையும் உள்ளன.

ஸ்ரீமத் பாகவதம் முதலிய புராணங்களும் இதே ரீதியைக் கடைப்பிடிக்கின்றன. இது தான் உபதேசங்களின் வழி. அதே வழியில் விவேகசூடாமணியும் அமைக்கப்பட்டிருக்கிறது.

வேதாந்தம் அறிய விரும்பும் ஓவ்வொருவருக்கும் ஏற்படக்கூடிய சந்தேகங்களை இதில் குறிப்பாய் சொல்லி அதற்கு பதில்களையும் கொடுத்திருக்கிறார் பகவத்பாதாள்.

இதில் 51 வது சுலோகத்தில் கீழ்கண்ட 7 கேள்விகளை குறிக்கிறார்: -

1. பந்தம் என்பது எது?
2. இந்த பந்தம் எப்படி வந்திருக்கிறது?
3. இதன் இருப்பு எவ்விதம்?
4. அதிலிருந்து விடுபடுவது எப்படி?

5. ஆத்மா அல்லாதது எது?
6. மேலான ஆத்மா என்பது எது?
7. ஆத்மா, ஆத்மாவல்லாதது என்று இரண்டையும் பிரித்து அறிவது எப்படி?

ஆத்மாவல்லாதது எது என்ற 5 வது கேள்விக்கு முதலில் 71 முதல் 123 வரை சுலோகங்களில் பதில் அளிக்கிறுர். ஸ்தூல சரீரம், சூக்ஷ்மசரீரம், காரணசரீரம், ஜகத்காரணமான அவ்யக்தம் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் சப்தாதி விஷயங்கள் அவைகளை கிரகிக்கும் இந்திரியங்கள், ஸுகதுக்க அனுபவங்கள் அந்த: கரணம், பஞ்ச மகாபூதங்கள் ஆகிய ஜகத்திலுள்ள எல்லாவிதமான பதார்த்தங்களையும் எல்லாமே அனுத்மாவானவை என்று விளக்குகிறுர்.

அடுத்தபடி மேலான ஆத்மா என்பது என்ன என்கிற 6 - வது கேள்விக்கு சுலோகம் 126 முதல் 138 முடிய பதிலளித்திருக்கிறுர். பரமாத்மா நம் சரீரத்தில் ஜீவாத்ம ரூபமாய் இருக்கிறுர். அது விகாரமற்றது, சுத்தஞான ரூபமானது, மனஸ் அலையாமல் சுத்தமாக இருந்தால் புத்தி தெளிவடைந்து ஆத்மாவை அறியமுடியும் என்று கூறுகிறுர்.

பந்தம் என்பது என்ன என்ற முதல் கேள்விக்கு 139 - வது சுலோகத்தில் பதில் சொல்லுகிறுர். பந்தம் அக்ஞானத்தால் ஏற்பட்டது. அது ஞானத்தால்தான் நீங்கும். பந்தம் என்பதும் பொய். ஆவரணமும் விக்ஷேபமும்தான் இந்தப் பொய்த் தோற்றத் திற்குக் காரணம் என்கிறுர்.

இந்தப் பந்தம் எப்படி ஏற்பட்டது என்ற 2 - வது கேள்விக்கு 141 முதல் 146 வரையுள்ள சுலோகங்களில் விளக்குகிறுர். பதார்த்தத்தின் வாஸ்தவ ரூபம் மறை பட்டு வேறுவிதமான நினைப்பு வருவதால்தான் துன்பங்கள் ஏற்படுகிறது. காம, க்ரோத, லோபாதி தோஷங்கள் தான் இதற்குக் காரணம். அதுவே இவனை ஸம்ஸாரக் கடலில் மூழ்கி உழலும்படிச் செய்கிறது. உண்மையை மறைப்பதல்லாமல் பல துன்பங்களையும் உண்டுபண்ணுகிறது என்று விளக்குகிறுர்.

பின்பு மேலேகண்ட மூன்றுவது கேள்வியான பந்தத்தின் இருப்பு எவ்விதம் என்பதை 147-148 சுலோகங்களில் விளக்குகிறுர். தேஹத்தை ஆத்மாவாக எண்ணுவது ராக த்வேஷங்கள். அதன் மூலம் வரும் புண்ய பாப கர்மாக்கள், சரீர அபிமானம் இவைகளை உண்டுபண்ணி பந்தம் நிலைத்து நிற்கிறது என்கிறுர்.

மேலே சொன்ன 4 வது கேள்வியாகிய பந்தத்திலிருந்து விடுபடுவது எப்படி என்பதற்கு 149 முதல் 155 வரையுள்ள சுலோகங்களில் சொல்லுகிறுர். இதற்கு வழி ஆக்மஸாக்ஷாத்காரம்தான் என்று சொல்லி அந்த ஆத்மக்ஞானம் ஏற்படுவதற்குள்ள படிகளை 153 முதல் 211 வரை வரிசையாகச் சொல்கிறுர். ஆத்ம அனுத்ம விவேசன க்ஞானம் இதற்குத் தேவை என்கிறுர். அதன்பின் அன்னமயம், ப்ராணமயம், மனுே மயம், விக்ஞானமயம், ஆனந்தமயமுமான ஐந்து கோசங்களையும் தனித்தனியே

சொல்லி அவைகள் எப்படி ஆத்மாவாகாது என்பதை விளக்குகிறுர். இந்த ஆத்மா ஸ்வயம்ப்ரகாசமானவர் என்பதை 153, 212 சுலோகங்களில் காட்டுகிறுர்.

எதுவும் ஆத்மாவல்லவென்றுல், வித்வாளுல் அறியக்கூடிய வஸ்துதான் என்ன இருக்கிறது என்ற சிஷ்யனுடைய கேள்வியை 214 - வது சுலோகத்தில் சொல்லி அதற்கு பதிஇலயும் கூறுகிறுர். 215 முதல் 227 வரை ப்ரஹ்மமும் இருக்கும் உள்ளே ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்றுதான் என்றும், 228 முதல் 238 வரை ஜகத்தும் ப்ரஹ்ம த்தைத்தவிர வேறில்இல என்றும் விளக்கிவிட்டு, 239 முதல் 242 முடிய உள்ள சுலோகங்களில் அந்த ப்ரஹ்மத்தை வர்ணிக்கிறுர்.

பின்பு, இதுவரை சொன்ன விஷயம் உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டதுதான் என்று பல நிரூபணங்களை எடுத்துரைக்கிறுர். பல மகாவாக்கியங்களையும் சொல்லி விளக்குகிறுர். மகாவாக்கியத்தின் வாஸ்தவமான பொருளை எப்படி அனுஸந்தானம் செய்வது என்றும் சொல்லுகிறுர் (255-264).

இப்படி அறிந்த பின்பும் அநாதிகாலமாக வந்த சரீராதிகளில் 'நான்' என்ற எண்ணம் இருப்பதால் அதைத் தீர்க்க பிரயத்னம் செய்யவேண்டும். இதுதான் வாஸஞ பந்தத்தை குறைப்பது என்கிறுர் (268-287). இதற்கும் காரணம் சரீர அபிமாணம்தான். ஆகவே அந்த அபிமானத்தைவிடச் சொல்கிறுர். ஸ்தூலசரீரம், ஸூக்ஷ்ம சரீரம் இரண்டிலும் உள்ள நான் என்கிற எண்ணத்தை ஒழிக்கவேண்டும், (291-321) இதற்கு ஐகாக்ர்யம் அவசியம் என்கிறுர் (310)

இந்த ஆத்ம நிஇல நழுவாமல் இருக்கவேண்டும் (322-341). ஸமாதி மூலம் அந்த நிஷ்டையை ஸம்பாகிக்க வேண்டும் என்று 342 சுலோகத்தில் சொல்லி, நிர்விகல்ப ஸமாதியை 343 முதல் 368 வரை சுலோகங்களில் விஸ்தாரமாகச் சொல்லியிருக் கிறுர்.

இந்த நிர்விகல்ப ஸமாதிக்கு ஸாதனங்களான ஏகாந்த வாஸம், பேச்சை அடக்குதல், நிராசை, வைராக்யம், முதலியவைகளின் அவசியத்தை 369 முதல் 379 வரை சுலோகங்களில் குறிப்பிடுகிறார். அப்படிப்பட்ட ஆத்மநிஷ்டை ஏற்பட்டால் பிரும்மானந்த அனுபவம் ஏற்படும் என்று 380 வது சுலோகத்தில் சொல்லுகிறார். இது சாசுவதமாக இருப்பதற்கு மாயையை விலக்கவேண்டும் என்று சொல்லி இரண்டற்ற நிஇலயை 399 முதல் 406 வரை குறிப்பிடுகிறுர். இப்படிச் சொன்னதற்கு யுக்தி மாத்திரமல்ல வேதமே பிரமாணம் என்று 407 வது சுலோகம் முதல் கூறுகிறுர். எல்லோரும் இதை அப்யஸிக்கலாம் என்று 413 வது சுலோகத்தில் உபதேசிக்கிறுர்.

ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்ட பின்னும் கர்ம சரீரம் இருக்கும். ஆஞல் அது ஞானியை பாதிக்காது. இது எப்படி என்பதை 415 முதல் 429 வரை சொல்லி ஜீவன் முக்தரின் லக்ஷணம் அவருடைய அனுபவம் முதலியவைகளை 430 முதல் 443 முடிய விஸ்தரிக்கிறுர். ஆத்மஞானிக்கு சரீர அபிமானமில்லாததால் அந்த சரீரத் தால் செய்யப்படும் காரியங்களின் பலஞன புண்ணிய பாபங்கள் அவஇன பாதிக்காது. ஸஞ்சிதம், ஆகாமி முதலிய கர்மாக்கள் இவஇன கட்டுப்படுத்தாது. ஸுகம், துக்கம்

என்பதே இவனுக்கு கிடையாது. ஆரம்பிக்கப்பட்ட பிராரப்தம் இருக்கும்வரை சரீரம் இருக்கும். ஆனுல் அதனுலும் ஞானி பாதிக்கப்படமாட்டார். (456-465)

பின்பு, 466 முதல் ஏழு சுலோகங்களில் வேதத்தில் சொல்லப்பட்ட பரதத்துவத்தை விளக்குகிருர். இவ்வழியைத்தான் நமக்கு முன்பு எல்லா க்ஞானிகளும் கையாண்டிருக்கிருர்கள். அதையே உனக்கும் நான் சொல்லுகிறேன் என்று 45-வது சுலோகத்தில் சொன்னதை சிஷ்யனுக்கு இப்போது ஞாபகப்படுத்தி 'அதேபோல் நீயும் அனுஸரித்துவந்தால் மோக்ஷம் அடையலாம்' என்று 474 - வது சுலோகத்தில் ஆசீர்வதிக்கிருர்.

இப்படி உபதேசம் பெற்ற சிஷ்யன் ஆத்மக்ஞானியாஞன், அவனுடைய அனுபவம் என்ன என்பதை 481 முதல் உள்ள சுலோகங்களில் காட்டுகிருர். பின்னும், அந்த சிஷ்யனுக்கு விசேஷ உபதேசங்களை 522 முதல் 555 வரை சொல்கிருர். விதேஹமுக்தி நிலையை 556 முதல் மேலே உள்ள சுலோகங்களில் நன்கு விளக்குகிருர். இதைக் கேட்ட சிஷ்யன் முக்தனுக ஆனுன் என்று முடிக்கிருர். முதல் சுலோகத்தில் கடைசி பாதத்தில் சொன்ன 'முக்தி' என்றதை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் எடுத்துக்காட்டியிருக்கிருர்.

இந்தப் பேருபகாரம் செய்த ஸ்ரீபகவத்பாதருக்கு நாம் என்ன கைம்மாறு செய்ய முடியும்? இந்தக் கிரந்தத்தை ஊன்றிப் படித்து அதில் கண்ட உபதேசங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக நம் அனுபவத்திற்குக் கொண்டுவருவதுதான் நம் கிருதக்ஞதையைத் தெரிவித்ததாக ஆகும் என்று எண்ணுகிறேன்.

இந்த முக்யமான கிரந்தத்திற்கு சிருங்கேரியில் 34 - வது பீடாதிபதிகளாக அமைந்து அருள்பாலித்த ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் மிகவும் எளிய முறையில் ஸம்ஸ்கிருதத்தில் வியாக்யானம் எழுதி உள்ளார்கள். அதைப் படித்தால் பல சாஸ்திரங்களைப் படித்த ஞானம் ஏற்படும். அதை ஆதாரமாகக் கொண்டு ஸித்திங்கதாளான மஹான் ஸ்ரீ ஞானனந்த பாரதீ ஸ்வாமிகள் மிகவும் தெளிவாகவும், எளிய நடையிலும், பல் மேற்கோள்களுடனும் நமக்குத் தமிழில் அனுவாதம் எழுதிக் கொடுத்து இப்புத்தகத்தை வெளிவரும்படிச் செய்ததற்கு நாம் அவரை நம் ஆயுள் வரை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு அவருக்கு வணக்கங்களைச் செலுத்த வேண்டும், 26 - வது பாகம் வெளிவந்து சிலகாலமாகிவிட்டது. இந்தக் கிரந்தத்தை ஒரே இதழாகப் பிரசுரிக்க எண்ணியதால் தாமதம் ஏற்பட்டதற்கு சந்தாதாரர்களின் மன்னிப்பை வேண்டிக்கொள்கிறேன். இப்புத்தகம் வெளிவருவதற்கு எல்லா வழிகளிலும் உதவிபுரிந்த என் ஆப்த நண்பர் சென்னை, குருபக்தசிரோமணி, தர்மாத்மா, ஸ்ரீ வைத்ய ஸுப்ரமணிய அய்யருக்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

இப்புத்தகத்தை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸ் அச்சகத்தாருக்கும் புத்தகத்தை அச்சிடும்போது பரிசீலித்ததுடன் இதை நன்கு உபயோகிக்க உதவியாக இருக்கும் அட்டவணை, சுலோகானுகிரமணிகை இவைகளை எழுதிக் கொடுத்த வியாகரண வேதாந்த வித்வான் ஸ்ரீரங்கம் ஸ்ரீசங்கர

குருகுலம் **ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரி**களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இதற்கெல்லாம் மூலகாரணம் சிருங்கேரி ஸ்ரீஜகத்குரு அபிநவவித்யாதீர்த்த மகாஸந்நிதானத்தின் அனுக்கிரகம்தான். அவருடைய திவ்ய பாதாரவிந்தங்களில் இம்மலரை என் சாஷ்டாங்க பிரணாமங்களுடன் சமர்ப்பிக்கிறேன்.

சிருங்கேரி தாஸன்,

**K.V. சுப்பரத்னம்**,

பொதுக்காரியதரிசி,

அகிலபாரத சங்கரஸேவா ஸமிதி.

ஸ்ரீரங்கம்,

12-10-75.

---



ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு
**ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள்**

॥ श्रीः ॥

॥ ஸ்ரீ꞉ ॥

# ॥ विवेकचूडामणिः ॥

# விவேகசூடா³மணி꞉

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

## முன்னுரை

[ ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யாரவர்கள் இயற்றியுள்ள பிரகரணங்களுக்குள் விவேக சூடாமணி என்பது மிகவும் பிரஸித்தி பெற்றது. உபநிஷத்துக்களில் சிதறிக்கிடக்கும் உபதேச ரத்தினங்களை வெகு அழகாக இசைத்து இந்த சூடாமணி என்ற அத்புதமான ஆபரணம் செய்யப்பட்டிருக்கிறது. வேதாந்த சாஸ்திரத்தில் பரிசயம் செய்யவாரம்பிக்கும் வித்யார்த்திக்கும் இது மிகவும் முக்கியமாய் உபயோகப்படக்கூடியது; ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்த வித்வானுக்கும் பஹிர்முகமாயிருக்கும் ஸமயத்தில் அனுஸந்தானத்திற்கு மிகவும் உபயோகமுள்ளது. எவராலும் சிரஸா வஹிக்க வேண்டிய பெருமை பொருந்தியதினாலேயே இதற்கு சூடாமணி என்ற பெயர் மிகவும் பொருத்தமாயிருக்கிறது. இதற்கு ஜீவன் முக்தராய் விளங்கி வந்த ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகளவர்கள் மிகக் கருணையுடன் ஸாமான்ய வ்யுத்பத்தியுள்ளவர்களுக்குக்கூட வேதாந்த தத்வங்கள் மிகத் தெளிவாய் மனஸில் பதியும்படியான ரீதியில் [1]வியாக்யானம் செய்திருப்பது நம்முடைய விசேஷ பாக்கியமேயாகும். அவ் வியாக்யானத்தை கவனமாக வாசிப்போருக்கு மற்ற பிரகரணங்களையோ, பிரஸ்தானத்திரய பாஷ்யாதி வேதாந்த கிரந்தங்களையோ, வாசித்தாகவேண்டுமென்ற அவசியமே ஏற்படாது.

[1] இந்த விவேக சூடாமணி பாஷ்யம் சிருங்கேரி ஸ்ரீ மடத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

கிருதார்த்தர்களாவதற்கு இது ஒன்றே போதுமென்று உணருவார்கள். இந்த கிரந்தத்திலுள்ள 581 சுலோகங்களில் 515 - வது சுலோகம் பாதியில் வியாக்யானம் நின்றுவிடுகிறது. அத்வைத பிரஹ்மானந்தானுபவத்தை வர்ணித்து வருகையில் அதில் தானும் லயித்து மேல் எழுதவேண்டாமென்று ஸ்ரீமத் ஆசார்யார் நிறுத்திவிட்டாரோ என்று தோன்றுகிறது. அவர் வியாக்யானம் செய்யாத பாக்கியுள்ள 66 சுலோகங்களுக்கு வேறு யாரேனும் வியாக்யானம் எழுதி பூர்த்தி செய்வது உசிதமில்லை என்று அப்படியே விடப்பட்டிருக்கிறது. இந்த வியாக்யானத்தையே முக்கிய ஆதாரமாக வைத்துக்கொண்டு விவேக சூடாமணி என்ற கிரந்தத்தின் தாத்பர்யம் இங்கு தமிழில் காட்டப்படுகிறது.]

## 1. குரு வணக்கம்

**(அவதாரிகை)** கிரந்தத்தின் ஆரம்பத்தில் ஆரம்பத்தில் பெரியோர்களின் ஸம்பிரதாயப்படி குரு வணக்கம் செய்யும்போது ஸகுணமாயிருக்கும் ஈசுவரனுக்கும், நிர்குணமாயிருக்கும் பரபிரஹ்மத்திற்கும் குரு வேறுபட்டவரல்லர் என்பதையும், அவரை வணங்கி அவருடைய பிரஸாதத்திஞல் உபநிஷத் பிரதிபாத்யமான ஆத்ம தத்வம் விளங்கி பரம புருஷார்த்தமான மோக்ஷம் கிட்டும் என்பதையும் முதல் சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் துலக்குகிருர்: -

**सर्ववेदान्तसिद्धान्तगोचरं तमगोचरम् ।**
**गोविन्दं परमानन्दं सद्गुरुं प्रणतोऽस्म्यहम् ॥ १ ॥**

**ஸர்வவேதா³ந்தஸித்³தா⁴ந்தகோ³சரம் தமகோ³சரம் ।**
**கோ³விந்த³ம் பரமானந்த³ம் ஸத்³கு³ரும் ப்ரணதோ(அ)ஸ்ம்யஹம் ॥ 1 ॥**

| | | |
|---|---|---|
| **सर्व-वेदान्त-सिद्धान्त गोचरं** ஸர்வ-வேதா³ந்த-ஸித்³தா⁴ந்த கோ³சரம் | = | எல்லா வேதங்களின் கடைசி பாகங்களாகிய உபநிஷத்துக்களில்-தீர்மானிக்கப்பட்டிருக்கிற ஸித்தாந்தத்திஞலேயே அறியக்கூடியவராயும், |
| **अगोचरं** அகோ³சரம் | = | (மற்ற எந்த பிரமாணத்திஞலும்) அறிய முடியாதவராயும், |
| **परम-आनन्दं** பரம-ஆனந்த³ம் | = | மேலான ஆனந்த ஸ்வரூபியாயும், |
| **सद्गुरुं** ஸத்³கு³ரும் | = | ஸத்பதார்த்தமாகிய பிரஹ்மமாயும் குருவாகவும் இருக்கும், |
| **तं** தம் | = | அந்த பிரஸித்தரான, |
| **गोविन्दं** கோ³விந்த³ம் | = | வேதவாக்கியத்திஞலேயே அடையத்தக்க பரமாத்மாவை (கோவிந்த பகவத் பாதாசார்யாரை), |
| **अहं** அஹம் | = | நான், |
| **प्रणतोऽस्मि** ப்ரணதோ(அ)ஸ்மி | = | நமஸ்காரம் செய்கிறேன். |

## 2. மனிதப்பிறவி அரிது

**(அவதாரிகை)** இந்த கிரந்தத்தில் பிரதிபாதிக்கப்போகும் எல்லா விஷயங்களையும் ஸங்கிரஹித்து அடுத்த சுலோகத்தில் காட்டுகிருர்: -

**जन्तूनां नरजन्म दुर्लभमतः पुंस्त्वं ततो विप्रता**
**तस्माद्वैदिकधर्ममार्गपरता विद्वत्त्वमस्मात्परम् ।**
**आत्मानात्मविवेचनं स्वनुभवो ब्रह्मात्मना संस्थितिः**
**मुक्तिर्नो शतकोटिजन्मसु कृतैःपुण्यैर्विना लभ्यते ॥ २ ॥**

**ஜந்தூனும் நரஜன்ம து³ர்லப⁴மத꞉ பும்ஸ்த்வம் ததோ விப்ரதா**
**தஸ்மாத்³வைதி³கத⁴ர்மமார்க³பரதா வித்³வத்த்வமஸ்மாத்பரம் ।**
**ஆத்மானத்மவிவேசனம் ஸ்வனுப⁴வோ ப்³ரஹ்மாத்மன ஸம்ஸ்தி²தி꞉**
**முக்திர்னே ஶதகோடிஜன்மஸு க்ருதை꞉ புண்யைர்வின லப்⁴யதே ॥ 2 ॥**

| | | |
|---|---|---|
| **जन्तूनां** **ஜந்தூனும்** | = | பிறவியுள்ளவர்களுக்கு, |
| **नर-जन्म** **நரஜன்ம** | = | மனிதப்பிறவி, |
| **दुर्लभं** **து³ர்லப⁴ம்** | = | சிரமப்பட்டு அடையத்தக்கது, |
| **अतः** **அத꞉** | = | அதையும் விட (அதில்), |
| **पुंस्त्वं** **பும்ஸ்த்வம்** | = | புருஷனுக இருக்கும் தன்மை, |
| **ततः** **தத꞉** | = | அதையும் விட (அதில்), |
| **विप्रता** **விப்ரதா** | = | பிராஹ்மணனுக இருக்கும் தன்மை (சிரமப்பட்டு அடையத்தக்கது). |
| **तस्मात्** **தஸ்மாத்** | = | ஆகையினுல் (மனிதனுய், புருஷனுய், பிராஹ்மணனுய் பிறவி கிடைப்பது துர்லப மாயிருப்பதால்), |
| **वैदिक धर्म-मार्ग-परता** **வைதி³க த⁴ர்ம-மார்க³-பரதா** | = | வேதத்தினுல் விதிக்கப்பட்டிருக்கிற (வேதத்தினுல் மட்டுமே அறியக் கூடிய) ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி தர்ம - வழியில் - ஈடுபடும் தன்மை - (அவசியம்), |
| **विद्वत्त्वं** **வித்³வத்த்வம்** | = | வித்வானுயிருக்கும் தன்மையும் (அவசியம்), |
| **अस्मात्** **அஸ்மாத்** | = | வித்வானுயிருக்கும் தன்மையை ஸம்பாதித்த தற்கு, |
| **परं** **பரம்** | = | பிறகு, |

| | | |
|---|---|---|
| **आत्म अनात्म-विवेचनं**<br>**ஆத்ம அனுத்ம-விவேசனம்** | = | ஆத்மாவையும் ஆத்மாவல்லாததையும் பிரித்தறிவது (வேண்டும்). |
| **सु-अनुभवः**<br>**ஸு-அனுப⁴வ:** | = | நன்று ஸாக்ஷாத்கார அனுபவம் (ஏற்பட வேண்டும்), |
| **ब्रह्मात्मना**<br>**ப்³ரஹ்மாத்மனு** | = | பிரஹ்ம ஸ்வரூபமாகவே, |
| **संस्थितिः**<br>**ஸம்ஸ்தி²தி:** | = | நன்கு நிலைத்து விடுவதாகிய, |
| **मुक्तिः**<br>**முக்தி:** | = | மோக்ஷநிலை, |
| **शत-कोटि-जन्मसु** | = | நூறு-கோடிக்கணக்கான-ஜன்மக்களில், |
| **कृतैः**<br>**க்ருதை:** | = | செய்யப்பட்ட, |
| **पुण्यैः विना**<br>**புண்யை: வினு** | = | புண்ணியங்களன்னியில், |
| **नो लभ्यते**<br>**நோ லப்⁴யதே** | = | கிடைக்கமாட்டாது. |

ஒரு ஜீவனுக்கு கர்மானுஸாரமாகப் பல ஜன்மாக்கள் ஏற்படக்கூடியதாயிருப்பதாலும், பூர்வஜன்ம புண்ணியம் நன்கு இருந்தால்தான் மனுஷ்ய ஜன்மாவோ, புருஷ ஜன்மாவோ, பிராஹ்மண ஜன்மாவோ, கிடைக்குமென்று ஏற்படுவதாலும் எவ்வித ஜன்மாவும் ஜீவனின் ஸ்வரூபத்தில் சேர்ந்ததில்லை என்பதும், ஜீவனின் ஸ்வரூபம் ஜன்மமற்ற தன்மை என்பதும், இந்த சுலோகத்திலிருந்தே தெளிவாவதினுல் அவ்வித ஜன்மமற்ற தன்மையை உணர்வதற்கு ஜன்மமுள்ளதாகிய சரீராதிகளிலிருந்து தன்னைப் பிரித்துப் பார்த்து அந்நிலையில் நின்றுவிட்டால் ஜீவனே பிரஹ்ம ஸ்வரூபமாய் விளங்குகிறுன் என்ற உபநிஷத் ஸித்தாந்தத்தை இந்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் விளக்கியிருக்கிறுர். அந்நிலையையடைவதற்கு ஸாதனங்களாகிய, சித்த சுத்தியை உண்டுபண்ணக்கூடிய நிஷ்காம கர்மானுஷ்டானத்தையும் நிவிருத்தி தர்மமான ஸந்யாஸத்தையும் “வைதிக தர்ம மார்க்கபரதா" என்ற சப்தத்தினுலும், ஸத்குருவையடைந்து அவர் மூலம் வேதாந்தஸித்தாந்தத்தை நன்கு கேட்டுத் தெரிந்து கொள்வதாகிய சிரவணத்தை “வித்வத்துவம்" என்ற பதத்திலுைம், கேட்டறிந்த விஷயத்தில் ஏற்படக்கூடிய ஸந்தேகங்களைப் போக்கித் தீர்மானம் செய்வதாகிய மனனத்தை "விவேசனம்" என்ற வார்த்தையினுலும், அவ்விதம் ஸந்தேஹமறத் தெரிந்திருப்பதை நேரில் ஸாக்ஷாத்காரம் செய்வதாகிய நிதித்யாஸனத்தை "ஸ்வனுபவம்” என்ற வார்த்தையினுலும் காட்டிவிட்டு கடைசியாய் ஏற்படக்கூடிய பிரஹ்ம நிஷ்டையே மோக்ஷ நிலையென்று சொல்கிறுர். இங்கு ‘ஸ்வநுபவ:’ என்பது வரை ‘சுபேச்சா, விசாரணு, தநுமாநஸா, ஸத்வாபத்தி' என்ற நான்கு ஞான பூமிகைகளும் 'ப்ரஹ்மாத்மநா ஸம்ஸ்திதி:' என்பதால் அஸம்ஸக்தி, பதார்த்தாபாவனு, துர்யகா' என்ற மூன்று பூமிகைகளும் காட்டப்பட்டுள்ளன. இதிலிருந்து ஸாமான்ய

மாய் உபாஸனையால் ஏற்படக்கூடிய ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என்று சொல்லப்படும் "முக்தி" கள் வாஸ்தவமாக பரம புருஷார்த்தமாகிய மோக்ஷம் ஆகாது என்பதையும் துலக்குகிறார். இந்த சுலோகத்தில் வைதிக தர்மங்களை மார்க்கமாக (வழியாக) கூறியதால் அவை முக்திக்கு பரம்பராஸாதனமே தவிற நேர் ஸாதனமல்ல என்பது தெரிகிறது. (2)

**(அவதாரிகை)** மனுஷ்ய ஜன்மாவை யடைந்து அதை வீண் போக்காமல் நன்கு உபயோகித்து ஆத்மஞானத்தை ஸம்பாதித்து முக்தியடையப் பிரயத்தினம் செய்யவேண்டியதே அவன் கடமை என்பதை மேலால் வற்புறுத்துகிறார்: -

**दुर्लभं त्रयमेवैतत् दैवानुग्रह हेतु कम् ।**
**मनुष्यत्वं मुमुक्षुत्वं महापुरुषसंश्रय: ॥ ३ ॥**

**து³ர்லப⁴ம் த்ரயமேவைதத்³ தை³வானுக்³ரஹ ஹேது கம் ।**
**மனுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷஸம்ஶ்ரய꞉ ॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **मनुष्यत्वं** **மனுஷ்யத்வம்** | = | மனிதத்தன்மை, |
| **मुमुक्षुत्वं** **முமுக்ஷுத்வம்** | = | மோக்ஷத்தில் தீவ்ர இச்சையுள்ளவனாயிருத்தல், |
| **महापुरुषसंश्रय:** **மஹாபுருஷஸம்ஶ்ரய꞉** | = | பெரியோர்களை ஆசிரயிப்பது ஆகிய, |
| **एतत्** **ஏதத்** | = | இந்த, |
| **त्रयं** **த்ரயம்** | = | மூன்றும், |
| **दुर्लभं एव** **து³ர்லப⁴ம் ஏவ** | = | வெகு சிரமப்பட்டுத்தான் கிடைக்கக்கூடியது, |
| **दैवानुग्रह हेतु कम्** **தை³வானுக்³ரஹ ஹேது கம்** | = | தைவத்தின் (கடவுள் அல்லது பூர்வ புண்ணியம்) அனுக்ரஹமென்ற காரணம் இருந்தால் தான் கிடைக்கும். (3) |

**लब्ध्वा कथंचित् नरजन्म दुर्लभं**
**तत्रापि पुंस्त्वं श्रुतिपारदर्शनम् ।**
**य: स्वात्ममुक्त्यै न यतेत मूढधी:**
**स आत्मा स्वं विनिहन्त्यसद्ग्रहात् ॥ ४ ॥**

**லப்³த்⁴வா கத²ஞ்சித் நரஜன்ம து³ர்லப⁴ம்**
**தத்ராபி பும்ஸ்த்வம் ஶ்ருதிபாரத³ர்ஶனம் ।**
**ய: ஸ்வாத்மமுக்த்யை ந யதேத மூட⁴தீ⁴:**
**ஸ ஆத்மா ஸ்வம் விநிஹந்த்யஸத்³க்³ரஹாத் ॥ 4 ॥**

| | | |
|---|---|---|
| **कथंचित्** | = | எப்படியோ சிரமப்பட்டு, |
| **கத²ஞ்சித்** | | |
| **दुर्लभं** | = | கிடைப்பதற்தரியதான, |
| **து³ர்லப⁴ம்** | | |
| **नर-जन्म** | = | மனிதப்பிறவியையும், |
| **நரஜன்ம** | | |
| **तत्रापि** | = | அதிலும், |
| **தத்ராபி** | | |
| **पुंस्त्वं** | = | புருஷத்தன்மையையும், |
| **பும்ஸ்த்வம்** | | |
| **श्रुति-पार-दर्शनम्** | = | வேதங்களின் கரையைக் காண்பதையும், |
| **ஶ்ருதிபாரத³ர்ஶனம்** | | |
| **लब्ध्वा** | = | அடைந்து விட்டு, |
| **லப்³த்⁴வா** | | |
| **यः** | = | எவனொருவன், |
| **ய:** | | |
| **मूढधीः** | = | மோஹத்தை யடைந்த புத்தியுள்ளவனா யிருந்துகொண்டு, |
| **மூட⁴தீ⁴:** | | |
| **स्वं आत्म-मुक्त्यै** | = | தன்னுடைய ஆத்மாவின் விடுதலைக்காக, |
| **ஸ்வம் ஆத்ம-முக்த்யை** | | |
| **न यतेत** | = | பிரயத்தினம் செய்வதில்லையோ, |
| **ந யதேத** | | |
| **सः** | = | அவன், |
| **ஸ:** | | |
| **आत्महा** | = | ஆத்ம ஹத்தி செய்தவனாக ஆகிறான். |
| **ஆத்மஹா** | | |
| **स्वं** | = | தன்னை, |
| **ஆத்மஹா** | | |
| **असद्-ग्रहात्** | = | அஸத்தாக (வாஸ்தவத் தன்மையை விட்டு வேறுவிதமாக) எண்ணிக்கொண்டிருப்பதால், |
| **அஸத்³-க்³ரஹாத்** | | |
| **विनिहन्ति** | = | நன்கு கொன்றேவிடுகிறான். **(4)** |
| **விநிஹந்தி** | | |

**इतः को न्वस्ति मूढात्मा यस्तु स्वार्थे प्रमाद्यति ।**
**दुर्लभं मानुषं देहं प्राप्य तत्रापि पौरुषम् ॥ ५ ॥**

**இத: கோ ந்வஸ்தி மூடா⁴த்மா யஸ்து ஸ்வார்தே² ப்ரமாத்³யதி ।**
**து³ர்லப⁴ம் மானுஷம் தே³ஹம் ப்ராப்ய தத்ராபி பௌருஷம் ॥ 5 ॥**

| | | |
|---|---|---|
| **दुर्लभं** **து³ர்லப⁴ம்** | = | அடைவதற்கரிய, |
| **मानुषं देहं** **மானுஷம் தே³ஹம்** | = | மனித சரீரத்தையும், |
| **तत्र अपि** **தத்ர அபி** | = | அதிலும், |
| **पौरुषं** **பௌருஷம்** | = | புருஷத்தன்மையையும், |
| **प्राप्य** **ப்ராப்ய** | = | அடைந்துவிட்டு, |
| **यः तु** **ய: து** | = | எவன், |
| **स्वार्थे** **ஸ்வார்தே²** | = | தன் விஷயத்திலேயே, |
| **प्रमाद्यति** **ப்ரமாத்³யதி** | = | தவறுகிறனோ, |
| **इतः** **இத:** | = | இவனை விட, |
| **मूढात्मा** **மூடா⁴த்மா** | = | முட்டாளாக, |
| **कः** **க:** | = | யாரேனும், |
| **अस्ति** **அஸ்தி** | = | இருக்க முடியுமா? (5) |

## 3. ஞானமே முக்திக்கு ஸாதனம்

**(அவதாரிகை)** சிரவண மனனுதி ஸாதனங்களினுல் தான் முக்தியடைய வேண்டுமா? வைதிக கர்மானுஷ்டானத்தினுலாவது தேவதைகளை உபாஸிப்பதினு லாவது முக்தியடைய முடியாதா? என்று கேட்டால், தன் ஆத்மஸ்வரூபம் தெரியாம லிருப்பதே பந்தத்திற்குக் காரணமாயிருப்பதினுல், அத்தெரியாத் தன்மையைப் போக் கடித்து ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்து முக்தி பெறுவதற்கு ஞானம் ஒன்றுதான் ஸாதனமாகும், வேறு எதுவும் ஸாதனமாகாது என்பதைச் சொல்லுகிறர்: -

पठन्तु शास्त्राणि यजन्तु देवान्
कुर्वन्तु कर्माणि भजन्तु देवताः ।
आत्मैक्यबोधेन विना विमुक्तिः
न सिध्यति ब्रह्मशतान्तरेऽपि ॥ ६ ॥

பட²ந்து ஶாஸ்த்ராணி யஜந்து தே³வான்
குர்வந்து கர்மாணி ப⁴ஜந்து தே³வதா꞉ ।
ஆத்மைக்யபோ³தே⁴ன விநா விமுக்தி꞉
ந ஸித்⁴யதி ப்³ரஹ்மஶதாந்தரே(அ)பி ॥ 6 ॥

| | | |
|---|---|---|
| शास्त्राणि<br>ஶாஸ்த்ராணி | = | சாஸ்திரங்களை, |
| पठन्तु<br>பட²ந்து | = | படிக்கட்டும், |
| देवान्<br>தே³வான் | = | தேவர்களை யுத்தேசித்து, |
| यजन्तु<br>யஜந்து | = | யாகங்கள் செய்யட்டும், |
| कर्माणि<br>கர்மாணி | = | கர்மாக்களை, |
| कुर्वन्तु<br>குர்வந்து | = | அனுஷ்டிக்கட்டும், |
| देवताः<br>தே³வதா꞉ | = | தேவதைகளை, |
| भजन्तु<br>ப⁴ஜந்து | = | உபாஸிக்கட்டும். (என்ன செய்தாலும்), |
| आत्मैक्यबोधेन विना<br>ஆத்மைக்யபோ³தே⁴ன விநா | = | ஆத்மா ஒருவரேதான் என்ற அறிவைத் தவிர்த்து, |
| विमुक्तिः<br>விமுக்தி꞉ | = | மோக்ஷமானது, |
| ब्रह्म-शत-अन्तरे अपि<br>ப்³ரஹ்ம-ஶத-அந்தரே அபி | = | பிரஹ்ம கல்பங்கள் நூறு சென்றாலும் கூட, |
| न सिध्यति<br>ந ஸித்⁴யதி | = | ஏற்படமாட்டாது. |

(6)

**(அவதாரிகை)** மோக்ஷநிலை என்பது ஆத்மாவின் ஸ்வபாவ நிலையாயிருப் பதால் அது எவ்வித கர்மாவினாலேயும் உண்டுபண்ணக் கூடியதில்லை, என்பதை வேதமே சொல்கிற தென்பதைக் காட்டுகிறார்: -

**अमृतत्वस्य नाशास्ति वित्तनेत्येव हि श्रुतिः ।**
**ब्रवीति कर्मणो मुक्तेः अहेतुत्वं स्फुटं यतः ॥ ७ ॥**

**அம்ருதத்வஸ்ய நாஶாஸ்தி வித்தனேத்யேவ ஹி ஶ்ருதி: ।**
**ப்³ரவீதி கர்மணோ முக்தே: அஹேதுத்வம் ஸ்பு²டம் யத: ॥ 7 ॥**

| | | |
|---|---|---|
| **वित्तेन** வித்தேன | = | வித்தத்தினால் (வித்த ஸாத்யமான கர்மாவினால்); |
| **अमृतत्वस्य** அம்ருதத்வஸ்ய | = | மரணமில்லாத் தன்மையை அடைவதற்கு, |
| **न आशा अस्ति** ந ஆஶா அஸ்தி | = | ஆசையே வேண்டாம், |
| **इति एव** இதி ஏவ | = | என்றே, |
| **श्रुतिः** ஶ்ருதி: | = | வேதமானது, |
| **कर्मण:** கர்மண: | = | கர்மாவிற்கு, |
| **मुक्तेः** முக்தே: | = | முக்தியின், |
| **अहेतुत्वं** அஹேதுத்வம் | = | காரணமாயிருக்கும் தன்மையில்லையென்று, |
| **स्फुटं** ஸ்பு²டம் | = | தெளிவாக, |
| **यतः** யத: | = | எதனால், |
| **ब्रवीति हि** ப்³ரவீதி ஹி | = | சொல்கிறதோ. (ஆகையால் முக்திக்கு ஞானம் தவிற வேறு ஸாதனம் கிடையாது) |

யாஜ்ஞவல்க்ய மஹர்ஷி ஸன்னியாஸம் வாங்கிக் கொள்ள நினைத்து தன் சொத்துக்களை தன் இரண்டு பார்யைகளாகிய மைத்ரேயிக்கும் காத்யாயனிக்கும் பிரித்துக்கொடுப்பதாகச் சொன்னபோது, மைத்ரேயி அந்த சொத்து இருந்தால் மரணமற்றிருக்கும் தன்மை கிடைக்குமாவென்று கேட்க, கிடை க்கவே கிடைக்காது என்று சொல்கிறார். பிருஹதாரண்யக உபநிஷத் II 4 (2) IV - 5 (3); சொத்தினால் கிடைக் கக்கூடிய என்றும் ஐஹிக ஸௌகர்யங்களுக்குமேல் ஏற்படாது சொல்கிறார். அவர்

சாசுவதமான ஸுகத்தை உத்தேசித்து சொத்துக்களை தியாகம் செய்து ஸன்யாஸத்தில் நோக்கமாயிருந்ததால் மோக்ஷத்திற்கு வித்தம் ஸாதனமில்லையென்பதுடன் இடைஞ்சல் என்பதும் தெரிகிறது. மோக்ஷத்திற்கு ஸாதனம் சிரவண மனனுதி மூலமாய் ஆத்ம ஸாக்ஷாத்காரம் தான் என்பதும் அங்கு காட்டப்பட்டிருக்கிறது. **(7)**

**(அவதாரிகை)** விவேகியாயுள்ளவன் நித்யமானஸுகத்தை யபேக்ஷித்தால் அநித்ய ஸுக ஸாதனமான எப்பதார்த்தத்திலும் ஆசையைத் துறந்து ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்திருக்கும் ஒரு குருவையண்டி அவருடைய அனுக்ரஹத்திற்குப் பாத்திரமாகி அவருடைய உபதேசத்தைக் கேட்டு அவர் காட்டும் வழியில் பிரவிருத்தித்து ஞானத்தை ஸம்பாதித்தால்தான் மோக்ஷம் உண்டென்பதை சுருக்கமாக அடுத்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் காட்டுகிறுர்: -

**अतो विमुक्त्यै प्रयतेत विद्वान् सन्न्यस्तबाह्यार्थसुखस्पृहःसन् ।**
**सन्तं महान्तं समुपेत्य देशिकं तेनोपदिष्टार्थसमाहितात्मा ॥ ८ ॥**

**அதோ விமுக்த்யை ப்ரயதேத வித்³வான்**
**ஸன்ன்யஸ்தபா³ஹ்யார்த²ஸுக²ஸ்ப்ருஹ: ஸன் ।**
**ஸந்தம் மஹாந்தம் ஸமுபேத்ய தே³ஶிகம்**
**தேனோபதி³ஷ்டார்த²ஸமாஹிதாத்மா ॥ 8 ॥**

| | | |
|---|---|---|
| **अतो** அதோ | = | ஆகையினுல், |
| **विद्वान्** வித்³வான் | = | விவேகியானவன், |
| **सन्तं-बाह्य-अर्थ-सुख-स्पृहःसन्** ஸந்தம்-பா³ஹ்ய-அர்த²-ஸுக²-ஸ்ப்ருஹ:ஸன் | = | வெளியிலுள்ளவிஷயங்களிலிருந்து கிடைக்கக் கூடிய - ஸுகத்தில் ஆசையை நன்கு விட்டு விட்டவனுக - இருந்துகொண்டு, |
| **सन्तं** ஸந்தம் | = | பிரஹ்ம நிலையை அடைந்தவராயுள்ள, |
| **देशिकं** தே³ஶிகம் | = | உபதேசம் செய்யக்கூடிய குருவாகிய, |
| **महान्तं** மஹாந்தம் | = | பெரியோரை, |
| **समुपेत्य** ஸமுபேத்ய | = | நன்கு (விநயத்துடன் விதிப்படி) நெருங்கி, |
| **तेन** தேன | = | அவரால், |

| | | |
|---|---|---|
| **उपदिष्ट-अर्थ-समाहित आत्मा** **உபதி³ஷ்ட-அர்த²-ஸமாஹித ஆத்மா** | = | உபதேசம் செய்யப்பட்ட விஷயத்திலேயே - நிலைக்கச்செய்த - மனஸுடன் இருந்து கொண்டு, |
| **विमुक्त्यै** **விமுக்த்யை** | = | மோக்ஷத்தின்பொருட்டு, |
| **प्रयतेत** **ப்ரயதேத** | = | நன்கு பிரயத்தினம் செய்யவேண்டும். |

இந்த சுலோகத்தில் 'வித்வான்' என்பதால் நித்யா நித்யவஸ்து விவேகமும், 'ஸந்யஸ்த... ஸ்ப்ருஹ:' என்பதால் வைராக்யமும் சமாதி ஸம்பத்தும் 'விமுக்த்யை ப்ரயதேத' என்பதால் முமுக்ஷுத்வமும் குறிப்பிடப்பட்டுள்ளன. **(8)**

**(அவதாரிகை)** முன் சுலோகத்தில் காணப்படும் ஒவ்வொரு அம்சத்தையும் எடுத்துக்கொண்டு பின்வரும் ஏழு சுலோகங்களில் விஸ்தரிக்கிறார். முதலில் அவ்விதம் செய்யவேண்டிய பிரயத்தினத்தின் ஸ்வரூபத்தையும் அதனால் அடையக் கூடிய பலனையும் சொல்கிறார்: -

**उद्धरेदात्मनाऽऽत्मानं मग्नं संसारवारिधौ ।**
**योगारूढत्वमासाद्य सम्यग्दर्शननिष्ठया ॥ ९ ॥**

**உத்³த⁴ரேதா³த்மனா(ஆ)த்மானம் மக்³னம் ஸம்ஸாரவாரிதௌ⁴ ।**
**யோகா³ரூட⁴த்வமாஸாத்³ய ஸம்யக்³த³ர்ஶனநிஷ்ட²யா ॥ 9 ॥**

| | | |
|---|---|---|
| **सम्यग्दर्शन-निष्ठया** **ஸம்யக்³த³ர்ஶன-நிஷ்ட²யா** | = | நல்ல - அறிவில் - நிலைத்திருப்பது மூலமாய், |
| **योग आरूढत्वं** **யோக³ ஆரூட⁴த்வம்** | = | யோகம் (உபாயம்) என்ற படிகளையெல்லாம் ஏறிவிட்ட தன்மையை, |
| **आसाद्य** **ஆஸாத்³ய** | = | அடைந்து, |
| **संसारवारिधौ** **ஸம்ஸாரவாரிதௌ⁴** | = | ஸம்ஸாரமாகிற பிறவிக் கடலில், |
| **मग्नं** **மக்³னம்** | = | மூழ்கிக் கிடக்கிற, |
| **आत्मानं** **ஆத்மானம்** | = | தன்னை (மனஸுடன் கலந்து ஸுக துக்கங்களையனுபவிக்கும் தன்னை), |
| **आत्मना** **ஆத்மனா** | = | தன்னாலேயே (சாஸ்திராசார்ய உபதேசத்தால் தெளிவடைந்த புத்தியினால்), |
| **उद्धरेत्** **உத்³த⁴ரேத்** | = | மேல் தூக்கி விடவேண்டும். |

இங்கு **सम्यग्दर्शनं ஸம்யக்³த³ர்ஶனம்** என்பது முக்திக்கு நேர் ஸாதனமான ஆத்மஞானம். **योगारूढत्वं யோகா³ரூட⁴த்வம்** என்பது ஞான ஸாதனமான பரவைராக்யம். அநாத்மாவான சரீராதிகளில் ஆத்மாபிமானம் தான் ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கியிருப்பது. ஆத்மாவின் உபாதியான அவிவேகியான மனதை விவேகமுள்ள மனதால் அநாத்மாக்களிலிருந்து திருப்பி ஆத்மாபிமுகமாகச் செய்து விட்டால் ஆத்மாவைக் கைதூக்கி விட்டதுபோலாகும். **(9)**

(**அவதாரிகை**) இந்த ப்ரயத்னம் கைகூடவேண்டுமானுல் வேறு எவ்வித ப்ரயத்னத்தையும் விட்டுவிட வேண்டும் என்பதைக் குறிப்பிடுகிறுர்: -

**संन्यस्य सर्वकर्माणि भवबन्धविमुक्तये ।**
**यत्यतां पण्डितैर्धीरैरात्माभ्यास उपस्थितैः ॥ १० ॥**

**ஸம்ந்யஸ்ய ஸர்வகர்மாணி ப⁴வப³ந்த⁴விமுக்தயே ।**
**யத்யதாம் பண்டி³தைர்தீ⁴ரைராத்மாப்⁴யாஸ உபஸ்தி²தைঃ ॥ 10 ॥**

**आत्माभ्यास** = ஆத்ம விஷயமான அப்பியாஸத்தில்,
**ஆத்மாப்⁴யாஸ**
**उपस्थितैः** = இறங்கும்,
**உபஸ்தி²தைঃ**
**धीरैः** = மனதை ஜயித்த,
**தீ⁴ரைঃ**
**पण्डितैः** = பரோக்ஷ ஞானமுள்ளவர்களால்,
**பண்டி³தைঃ**
**भवबन्धविमुक्तये** = ஸம்ஸாரமாகிற கட்டிலிருந்து விடுதலையடைவதற்காக (ஞான நிஷ்டையடைவதற்காக),
**ப⁴வப³ந்த⁴விமுக்தயே**
**सर्व कर्माणि** = எல்லா - கர்மாக்களையும்,
**ஸர்வ கர்மாணி**
**संन्यस्य** = நன்கு - தள்ளிவிட்டு,
**ஸம்ந்யஸ்ய**
**यत्यतां** = பிரயத்னம் செய்யப்படட்டும்.
**யத்யதாம்** **(10)**

(**அவதாரிகை**) கர்மா எந்தமட்டில் பிரயோஜனப்படும், ஏன் அது ஞானத்திற்கு ஸாக்ஷாத் ஸாதனமாகாது என்பதை மூன்று சுலோகங்களால் விளக்குகிறுர்: -

**चितस्य शुद्धये कर्म, न तु वस्तूपलब्धये ।**
**वस्तुसिद्धिर्विचारेण न किंचित् कर्मकोटिभिः ॥ ११ ॥**

**சிதஸ்ய ஶுத்³த⁴யே கர்ம, ந து வஸ்தூபலப்³த⁴யே ।
வஸ்துஸித்³தி⁴ர்விசாரேண ந கிஞ்சித் கர்மகோடிபி⁴: ॥ 11 ॥**

| | | |
|---|---|---|
| **कर्म** **கர்ம** | = | கர்மா என்பது, |
| **चितस्य** **சிதஸ்ய** | = | மனதின், |
| **शुद्धये** **ஶுத்³த⁴யே** | = | சுத்தியின் பொருட்டு (தான்உபயோகம்), |
| **वस्तू-उपलब्धये** **வஸ்தூ-உபலப்³த⁴யே** | = | உள்ள வஸ்துவை - அறிவதற்கு, |
| **न तु** **ந து** | = | பிரயோஜனப்படாது, |
| **वस्तुसिद्धि:** **வஸ்துஸித்³தி⁴:** | = | வஸ்துவின் அறிவு ஏற்படுவது, |
| **विचारेण** **விசாரேண** | = | நன்கு செய்யப்படும் விசாரத்திஞல் (தானே யொழிய) |
| **न किंचित् कर्मकोटिभि:** **ந கிஞ்சித் கர்மகோடிபி⁴:** | = | கோடிக்கணக்கான கர்மாக்கஊச் செய்தாலும் சிறிதும் ஏற்படாது. |

முதலில் பற்றில்லாமல் கர்மாக்கஊச் செய்து அதஞல் மனதிலுள்ள தோஷங்களெல்லாம் விலகிப் பரிசுத்தமாய் ஞானமடைவதில் தீவ்ரமான ஆவலுண்டானதும் கர்மாக்கஊ விட்டுவிட்டு ப்ரஹ்மவிசாரம் செய்யவேண்டும். **(11)**

**सम्यग्विचारत: सिद्धा रज्जुतत्त्वावधारणा ।
भ्रान्त्योदितमहासर्पभवदु:खविनाशिनी ॥ १२ ॥**

**ஸம்யக்³விசாரத: ஸித்³தா⁴ ரஜ்ஜுதத்த்வாவதா⁴ரணா ।
ப்⁴ராந்த்யோதி³தமஹாஸர்பப⁴வது³:க²விநாஶினீ ॥ 12 ॥**

| | | |
|---|---|---|
| **भ्रान्त्या** **ப்⁴ராந்த்யா** | = | பிராந்தியிஞல், |
| **उदित** **உதி³த** | = | உண்டான, |
| **महासर्प** **மஹாஸர்ப** | = | பெரிய பாம்பிஞல், |
| **भव** **ப⁴வ** | = | ஏற்படும், |

दुःख = துக்கத்தை,
து³:க²

विनाशिनी = நன்கு போக்கடிக்கக்கூடியதான,
விநாஶினீ

रज्जु = கயிற்றின்,
ரஜ்ஜு

तत्त्व = உண்மைத் தன்மையை,
தத்த்வ

अवधारणा = தீர்மானமாய் அறிவதானது,
அவதா⁴ரணா

सम्यक् = நன்றாய்,
ஸம்யக்

विचारतः = விசாரம் செய்வதனால் (தான்),
விசாரத:

सिद्धा = ஏற்படுகிறது.
ஸித்³தா⁴

இதுபோல் ப்ராந்தியால் ஏற்பட்ட பிறவி மரண துக்கத்தைப் போக்கும் ஆத்ம தத்வ ஞானம் நன்கு விசாரம் செய்வதால் தான் ஏற்படும். **(12)**

## अर्थस्य निश्चयो दृष्टो विचारेण हितोक्तितः ।
## न स्नानेन न दानेन प्राणायामशतेन वा ॥ १३ ॥

**அர்த²ஸ்ய நிஶ்சயோ த்³ருஷ்டோ விசாரேண ஹிதோக்தித: ।**
**ந ஸ்நானேன ந தா³னேன ப்ராணாயாமஶதேன வா ॥ 13 ॥**

अर्थस्य = ஒரு பதார்த்தத்தைப்பற்றின,
அர்த²ஸ்ய

निश्चयः = தீர்மானமான அறிவு,
நிஶ்சய:

हित उक्तितः = (அறிந்து சொல்லும்) ஆப்தனுடைய
ஹித உக்தித: சொல்லின்பேரில் (செய்யப்படும்),

विचारेण = விசாரணையினால் (ஏற்படுவது),
விசாரேண

दृष्टः = பார்க்கப்பட்டிருக்கிறது,
த்³ருஷ்ட:

स्नानेन = ஸ்நானம் செய்வதினால்,
ஸ்நானேன

| | | |
|---|---|---|
| न<br>ந | = | ஏற்படாது, |
| दानेन<br>தா³னேன | = | தானம் செய்வதினுல், |
| न<br>ந | = | ஏற்படாது, |
| प्राणायामशतेन वा<br>ப்ராணுயாமஶதேன வா | = | நூறு பிராணுயாமங்கள் செய்தாலும் ஏற்படாது. |

ஆப்தர்களான வேதாந்தம், ஆசார்யன் இவர்களின் உபதேசம் மூலம் ஆத்ம விசாரம் செய்பவனுக்குத்தான் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும். **(13)**

(**அவதாரிகை**) அவ்விதம் விசாரம் செய்யவும், அவ்விசாரம் வாஸ்தவமான பிரயோஜனத்தைக் கொடுப்பதற்கும் விசாரம் செய்கிறவனிடம் ஏற்கனவே சில யோக்கியதைகள் இருக்க வேண்டும். அவ்வித யோக்கியதைகள் இல்லாத விஷயத்தில் விசாரமும் சரிவர நடக்காது. அது பலனையும் கொடுக்காது. அவ்வித யோக்கியதையுள்ளவரை 'அதிகாரி' என்பார்கள். அவருக்கு தேசம், காலம், நிமித்தம் முதலியவை பக்கபலமாய் இருந்து உதவும். தேசம் முதலியவை மாத்திரம் இருந்து யோக்கியதையில்லாத விஷயத்தில் அவை எவ்விதத்திலும் உபயோகப்படக்கூடிய தில்லை. ஆகையால் யோக்கியதையை ஸம்பாதிக்க வேண்டியது மிகவும் அவசிய மென்பதை ஸ்ரீமத் ஆசார்யார் வற்புறுத்திவிட்டு அந்த யோக்கியதையில் என்ன அம்சங்களெல்லாம் சேர்ந்தது என்பதை எடுத்துச் சொல்கிறுர்: -

**अधिकारिणमाशास्ते फलसिद्धिर्विशेषतः ।**
**उपायाः देशकालाद्याः सन्त्यस्यां सहकारिणः ॥ १४ ॥**

**அதி⁴காரிணமாஶாஸ்தே ப²லஸித்³தி⁴ர்விஶேஷத: ।**
**உபாயா: தே³ஶகாலாத்³யா: ஸந்த்யஸ்யாம் ஸஹகாரிண: ॥ 14 ॥**

| | | |
|---|---|---|
| फलसिद्धिः<br>ப²லஸித்³தி⁴: | = | பயன் ஏற்படுவதானது, |
| विशेषतः<br>விஶேஷத: | = | முக்யமாக, |
| अधिकारिणं<br>அதி⁴காரிணம் | = | (யோக்கியதையுள்ள) அதிகாரியை, |
| आशास्ते<br>ஆஶாஸ்தே | = | எதிர்பார்க்கிறது, |
| अस्यां<br>அஸ்யாம் | = | பலன் ஏற்படுவதில், |

| | | |
|---|---|---|
| **देशकालाद्या:**<br>**தே³ஶகாலாத்³யா:** | = | தேசம், காலம் முதலிய, |
| **उपाया:**<br>**உபாயா:** | = | உபாயங்கள், |
| **सहकारिण:**<br>**ஸஹகாரிண:** | = | கூடவிருந்து உதவக்கூடியவைகளாக, |
| **सन्ति**<br>**ஸந்தி** | = | இருக்கின்றன. |

உத்தமமாயும் மிகப்பரிசுத்தமாயுமுள்ள பிரஹ்மலோகத்தில் ஸாக்ஷாத் ப்ரஹ்மாவே குருவாயமைந்து உபதேசித்தும்கூட நிர்மலமான மனஸில்லாத அஸுரராஜனுன விரோசனனுக்கு சரியானபடி ஆத்மதத்வஞானம் ஏற்படாததால் தேச காலங்கள் முக்கிய ஸாதனமில்லையென்று தெரிகிறது. **(14)**

**(அவதாரிகை)** ஆரம்பத்திலேயே 3 - வது சுலோகத்தில் குறிப்பிட்டிருக்கும் முமுக்ஷுத்வம், மஹாபுருஷ ஸம்சிரயம் இவை இரண்டும் அவசியம் வேண்டுமென்று காட்டுகிறுர்: -

**अतो विचार: कर्तव्य: जिज्ञासोरात्मवस्तुन: ।**
**समासाद्य दयासिन्धुं गुरुं ब्रह्मविदुत्तमम् ॥ १५ ॥**

**அதோ விசார: கர்தவ்ய: ஜிஜ்ஞாஸோராத்மவஸ்துன: ।**
**ஸமாஸாத்³ய த³யாஸிந்து⁴ம் கு³ரும் ப்³ரஹ்மவிது³த்தமம் ॥ 15 ॥**

| | | |
|---|---|---|
| **अत:**<br>**அத:** | = | ஆகையினால் (வஸ்து ஸ்வரூபம் அறிவதற்கு விசாரமேதான் ஸாதனம் என்றிருப்பதால்), |
| **जिज्ञासो:**<br>**ஜிஜ்ஞாஸோ:** | = | (ஆத்மவிஷயமான) ஞானத்தில் அவாவுள்ளவனுக்கு, |
| **ब्रह्मवित् – उत्तमं**<br>**ப்³ரஹ்மவித் - உத்தமம்** | = | ப்ரஹ்மத்தையறிந்தவர்களில் சிரேஷ்டராகவும், |
| **दया-सिन्धुं**<br>**த³யா-ஸிந்து⁴ம்** | = | கருணைக்கடலாகவும் இருக்கும், |
| **गुरुं**<br>**கு³ரும்** | = | குருவை, |
| **समासाद्य**<br>**ஸமாஸாத்³ய** | = | நன்கு அடைந்து, |
| **आत्म वस्तुन:**<br>**ஆத்ம வஸ்துன:** | = | ஆத்ம வஸ்து விஷயமாக, |

**विचारः** = விசாரம்,

**விசாரঃ**

**कर्तव्यः** = செய்ய வேண்டியது

**கர்தவ்ய:** (15)

## 4. சிஷ்ய லக்ஷணம்

(**அவதாரிகை**) விசாரம் செய்ய நிஜனப்பவன் எப்படி இருக்க வேண்டுமென்று கவனிக்கும்போது குரு உபதேசிப்பதை சரிவர கிரஹிப்பதற்கு வேண்டிய அஸ்திவார மாகிய புத்தி சக்தி, கிரஹிப்பதை சரியானபடி அர்த்தம் செய்துகொள்ள அவசியமான வ்யுத்பத்தி, கிரஹித்ததை மறக்காமல் மனஸில் தரிக்கும் சக்தி, அதைப் பலவிதத் தில் ஆலோசித்து திடப்படுத்திக்கொள்ளக்கூடிய சக்தி முதலியவைகளும் இருக்க வேண்டுமென்று சொல்கிறுர்: -

**मेधावी पुरुषो विद्वान् उहापोहविचक्षणः ।**
**अधिकार्यात्मविद्यायां उम्मलक्षणलक्षितः ॥ १६ ॥**

**மேதா⁴வீ புருஷோ வித்³வான் உஹாபோஹவிசக்ஷணঃ ।**
**அதி⁴கார்யாத்மவித்³யாயாம் உம்மலக்ஷணலக்ஷிதঃ ॥ 16 ॥**

**मेधावी** = (கேட்பதை மறக்காமல் மனஸில் வாங்கி
**மேதா⁴வீ** வைத்துக்கொள்ளும் சக்தியாகிய) மேதை யுள்ளவனுகவும், (காவியம், கோசம், வ்யாகரணம் முதலியவைகஊ) கற்றவனுகவும்,

**विद्वान्** = எப்படிச் சேர்த்துக்கொள்ளவேண்டும் - எப்படி
**வித்³வான்** விட்டுவிட வேண்டும் என்று தெரிந்து செய்வதற்கு ஸாமர்த்தியமுள்ளவனுகவும்,

**उम्म लक्षण लक्षितः** = (8 முதல் 15 வரை யுள்ள சுலோகங்களில்)
**உம்மலக்ஷணலக்ஷிதঃ** சொல்லப்பட்டிருக்கும் லக்ஷணங்களுடன் கூடியவனுகவும் இருக்கிற,

**पुरुषः** = புருஷன்,

**புருஷ:**

**आत्मविद्यायां** = ஆத்மாவை அறிந்துகொள்வதில்,

**ஆத்மவித்³யாயாம்**

**अधिकारी** = அதிகாரமுள்ளவனுவான். (ஆத்மவித்யா பலனுன
**அதி⁴காரீ** மோக்ஷத்தை அனுபவிக்கத் தகுதி யுள்ளவனுகி றுன்.)

இந்த சுலோகத்தில் **'विद्वान्'** '**வித்³வான்**' என்பதால் **'पदं'** '**பத³ம்**' எனும் வ்யாகரண சாஸ்திரத்தையும் **'ऊहापोहबिचण:'** '**ஊஹாபோஹபி³சண:**' என்பதால்

**‘वाक्यं’** ‘**வாக்யம்**’ என்னும் மீமாம்ஸா சாஸ்திரத்தையும் **'प्रमाणं’** ‘**ப்ரமாணம்**’ என்னும் ந்யாய சாஸ்திரத்தையும் அறிந்தவன் என்று காட்டப்பட்டது. பத வாக்ய ப்ரமாணஜ்ஞனாக இருக்கவேண்டும். **(16)**

(**அவதாரிகை**) "முன் சொல்லப்பட்ட லக்ஷணங்கள்” என்பதை விவரித்துத் தெளிவாக அடுத்த சுலோகத்தில் சொல்கிறுர்: -

**विवेकिनो विरक्तस्य शमादिगुणशालिनः ।**
**मुमुक्षोरेव हि ब्रह्मजिज्ञासायोग्यता मता ॥ १७ ॥**

**விவேகினோ விரக்தஸ்ய ஶமாதி³கு³ணஶாலின: ।**
**முமுக்ஷோரேவ ஹி ப்³ரஹ்மஜிஜ்ஞாஸாயோக்³யதா மதா ॥ 17 ॥**

**विवेकिनः** = விவேகமுள்ளவனுய்,
**விவேகின:**
**विरक्तस्य** = விரக்தனுய்,
**விரக்தஸ்ய**
**शमादिगुणशालिनः** = சமம் முதலான குணங்களில் நன்கு
**ஶமாதி³கு³ணஶாலின:** ஈடுபட்டவனுய்,
**मुमुक्षोरेव हि** = மோக்ஷத்தில் அவா உள்ளவனுய்
**முமுக்ஷோரேவ ஹி** இருப்பவனுக்குத் தானேயல்லவா,
**ब्रह्म जिज्ञासायोग्यता** = ப்ரம்மத்தை அறியவேண்டுமென்ற ஆசை யோக்கி
**ப்³ரஹ்ம ஜிஜ்ஞாஸாயோக்³யதா** யதை ஏற்படுவதற்குள்ள (உண்டென்று),
**मता** = கருதப்பட்டிருக்கிறது.
**மதா** **(17)**

(**அவதாரிகை**) இந்த நான்கு லக்ஷணங்களும் இருந்தால்தான் ப்ரஹ்மத்தை அறிய ஆசையும், ப்ரஹ்மத்தில் நிஜலத்திருப்பதும் ஸித்திக்கும். இவை இல்ஜல யாஞல் அவை ஸித்திக்காது என்ற காரணத்திஞல் இந்த நான்கு லக்ஷணங்களுக் கும் ‘ஸாதனங்கள்' என்ற வ்யவஹாரம் ஏற்பட்டிருக்கிறது என்பதைச் சொல்கிறுர்: -

**साधनान्यत्र चत्वारि कथितानि मनीषिभिः ।**
**येषु सत्स्वेव सन्निष्ठा यदभावे न सिध्यति ॥ १८ ॥**

**ஸாத⁴ஞன்யத்ர சத்வாரி கதி²தானி மனீஷிபி⁴: ।**
**யேஷு ஸத்ஸ்வேவ ஸந்நிஷ்டா² யத³பா⁴வே ந ஸித்⁴யதி ॥ 18 ॥**

**येषु** = எவைகள்,
**யேஷு**

**सत्सु एव** = இருந்தால்தான்,
**ஸத்ஸு ஏவ**

**सत् निष्ठा** = ஸத் வஸ்துவான ப்ரம்மத்தில் நிலைத்திருப்பது (ஏற்படுமோ),
**ஸத் நிஷ்டா2**

**यत् अभावे** = எவை இல்லையானால்,
**யத் அபா4வே**

**न सिध्यति** = ஏற்படாதே (அவ்வித),
**ந ஸித்4யதி**

**साधनानि** = ஸாதனங்கள்,
**ஸாத4னானி**

**अत्र** = இவ்விஷயத்தில்,
**அத்ர**

**चत्वारि** = நான்கு,
**சத்வாரி**

**मनीषिभिः** = வேதத்தின் தாத்பர்யம் அறிந்தவர்களால்,
**மனீஷிபி4:**

**कथितानि** = சொல்லப்பட்டிருக்கின்றன.
**கதி2தானி** **(18)**

(**அவதாரிகை**) அவை நான்கையும் சொல்வதுட அவைகளில் முன்னால் சொன்னது பின்னால் சொல்லப்படுவதற்கு காரணமாயிருக்கும் தன்மையுடையதான தினால் அவைகளில் காணப்படும் வரிசைக்கும் தாத்பர்யம் உண்டென்பதை ஸூசிக்கிறார்: -

**आदौ नित्यानित्यवस्तुविवेकः परिगण्यते ।**
**इहामुत्रफलभोगविरागः तदनन्तरम् ।**
**शमादिषट्कसंपत्तिः मुमुक्षुत्वं इति स्फुटम् ॥ १९ ॥**

**ஆதௌ3 நித்யாநித்யவஸ்துவிவேக: பரிக3ண்யதே ।**
**இஹாமுத்ரப2லபோ4க3விராக3: தத3னந்தரம் ।**
**ஶமாதி3ஷட்கஸம்பத்தி: முமுக்ஷுத்வம் இதி ஸ்பு2டம் ॥ 19 ॥**

**आदौ** = முதலில்,
**ஆதௌ3**

**नित्य अनित्य वस्तु-विवेकः** = நித்யமான வஸ்து, அநித்யமான வஸ்து,
**நித்ய அநித்ய வஸ்து-விவேக:** இவைகளைப் பிரித்து அறிதல்,

**परिगण्यते** = கணக்கிடப்படுகிறது,
**பரிக3ண்யதே**

**तत् अनन्तरं** = அதற்கு அடுத்ததாக,

**தத் அனந்தரம்**

**इह-अमुत्र फल-भोग-विरागः** = இம்மையிலும் மறுமையிலும் (ஏற்படக்கூடிய

**இஹ-அமுத்ர ப²ல-போ⁴க³-விராக³:** கர்ம) பலனுகிய போகங்களில் ஆசையற்றி ருத்தல், (அதற்குமேல்)

**शमादि षट्क संपत्तिः** = சமம் முதலிய ஆறை ஸம்பாதித்தல்,

**ஶமாதி³ ஷட்க ஸம்பத்தி:** (அதன் பலனுக),

**मुमुक्षुत्वं** = மோக்ஷத்தில் அவாவுள்ள தன்மை,

**முமுக்ஷுத்வம்**

**इति स्फुटम्** = என்று தெளிவு.

**இதி ஸ்பு²டம்**

இது உண்மை, இது பொய் என்று பிரித்து அறிந்தவனுக்குத்தான் பொய்யான பொருளில் வைராக்யம் ஏற்படும். ஆகவே விவேகம் வைராக்யத்திற்குக் காரணம் என்பதால் முதலில் கூறப்பட்டது. இதுபோலவே ஆசையில்லாதவன் தான் உள், வெளிப் புலன்களையடக்கமுடியும். அதிலும் முதலில் மன அடக்கம் பிறகு வெளி இந்திரியங்களின் அடக்கம், உபரதி (ஸந்யாஸம்) பொறுமை, சிரத்தை ப்ரஹ்மத்தில் புத்தி நிலைத்தல் இவைகளும், இதனுல் தீவ்ர முமுக்ஷையும் ஏற்படும். இவ்வாறு பின் சொல்லப்பட்டதற்கு முன் சொல்லியவை காரணம் ஆகிறது. **(19)**

**(அவதாரிகை)** இந்த நான்கு ஸாதனங்களையும் ஒவ்வொன்றுக எடுத்துக் கொண்டு அவைகளின் லக்ஷணங்களை சொல்கிறுர்: -

**ब्रह्म सत्यं जगन्मिथ्येत्येवंरूपो विनिश्चयः ।**
**सोऽयं नित्यानित्यवस्तुविवेकः समुदाहृतः ॥ २० ॥**

**ப்³ரஹ்ம ஸத்யம் ஜக³ன்மித்²யேத்யேவம்ரூபோ விநிஶ்சய: ।**
**ஸோ(அ)யம் நித்யாநித்யவஸ்துவிவேக: ஸமுதா³ஹ்ருத: ॥ 20 ॥**

**ब्रह्म** = பிரஹ்மம்,

**ப்³ரஹ்ம**

**सत्यं** = உண்மை,

**ஸத்யம்**

**जगत्** = ஜகத்,

**ஜக³த்**

**मिथ्या** = பொய்,

**மித்²யா**

**इति** = என்று,

**இதி**

| | | |
|---|---|---|
| **एवंरूपः**<br>**ஏவம்ரூப:** | = | இவ்வித ரூபமாக ஏற்படும், |
| **विनिश्चयः**<br>**விநிஶ்சய:** | = | நன்கு (ஸந்தேஹமன்னியில் உள்ள) தீர்மானம் எதுவோ, |
| **सः**<br>**ஸ:** | = | அந்த, |
| **अयं**<br>**அயம்** | = | இது, |
| **नित्यानित्य-वस्तु-विवेकः**<br>**நித்யாநித்ய-வஸ்து-விவேக:** | = | நித்யவஸ்து அநித்யவஸ்து என்று பிரித்தறிதல் என்று, |
| **समुदाहृतः**<br>**ஸமுதா³ஹ்ருத:** | = | தெளிவாய் சொல்லப்பட்டிருக்கிறது. |

ஜகத்தை அநித்யம் என்று மாத்திரம் சொன்னுல் தீவ்ரமான வைராக்யம் ஏற்படக்கூடியதில்ஒல என்ற காரணத்தினுல் ஜகத்தை மித்யை, பொய்யான தோற்றம் என்றே ஸ்ரீமத் ஆசார்யார் சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது. **(20)**

(**அவதாரிகை**) விவேகத்தினுல் ஏற்படும் வைராக்யம் என்ற இரண்டாவது ஸாதனத்தின் தன்மையை அடுத்து வர்ணிக்கிறுர்: -

**तद्वैराग्यं जुगुप्सा या दर्शनश्रवणादिभिः ।**
**देहादिब्रह्मपर्यन्ते ह्यनित्ये भोग्यवस्तुनि ॥ २१ ॥**

**தத்³வைராக்³யம் ஜுகு³ப்ஸா யா த³ர்ஶனஶ்ரவணாதி³பி⁴: ।**
**தே³ஹாதி³ப்³ரஹ்மபர்யந்தே ஹ்யநித்யே போ⁴க்³யவஸ்துனி ॥ 21 ॥**

| | | |
|---|---|---|
| **देहादि**<br>**தே³ஹாதி³** | = | தேஹம் முதல், |
| **ब्रह्मपर्यन्ते**<br>**ப்³ரஹ்மபர்யந்தே** | = | ப்ரஹ்மாவரையிலுமுள்ள, |
| **अनित्ये**<br>**அநித்யே** | = | அநித்யமான, |
| **भोग्यवस्तुनि**<br>**போ⁴க்³யவஸ்துனி** | = | போக்கியமான வஸ்துவில், |
| **दर्शन-श्रवण-आदिभिः**<br>**த³ர்ஶன-ஶ்ரவண-ஆதி³பி⁴:** | = | பார்ப்பதினுலும் கேட்பதினுலும் மற்றும் (அனுமானம் முதலான) விதத்திலும், (அநித்யமல்லவாவென்று தெரிந்து கொள்வதினுல் ஏற்படும்) |

| | | |
|---|---|---|
| **या** | = | எந்த, |
| **யா** | | |
| **जुगुप्सा** | = | வெறுப்பு உண்டோ, |
| **ஜுகு³ப்ஸா** | | |
| **तत्** | = | அது, |
| **தத்** | | |
| **वैराग्यं** | = | வைராக்யம் எனப்படும். |
| **வைராக்³யம்** | | (21) |

(**அவதாரிகை**) மூன்றுவது ஸாதனமாகிய சமாதி ஷட்கத்தில் அடங்கிய சமம், தமம் உபரதி, திதிக்ஷை, சிரத்தை, ஸமாதானம் ஆகிய ஆறின் தன்மைகளையும் தனித்தனியே விளக்குகிறுர்: -

**विरज्य विषयव्रातात् दोषदृष्ट्या मुहुर्मुहुः ।**
**स्वलक्ष्ये नियतावस्था मनसः शम उच्यते ॥ २२ ॥**

**விரஜ்ய விஷயவ்ராதாத் தோ³ஷத்³ருஷ்ட்யா முஹுர்முஹுः ।**
**ஸ்வலக்ஷ்யே நியதாவஸ்தா² மனஸः ஶம உச்யதே ॥ 22 ॥**

| | | |
|---|---|---|
| **मुहुः मुहुः** | = | அடிக்கடி, |
| **முஹுः முஹுः** | | |
| **दोषदृष्ट्या** | = | தோஷத்தைப் பார்ப்பதினுல், |
| **தோ³ஷத்³ருஷ்ட்யா** | | |
| **विषयव्रातात्** | = | விஷயங்களின் கூட்டத்திலிருந்து, |
| **விஷயவ்ராதாத்** | | |
| **विरज्य** | = | வைராக்யத்தை அடைந்து, |
| **விரஜ்ய** | | |
| **मनसः** | = | மனஸின், |
| **மனஸः** | | |
| **स्वलक्ष्ये** | = | தன் குறியான (ஸகுணமோ நிர்குணமோவான) |
| **ஸ்வலக்ஷ்யே** | | ப்ரஹ்மத்தில், |
| **नियत-अवस्था** | = | கட்டுப்பட்டு இருத்தல், |
| **நியத-அவஸ்தா²** | | |
| **शमः** | = | சமம் என்று, |
| **ஶம:** | | |
| **उच्यते** | = | சொல்லப்படுகிறது. |
| **உச்யதே** | | (22) |

## विषयेभ्यः परावर्त्य स्थापनं स्वस्वगोलके ।
## उभयेषामिन्द्रियाणां स दमः परिकीर्तिता ॥ २३ ॥

**விஷயேப்⁴ய: பராவர்த்ய ஸ்தா²பனம் ஸ்வஸ்வகோ³லகே ।**
**உப⁴யேஷாமிந்த்³ரியாணாம் ஸ த³ம: பரிகீர்திதா ॥ 23 ॥**

**उभयेषां** = (ஞானேந்திரியம், கர்மேந்திரியம் என்ற)
**உப⁴யேஷாம்** இரண்டுவித,
**इन्द्रियाणां** = இந்திரியங்களையும்,
**இந்த்³ரியாணும்**
**विषयेभ्यः** = விஷயங்களிலிருந்து,
**விஷயேப்⁴ய:**
**परावर्त्य** = திருப்பி,
**பராவர்த்ய**
**स्वस्वगोलके** = அதன் அதன் ஸ்தானத்தில்,
**ஸ்வஸ்வகோ³லகே**
**स्थापनं** = இருந்துவிடச் செய்வது எதுவோ,
**ஸ்தா²பனம்**
**सः** = அது,
**ஸ:**
**दमः** = தமம் என்று,
**த³ம:**
**परिकीर्तिता** = சொல்லப்பட்டிருக்கிறது.
**பரிகீர்திதா** (23)

## बाह्यानालम्बनं वृत्तेरेषोपरतिरुत्तमा ॥ २४ ॥

**பா³ஹ்யாளுலம்ப³னம் வ்ருத்தேரேஷோபரதிருத்தமா ॥ 24 ॥**

**वृत्तेः** = மனோவ்ருத்திக்கு,
**வ்ருத்தே:**
**बाह्य-अनालम्बनं** = வெளி விஷயங்களின் பிடிப்பு இல்லாத்தன்மை
**பா³ஹ்ய-அனாலம்ப³னம்** ஏற்படுவது தான்,
**उत्तमा** = மேலான,
**உத்தமா**
**उपरति** = உபரதியாகும்.
**உபரதி** (24)

**सहनं सर्वदु:खानां अप्रतीकारपूर्वकम् ।**
**चिन्ताविलापरहितं सा तितिक्षा निगद्यते ॥ २५ ॥**

**ஸஹனம் ஸர்வது³:கா²னும் அப்ரதீகாரபூர்வகம் ।**
**சிந்தாவிலாபரஹிதம் ஸா திதிக்ஷா நிக³த்³யதே ॥ 25 ॥**

| | | |
|---|---|---|
| **अप्रतीकारपूर्वकं** அப்ரதீகாரபூர்வகம் | = | பரிஹாரம் செய்யும் பிரயத்னம் முன்னதாக இல்லாமலும், |
| **चिन्ताविलापरहितं** சிந்தாவிலாபரஹிதம் | = | கவஜலயோ, புலம்பலோ அன்னியிலும், |
| **सर्वदु:खानां** ஸர்வது³:கா²னும் | = | எல்லாவித துக்கங்களேயும், |
| **सहनं** ஸஹனம் | = | பொறுத்துக்கொள்வது எதுவோ, |
| **सा** ஸா | = | அது, |
| **तितिक्षा** திதிக்ஷா | = | திதிக்ஷை யென்று, |
| **निगद्यते** நிக³த்³யதே | = | சொல்லப்படுகிறது. |

**शास्त्रस्य गुरुवाक्यस्य सत्यबुद्ध्यावधारणा ।**
**सा श्रद्धा कथिता सद्भिर्यया वस्तूपलभ्यते ॥ २६ ॥**

**ஶாஸ்த்ரஸ்ய கு³ருவாக்யஸ்ய ஸத்யபு³த்³த⁴த்³யாவதா⁴ரணு ।**
**ஸா ஶ்ரத்³தா⁴ கதி²தா ஸத்³பி⁴ர்யயா வஸ்தூபலப்⁴யதே ॥ 26 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** யதா² | = | எதனுல், |
| **वस्तु** வஸ்து | = | வாஸ்தவமான பதார்த்தம், |
| **उपलभ्यते** உபலப்⁴யதே | = | அறியப்படுகிறதோ, |
| **सा** ஸா | = | அந்த, |
| **शास्त्रस्य** ஶாஸ்த்ரஸ்ய | = | சாஸ்திரமும், |
| **गुरुवाक्यस्य** கு³ருவாக்யஸ்ய | = | குருவின் உபதேசமும், |

| | | |
|---|---|---|
| **सत्यबुद्ध्या** ஸத்யபு³த்³த⁴த்³யா | = | ஸத்யம் தான் என்ற எண்ணத்தினுல் ஏற்படும், |
| **अवधारणा** அவதா⁴ரணு | = | திடமான நம்பிக்கை, |
| **श्रद्धा** ஶ்ரத்³தா⁴ | = | சிரத்தை என்று, |
| **सद्भिः** ஸத்³பி⁴: | = | ஸாதுக்களால், |
| **कथिता** கதி²தா | = | சொல்லப்பட்டிருக்கிறது. |

(26)

**सम्यगास्थापनं बुद्धेः शुद्धे ब्रह्मणि सर्वदा ।**
**तत्समाधानमित्युक्तं न तु चित्तस्य लालनम् ॥ २७ ॥**
**ஸம்யகா³ஸ்தா²பனம் பு³த்³தே⁴: ஶுத்³தே⁴ ப்³ரஹ்மணி ஸர்வதா³ ।**
**தத்ஸமாதா⁴னமித்யுக்தம் ந து சித்தஸ்ய லாலனம் ॥ 27 ॥**

| | | |
|---|---|---|
| **शुद्धे** ஶுத்³தே⁴ | = | சுத்தமான (நிர்குணமான), |
| **ब्रह्मणि** ப்³ரஹ்மணி | = | பிரஹ்மத்தினிடத்தில், |
| **बुद्धेः** பு³த்³தே⁴: | = | புத்தியை, |
| **सर्वदा** ஸர்வதா³ | = | எப்பொழுதும், |
| **सम्यक्** ஸம்யக் | = | நன்ருக, |
| **आस्थापनं** ஆஸ்தா²பனம் | = | நிஜல நிறுத்தல் எதுவோ, |
| **तत्** தத் | = | அது, |
| **समाधानं** ஸமாதா⁴னம் | = | ஸமாதானம், |
| **इति** இதி | = | என்று, |
| **उक्तं** உக்தம் | = | சொல்லப்பட்டிருக்கிறது, |

| | | |
|---|---|---|
| **चित्तस्य**<br>**சித்தஸ்ய** | = | சித்தத்தை, |
| **लालनं तु**<br>**லாலனம் து** | = | லாளனம் செய்வதோவெனில் (போக்குப்படி விடுவது), |
| **न**<br>**ந** | = | (ஸமாதானம்) ஆகாது. |

சமம் என்பது பிரயத்தின - அவஸ்தையாயிருப்பதால், அதைப் பற்றிச் சொல்லும் போது சஞ்சலமான “மனஸ்" என்றும், “அடிக்கடி” என்றும், லக்ஷயம் ஸ்குணமோ நிர்குணமோ இருக்கலாமென்றும் சொல்லப்பட்டது. ஸமாதான நிலை பலன் ரூபமாயிருப்பதால், நிச்சய ஸ்வரூபமான "புத்தி" என்றும், “எப்பொழுதும்” என்றும், “சுத்தப் பிரஹ்மத்தில்" என்றும் வித்யாஸப்படுத்தி சொல்லியிருப்பதை கவனிக்கவும் ஆகவே சமம் ஸாதனமாகவும் ஸமாதானம் பலனுகவும் இருப்பதால் இரண்டுக்கும் வேற்றுமையுள்ளது. லாளனம் சாலனம் இரண்டும் சமத்திற்குத் தேவை. இங்கு அப்படியல்ல. **(27)**

**अहंकारादिदेहान्तान्बन्धानज्ञानकल्पितान् ।**
**स्वस्वरूपावबोधेन मोक्तुमिच्छा मुमुक्षुता ॥ २८ ॥**

**அஹங்காராதி³தே³ஹாந்தான்ப³ந்தா⁴னஜ்ஞானகல்பிதான் ।**
**ஸ்வஸ்வரூபாவபோ³தே⁴ன மோக்துமிச்சா² முமுக்ஷுதா ॥ 28 ॥**

| | | |
|---|---|---|
| **अज्ञानकल्पितान्**<br>**அஜ்ஞானகல்பிதான்** | = | அக்ஞானத்தினுல் கல்பிக்கப்பட்டிருக்கிற, |
| **अहंकारादिदेहान्तान्**<br>**அஹங்காராதி³தே³ஹாந்தான்** | = | அஹங்காரம் முதல் தேஹம் முடியதான, |
| **बन्धान्**<br>**ப³ந்தா⁴ன்** | = | கட்டுகளை, |
| **स्वस्वरूपावबोधेन**<br>**ஸ்வஸ்வரூபாவபோ³தே⁴ன** | = | தன்னுடைய ஸ்வரூபத்தை நன்ருக அறிவதினுல், |
| **मोक्तुं**<br>**மோக்தும்** | = | விலக்கிவிட வேண்டுமென்ற, |
| **इच्छा**<br>**இச்சா²** | = | அவா, |
| **मुमुक्षुता**<br>**முமுக்ஷுதா** | = | முமுக்ஷுத்வம். |

**(28)**

(**அவதாரிகை**) இவ்விதம் நான்கு ஸாதனங்களையும் சொல்லிவிட்டு அவைகளுக்குள் வைராக்கியமும் முமுக்ஷுத்வமும் மிகவும் முக்கியமென்பதை மூன்று

சுலோகங்களில் வற்புறுத்திக்காட்டுகிருர். வைராக்யமேற்பட்டால்தான் விவேகம் வாஸ்தவமாய் இருக்கிறதென்று காட்டும். வைராக்யமிருந்தால்தான் சமாதி ஷட்கம் நிலேத்திருக்கும். முமுக்ஷுத்வம் நன்கு இருந்தால் தான் முன்னுள்ள மூன்று ஸாத னங்களும் சரியான பலனேக் கொடுக்கும். விவேகத்தினுல் ஸாமான்யமான வைரா க்ய மேற்பட்டாலும் சமதமாதிகளின் அனுஷ்டானத்தினுல் அவ்வைராக்யம் திடப் பட்டு முமுக்ஷுத்வத்துடன் சேர்ந்து பரமபுருஷார்த்தத்தையடைவிக்கச் செய்யு மென்று தாத்பர்யம்: -

**मन्दमध्यमरूपापि वैराग्येण शमादिना ।**
**प्रसादेन गुरोः सेयं प्रवृद्धा सूयते फलम् ॥ २९ ॥**

**மந்த3மத்4யமரூபாபி வைராக்3யேண ஶமாதி3ஞ ।**
**ப்ரஸாதே3ன கு3ரோ: ஸேயம் ப்ரவ்ருத்3தா4 ஸூயதே ப2லம் ॥ 29 ॥**

| | | |
|---|---|---|
| **सा**<br>**ஸா** | = | அந்த முமுக்ஷுத்வம், |
| **मन्दमध्यमरूपापि**<br>**மந்த3மத்4யமரூபாபி** | = | மந்தமாயும் மத்யமமாயுமுள்ள தன்மையுடன் இருந்தாலும், |
| **वैराग्येण**<br>**வைராக்3யேண** | = | வைராக்யத்தினுலும், |
| **शमादिना**<br>**ஶமாதி3ஞ** | = | சமம் முதலானவைகளாலும், |
| **गुरोः**<br>**கு3ரோ:** | = | குருநாதருடைய, |
| **प्रसादेन**<br>**ப்ரஸாதே3ன** | = | அனுக்ரஹத்தினுலும், |
| **इयं**<br>**இயம்** | = | இது, |
| **प्रवृद्धा**<br>**ப்ரவ்ருத்3தா4** | = | நன்கு விருத்தியடைந்து, |
| **फलं**<br>**ப2லம்** | = | பலனே, |
| **सूयते**<br>**ஸூயதே** | = | கொடுக்கும். |

முமுக்ஷை - மோக்ஷமடைவதில் - ஆவல் - மூன்றுவிதம். மந்தம், மத்யமம், ப்ரவ்ருத்தம். மந்தமும் மத்யமமும் பலனேத் தராது. ப்ரவ்ருத்தமாக ஆனுல்தான் பலன் ஏற்படும். **(29)**

**वैराग्यं च मुमुक्षुत्वं तीव्रं यस्य तु विद्यते ।**
**तस्मिन्नेवार्थवन्तः स्युः फलवन्तः शमादयः ॥ ३० ॥**

**வைராக்³யம் ச முமுக்ஷுத்வம் தீவ்ரம் யஸ்ய து வித்³யதே ।**
**தஸ்மின்னேவார்த²வந்தः ஸ்யுः ப²லவந்தः ஶமாத³யः ॥ 30 ॥**

| | | |
|---|---|---|
| **यस्य** யஸ்ய | = | எவனுக்கு, |
| **वैराग्यं च** வைராக்³யம் ச | = | வைராக்யமும், |
| **मुमुक्षुत्वं** முமுக்ஷுத்வம் | = | முமுக்ஷுத்வமும், |
| **तीव्रं** தீவ்ரம் | = | தீவிரமாகவே, |
| **विद्यते** வித்³யதே | = | இருக்கிறதோ, |
| **तस्मिन् एव** தஸ்மின் ஏவ | = | அவனிடத்தில் தான், |
| **शमादयः** ஶமாத³யः | = | சமம் முதலான சொற்கள், |
| **अर्थवन्तः** அர்த²வந்தः | = | பொருள் பதிந்தவைகளாகவும், |
| **फलवन्तः** ப²லவந்தः | = | பலனைக் கொடுக்கக்கூடியவைகளாகவும், |
| **स्युः** ஸ்யுः | = | இருக்கும். |

சமாதி ஷட்கத்திற்கு ஸாதனம் தீவ்ர வைராக்யம், பலன் தீவ்ரமுமுக்ஷுத்வம் ஆகவே தீவ்ர வைராக்யமும் தீவ்ர முமுக்ஷுத்வமும் யாரிடம் உள்ளதோ அவனிடம் சமாதிகள் இருப்பதாகத் தீர்மானிக்கலாம். ஒருவனிடம் தீவ்ர வைராக்ய மிருக்குமானல் அதன் பலனுன சமாதிகளும் இருக்கும். தீவ்ர முமுக்ஷுத்வம் இருக்குமானல் இதன் ஸாதனமான சமாதிகள் இருக்கும். ஆகவே ஸாதனமான தீவ்ர வைராக்யம் எவனிடம் உள்ளதோ அவனைத்தான் சாந்தன், தாந்தன் என்று சொல்லலாம். இந்தச் சொல்தான் பொருள்படைத்தது. தீவ்ர வைராக்யமில்லாதவனை சாந்தன் என்று சொன்னல் அது வெறும் பெயராகுமேதவிற இதற்குப் பொருள் இல்லை. தீவ்ர முமுக்ஷுத்வம் யாரிடமுள்ளதோ அவனிடம்தான் சமாதிகள் பயனுள்ளவை. **(30)**

| | | |
|---|---|---|
| **यत्**<br>**யத்** | = | எதினலோ (அதினலேயே ஆத்மா ஆனந்த ஸ்வரூபன்என்று தெரிகிறது). (இவ்விஷயத்தில்), |
| **श्रुतिः**<br>**ஶ்ருதி:** | = | (தைத்திரீயம், பிருஹதாரண்யகம் முதலிய) வேதமும், |
| **प्रत्यक्षं**<br>**ப்ரத்யக்ஷம்** | = | (ஸகல ஜனங்களாலும் நல்ல தூக்கத்தில் அனுபவிக்கப்படுகிறதான) பிரத்யக்ஷமும், (ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்த பெரியோர்கள் இவ்விதம் இருக்கிறதென்று சொல்லும்) ஐதிஹ்யமும், |
| **अनुमानं च**<br>**அனுமானம் ச** | = | ((முன் காட்டியுள்ள) அனுமானமும், |
| **जाग्रति**<br>**ஜாக்³ரதி** | = | பிரமாணங்களாயிருக்கின்றன. |

விஷயங்கள் தானகவே பிரியமாயிருந்தால் எப்பொழுதும் பிரியமாக இருக்க வேண்டும் அப்படி இல்லை. தனக்கு பிரியம் என்று சேகரித்த பொருள்களைக்கூட சில சமயம் வெறுப்பினல் விலக்கிவிடுகிருர்கள். விரதோபவாஸங்களால் சரீரத்திற்கு கிலேசத்தை தானே உண்டுபண்ணுகிறுர்கள். யோகிகள் பிராணனை அடக்குகிறுர்கள். மனம் அடங்கும் தூக்கத்தைத் தானே விரும்புகிறுர்கள். தூக்கத்தில் கிடைக்கும் ஸ்வரூபானந்தம் துன்பக்கலப்பில்லாதது. அதனல்தான் எல்லா போகங்களும் நிறைந்த சக்ரவர்த்தியும் அவைகளை விட்டுவிட்டு தூக்கத்தையே விரும்புகிறன். **(109)**

## 12. மாயையும் அதன் கார்யங்களும்

**(அவதாரிகை)** இதுவரை அனத்மா என்ற பிரிவில் சேர்ந்த ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், அவைகளையொட்டிய விஷயங்கள், இவைகளைப்பற்றி சொல்லி விட்டு, இவைகளைவிட ஸூக்ஷ்மமாய் உள்ளதும் காரணமாயுள்ளதுமான காரண சரீரத்தைப்பற்றி சொல்வதற்கு ஆரம்பிக்கும்போது, எல்லாவற்றிற்கும் ஆதி காரணமாயுள்ள மாயையைப்பற்றி முதலில் சொல்கிறுர்: -

**अव्यक्तनाम्नी परमेशशक्तिरनाद्यविद्या त्रिगुणात्मिका परा ।**
**कार्यानुमेया सुधियैव माया यया जगत्सर्वमिदं प्रसूयते ॥ ११० ॥**

**அவ்யக்தநாம்னீ பரமேஶஶக்திரநாத்³யவித்³யா த்ரிகு³ணாத்மிகா பரா ।**
**கார்யானுமேயா ஸுதி⁴யைவ மாயா யயா ஜக³த்ஸர்வமித³ம் ப்ரஸூயதே ॥110॥**

| | | |
|---|---|---|
| **इदं**<br>**இத³ம்** | = | இந்த, |
| **जगत् सर्वं**<br>**ஜக³த் ஸர்வம்** | = | உலகமெல்லாம், |

| | | |
|---|---|---|
| **यया**<br>**யயா** | = | எதனுல், |
| **प्रसूयते**<br>**ப்ரஸூயதே** | = | உண்டாக்கப்படுகிறதோ அந்த, |
| **माया**<br>**மாயா** | = | மாயை என்பது, |
| **अव्यक्तनाम्नी**<br>**அவ்யக்தநாம்னீ** | = | (வ்யக்தமாகத் தெரியாததனுல்) அவ்யக்தம் என்ற பெயருள்ளது, |
| **परमेश-शक्तिः**<br>**பரமேஶ-ஶக்தி꞉** | = | பரமேசுவரனுடைய சக்தியாயுள்ளது, |
| **अनादि-अविद्या**<br>**அநாதி³-அவித்³யா** | = | ஆதியற்றதாயும், ஆனுல் ஒரு காலத்திலும் வாஸ்தவமாய் இல்லாத தாயுமுள்ளது, |
| **त्रिगुणात्मिका**<br>**த்ரிகு³ணாத்மிகா** | = | (ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற) மூன்று குணங்களை ஸ்வரூபமாயுள்ளது, |
| **परा**<br>**பரா** | = | எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பதால்) (மேலாக உள்ளது, |
| **सुधिवा एव**<br>**ஸுதி⁴வா ஏவ** | = | நல்ல பரிசுத்தமான புத்தியுள்ளவரால்மாத்திரம், |
| **कार्य-अनुमेया**<br>**கார்ய-அனுமேயா** | = | அதன் கார்யங்களிலிருந்து ஊஹிக்கக்கூடியது. |

**(110)**

**(அவதாரிகை)** இதன் ஸ்வரூபம் எவ்விதமென்று எடுத்துச் சொல்ல முடியாது என்பதே இதன் ஸ்வரூபம் என்று சொல்கிறுர்: -

**सन्नाप्यसन्नाप्युभयात्मिका नो भिन्नाप्यभिन्नाप्युभयात्मिका नो ।**
**साङ्गाप्यनङ्गाप्युभयात्मिका नो महाभुताऽनिर्वचनीयरूपा ॥ १११ ॥**

**ஸன்னுப்யஸன்னுப்யுப⁴யாத்மிகா நோ**
**பி⁴ன்னுப்யபி⁴ன்னுப்யுப⁴யாத்மிகா நோ ।**
**ஸாங்கா³ப்யனங்கா³ப்யுப⁴யாத்மிகா நோ**
**மஹாபு⁴தா(அ)நிர்வசனீயரூபா ॥ 111 ॥**

(இருக்கிறது என்று ஒரு பதார்த்தத்தைச் சொல்ல வேண்டுமானுல் அது எப்பொழுதும் இருக்கவேண்டும். எந்தக் காலத்திலும் இல்லாமல் போகக்கூடாது. இந்த மாயை ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டவுடன் இல்லாமல் போய்விடுவதால் இது)

| | | |
|---|---|---|
| **सत् अपि**<br>**ஸத் அபி** | = | இருக்கிற வஸ்துவாகவும், |
| **न**<br>**ந** | = | இல்லை. (இல்லாமலேயிருக்கும் முயல் கொம்பு போலுள்ளவைகள் ஒருகாலத்திலும் தெரியக் கூடாது. இது தோன்றிக்கொண்டு இருப்பதுடன் ஸம்ஸாரத்திற்குக் காரணமாயுமிருப்பதால் இது), |
| **असत् अपि**<br>**அஸத் அபி** | = | இல்லாததாகவும், |
| **न**<br>**ந** | = | இல்லை. (இருக்கும் தன்மை இல்லாத்தன்மை இரண்டும் பரஸ்பர விரோதமாயிருப்பதால் ஒரே வஸ்துவில் இருக்கமுடியாததினுல் இது) |
| **असत् अपि**<br>**அஸத் அபி** | = | இருவிதமாயுமுள்ள ஸ்வபாவமுள்ளதாகவும், |
| **नो**<br>**நோ** | = | இல்லை. (பிரஹ்மம் ஒரே வஸ்துதான் வாஸ்தவமாய் உள்ளதால் இது அதற்கு), |
| **भिन्ना अपि**<br>**பி⁴ன்ன அபி** | = | வேருகவோ, (பிரஹ்மம் நித்யமாய் அழிவற்றதாயிருக்கையில் இது ஞானதசையில் அழிந்துவிடுவதால் இது அதற்கு) |
| **अभिन्ना अपि**<br>**அபி⁴ன்ன அபி** | = | வேறல்லவென்றே, (வேருகவும்வேறு அல்லாமலும் ஒரே வஸ்து இருக்கமுடியாததினுல் இது) |
| **उभयात्मिका**<br>**உப⁴யாத்மிகா** | = | இருவிதத்தன்மையுள்ளதென்றே, |
| **नो**<br>**நோ** | = | ஆகாது. (இதற்கு ஆதியில்லாததால்), |
| **साङ्गा अपि**<br>**ஸாங்கா³ அபி** | = | அவயவங்களுள்ளது என்றே, (இதிலிருந்து கார்யங்கள் ஏற்படுவதினுல்), |
| **अनङ्गा अपि**<br>**அனங்கா³ அபி** | = | அவயவங்களற்றதென்றே, (அவயவங்கள் உள்ளதாகவும் இல்லாததாகவும் ஒரே வஸ்து இருக்க முடியாததினுல்) |
| **उभयात्मिका**<br>**உப⁴யாத்மிகா** | = | இருவிதத் தன்மை உள்ளதாகவோ, |
| **नो**<br>**நோ** | = | ஆகாது. (ஆகையால் இது), |
| **महाभुता**<br>**மஹாபு⁴தா** | = | பெரிய ஆச்சர்யமான வஸ்து, |
| **अनिर्वचनीय रूपा**<br>**அநிர்வசனீய ரூபா** | = | (இவ்விதமென்று) எடுத்துச் சொல்ல முடியாத ஸ்வரூபத்தை யுடையது. **(111)** |

**(அவதாரிகை)** இதுதான் காரண சரீரம் என்று 122 வது சுலோகத்தில் தான் சொல்லப்போகிறுர். இதன் மத்தியில் மாயை மூன்று குணங்களுடன் கூடியது, அதன் கார்யங்களிஞல் ஊஹித்தறிய வேண்டியது, அதற்கு நாசமுண்டு, என்று சொன்ன தை விஸ்தரித்து அக்குணங்கஊயும் அவைகளின் தன்மைகஊயும் அக்கார்யங்கஊ யும் விவரமாக எடுத்துச் சொல்கிறுர்: -

**शुद्धाद्वयब्रह्मविबोधनाश्या सर्पभ्रमो रज्जुविवेकतो यथा ।**
**रजस्तमःसत्त्वमिति प्रसिद्धा गुणास्तदीयाः प्रथितैः स्वकार्यैः ॥ ११२ ॥**

**ஶுத்³தா⁴த்³வயப்³ரஹ்மவிபோ³த⁴நாஶ்யா**
**ஸர்பப்⁴ரமோ ரஜ்ஜுவிவேகதோ யதா² ।**
**ரஜஸ்தம:ஸத்த்வமிதி ப்ரஸித்³தா⁴ கு³ணாஸ்ததீ³யா:**
**ப்ரதி²தை: ஸ்வகார்யை: ॥ 112 ॥**

**सर्प-भ्रम:** = பாம்பு என்கிற பொய் தோற்றமானது,
**ஸர்ப-ப்⁴ரம:**
**यथा** = எப்படி,
**யதா²**
**रज्जु-विवेकत:** = (அதற்கு அதிஷ்டானமான) கயிற்றை பிரித்தறிவதி
**ரஜ்ஜு-விவேகத:** ஞல்(நாசத்தை யடைந்து விடுகிறதோ, அப்படியே),
**शुद्ध-अद्वय ब्रह्म विबोध-नाश्या** = சுத்தமான இரண்டற்ற பிரஹ்மத்தை நன்கு
**ஶுத்³த⁴-அத்³வய ப்³ரஹ்ம** அறிவதிஞல் நாசமடையக் கூடியது.
**விபோ³த⁴-நாஶ்யா** (இந்த மாயை)
**तदीया:** = அதைச் சேர்ந்த,
**ததீ³யா:**
**गुणा:** = குணங்கள்,
**கு³ணா:**
**प्रथितै:** = நன்கு தெரிகிற,
**ப்ரதி²தை:**
**स्व-कार्यै:** = அததன் கார்யங்களிஞல்,
**ஸ்வ-கார்யை:**
**प्रसिद्धा:** = பிரஸித்தமாயிருக்கும்,
**ப்ரஸித்³தா⁴**
**रज: तम: सत्त्वं इति** = ரஜஸ், தமஸ், ஸத்வம் என்பவை.
**ரஜ: தம: ஸத்த்வம் இதி** **(112)**

**(அவதாரிகை)** மாயையில் விக்ஷேப சக்தி, ஆவரண சக்தி, ஞான சக்தி என்று மூன்று சக்திகள் உள்ளன. இவற்றில் முதல் மோ இரண்டும் பந்தத்திற்குக் காரணம். மூன்றாவது இதில் காரணம். விக்ஷேப ரஜோகுணத்தின் கார்யமான சக்தியைப்பற்றி

இரண்டு சுலோகங்களாலும் (பின்னுல் வரும் 117 வது சுலோகத்தாலும்) வர்ணிக்கிருர். தமோகுணத்தின் கார்யமான ஆவரண சக்தியை இவைகளுக்குப்பின் வரும் சுலோகங்களில் சொல்கிருர்: -

**विक्षेपशक्ती रजसः क्रियात्मिका यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ।**
**रागादयोऽस्याः प्रभवन्ति नित्यं दुःखादयो ये मनसो विकाराः ॥ ११३ ॥**

**விக்ஷேபஶக்தீ ரஜஸः க்ரியாத்மிகா யதः**
**ப்ரவ்ருத்திः ப்ரஸ்ருதா புராணீ ।**
**ராகா³த³யோ(அ)ஸ்யாः ப்ரப⁴வந்தி நித்யம்**
**து³ःகா²த³யோ யே மனஸோ விகாராः ॥ 113 ॥**

| | | |
|---|---|---|
| **रजसः** ரஜஸः | = | ரஜோகுணத்தின், |
| **क्रियात्मिका** க்ரியாத்மிகா | = | கார்யரூபமா யுள்ளது, |
| **विक्षेपशक्तीः** விக்ஷேபஶக்தீ: | = | விக்ஷேப (உஊலத்துவிடக்கூடிய) சக்தி, |
| **यतः** யதः | = | எதிலிருந்து (தான்), |
| **पुराणी** புராணீ | = | அநாதி காலம் முதற்கொண்டு, |
| **प्रवृत्तिः** ப்ரவ்ருத்திः | = | (ஸம்ஸாரத்திற்குக் காரணமான) பிரவிருத்தி யானது, |
| **प्रसृता** ப்ரஸ்ருதா | = | துடர்ந்து வந்திருக்கிறதோ, |
| **अस्याः** அஸ்யாः | = | இந்த விக்ஷேப சக்தியிலிருந்துதான், |
| **रागादयः** ராகா³த³யः | = | ஆசை முதலானவைகளும், |
| **ये** யே | = | எவை, |
| **मनसः** மனஸः | = | மனஸினுடைய, |
| **विकाराः** விகாராः | = | மாறுதல்களாயிருக்கிற, |
| **दुःखादयः** து³ःகா²த³யः | = | துக்கம் முதலானவைகளோ அவைகளும், |

| | | |
|---|---|---|
| **नित्यं**<br>**நித்யம்** | = | எப்பொழுதும் தொடர்ந்து, |
| **प्रभवन्ति**<br>**ப்ரப⁴வந்தி** | = | ஏற்படுகின்றன. |

ஈசுவரனுடைய உபாதியான மாயை ரஜஸ் தமோ குணங்களால் தாக்கப்படாத சுத்தமான ஸத்வ குணத்தை பிரதானமாக உடையது. இது ஈசுவரனுக்குக் கட்டுப்பட்டது. ஆதலால் உபாதியான ஈசுவரனுக்கு பந்தமில்லை. ஜீவனுடைய உபாதியான அவித்யை மலினமான ஸத்வ குணத்தைக்கொண்டது. ரஜஸ் தமோ குணங்களால் ஞான சக்தி தாக்கப்பட்டது. அவித்யைக் துக்கம் குக்கட்டுப்பட்டவன் ஜீவன். இதனுல் பந்தமுண்டு. முதலியவை மனதின் விகாரம் என்று சொன்னதால் இவை ஒருக் காலும் நிர்விகாரமான ஆத்மாவுக்கு இல்லை என்று காட்டப்பட்டது. **(113)**

(**அவதாரிகை**) ரஜோகுணத்திலிருந்து ஆசை உண்டாகின்றன என்று சொன்ன தையே கொஞ்சம் விஸ்தரித்து, அவைகளால் ஏற்படும் பிரவிருத்தி தான்ஸம்ஸார பந்தத்திற்குக் காரணம் என்பதைச் சொல்கிறுர்: -

**कामः क्रोधो लोभदम्भाभ्यसूयाहंकारेर्ष्यामत्सराधास्तु घोराः ।**
**धर्मा एते राजसाः पुंप्रवृत्तिर्यस्मादेत्तद्जो बन्धहेतुः ॥ ११४ ॥**

**காம: க்ரோதோ⁴ லோப⁴த³ம்பா⁴ப்⁴யஸூயா**
**ஹங்காரேர்ஷ்யாமத்ஸராதா⁴ஸ்து கோ⁴ரா: ।**
**த⁴ர்மா ஏதே ராஜஸா: பும்ப்ரவ்ருத்திர்யஸ்மா**
**தே³த்தத்³ஜோ ப³ந்த⁴ஹேது: ॥ 114 ॥**

| | | |
|---|---|---|
| **कामः**<br>**காம:** | = | ஆசை, |
| **कोधः**<br>**கோத⁴:** | = | கோபம், |
| **लोभ**<br>**லோப⁴** | = | லோபம், |
| **दम्भ**<br>**த³ம்ப⁴** | = | டம்பம், |
| **अभ्यसूया**<br>**அப்⁴யஸூயா** | = | அஸூயை, |
| **अहंकार**<br>**அஹங்கார** | = | அஹங்காரம், |
| **ईर्ष्या**<br>**ஈர்ஷ்யா** | = | ஈர்ஷ்யை, |

| | | |
|---|---|---|
| मत्सर<br>மத்ஸர | = | மாத்ஸர்யம், |
| आधा:<br>ஆதா⁴: | = | முதலானவை, |
| घोरा: तु<br>கோ⁴ரா: து | = | மிகவும் கெட்டவை, |
| एते<br>ஏதே | = | இந்த, |
| धर्मा:<br>த⁴ர்மா: | = | குணங்கள், |
| राजसा:<br>ராஜஸா: | = | ரஜோகுணத்தினுல் ஏற்படுபவை, |
| यस्मात्<br>யஸ்மாத் | = | எதிலிருந்து, |
| पुंप्रवृत्ति:<br>பும்ப்ரவ்ருத்தி: | = | ஜீவர்களுக்கு பிரவிருத்தியானது ஏற்படுகிறதோ, |
| एतत्<br>ஏதத் | = | இந்த (எல்லாருக்கும் தெரிந்த), |
| तत्<br>தத் | = | அந்த (மாயாகுணமாக சொல்லப்பட்ட), |
| रज:<br>ரஜ: | = | ரஜோகுணமானது, |
| बन्ध-हेतु:<br>ப³ந்த⁴-ஹேது: | = | ஸம்ஸார பந்தத்திற்கு காரணமாயிருக்கிறது. |

தான் ஆசைப்பட்ட பொருள் தனக்குக் கிடைக்காமல் தடங்கல் ஏற்படும் பொழுது கோபம் ஏற்படும். தனக்குக் கிடைத்த வஸ்து தன்னிடமே இருக்கவேண்டும், பிறரிடம் போகக்கூடாது என்ற எண்ணம் லோபம். பிறரின் உயர்வைக் கண்டு மனம் தாங்காமல் இருப்பது அஸூயை. பிறரின் குணங்களையே தோஷமாக எடுத்துக் கூறுவது. ஈர்ஷ்யை. குறைவற்று வற்றுமல் நிறைந்திருந்தபோதிலும் அதைப் பிறர் அனுபவிக்க மனம் வராமை மாத்ஸர்யம். ராஜாவுக்குச் சொந்தமான வற்றுத நீர் நிறைந்த குளத்திலிருந்துக்கூட ஜலம் குடிக்கக்கூடாது என்று தடுத்தல். **(114)**

**(அவதாரிகை)** ஸம்ஸாரத்திற்கு மூலகாரணமான, ரஜோகுண கார்யமான விக்ஷேப சக்திக்கும் காரணமாயிருக்கும் ஆவரண சக்தி தமோ குணத்தினுல் ஏற்படு கிறதென்பதைக் குறிப்பிடுகிறுர்: -

**एषाऽऽवृतिर्नाम तमोगुणस्य शक्तिर्यया वस्त्ववभासतेऽन्यथा ।**
**सैषा निदानं पुरुषस्य संसृतेः विक्षेपशक्तेः प्रवणस्य हेतुः ॥ ११५ ॥**

**ஏஷா(ஆ)வ்ருதிர்நாம தமோகு³ணஸ்ய ஶக்திர்யயா**
**வஸ்த்வவபா⁴ஸதே(அ)ன்யதா² ।**
**ஸைஷா நிதா³னம் புருஷஸ்ய ஸம்ஸ்ருதே:**
**விக்ஷேபஶக்தே: ப்ரவணஸ்ய ஹேது: ॥ 115 ॥**

| | | |
|---|---|---|
| **यया** யயா | = | எதினல், |
| **वस्तु** வஸ்து | = | (ஸத், சித், ஆனந்தமாயிருக்கும்) வஸ்துவாகிய ஆத்மா, |
| **अन्यथा** அன்யதா² | = | (சரீரம் முதலானதாக) வேறுவிதமாக |
| **अवभासते** அவபா⁴ஸதே | = | தோன்றுகிறதோ, |
| **एषा** ஏஷா | = | இது, |
| **तमो गुणस्य** தமோ கு³ணஸ்ய | = | தமோகுணத்தைச் சேர்ந்த, |
| **शक्तिः** ஶக்தி: | = | சக்தியாகும், |
| **अवृतिः नाम** அவ்ருதி: நாம | = | ஆவரணம் என்று பிரஸித்தம், |
| **विक्षेप-शक्तेः** விக்ஷேப-ஶக்தே: | = | விக்ஷேப சக்தியினுடைய, |
| **प्रवणस्य** ப்ரவணஸ்ய | = | வெளிக்கிளம்புதலுக்கு, |
| **हेतुः** ஹேது: | = | காரணமாய் இருந்துகொண்டு, |
| **सा** ஸா | = | அந்த, |
| **एषा** ஏஷா | = | இந்த ஆவரண சக்தி, |
| **पुरुषस्य** புருஷஸ்ய | = | புருஷனுடைய, |
| **संसृतेः** ஸம்ஸ்ருதே: | = | ஸம்ஸாரத்திற்கு, |

**निदानं** = (விக்ஷேபசக்தி மூலமாய்) காரணமாயிருக்கிறது.
**நிதா³னம்**

ஸந்தேஹமோ, விபரீதஞானமோ ஒருவனுக்கு இருந்தால் தான் விக்ஷேபத்தால் மனம் கலங்கும். நிச்சயஞானம் ஏற்பட்டு விட்டால் மனம் கலங்காது. ஞானிக்கு ஆவரணம் நீங்கி விட்டதால் பிராரப்த கர்மாவினால் விக்ஷேபம் இருந்தாலும் பந்தத்தைக் கொடுக்காது. **(115)**

(**அவதாரிகை**) இவ்விரண்டு சக்திகளுக்குள் ஆவரண சக்தியே அதிக பலமுள்ளதென்பதை விவரித்துக் காட்டுகிறர்: -

**प्रज्ञावानपि पण्डितोऽपि चतुरोऽप्यत्यन्तसूक्ष्मार्थदृक्**
**व्यालीढस्तमसा न वेत्ति बहुधा संबोधितोऽपि स्फुटं ।**
**भ्रान्त्यारोपितमेव साधु कलयत्वालम्बते तद्गुणान्**
**हन्तासौ प्रबला दुरन्ततमसः शक्तिर्महत्यावृतिः ॥ ११६ ॥**

**ப்ரஜ்ஞாவானபி பண்டி³தோ(அ)பி சதுரோ(அ)ப்யத்யந்தஸூக்ஷ்மார்த²த்³ருக்**
**வ்யாலீட⁴ஸ்தமஸா ந தே³த்தி ப³ஹுதா⁴ ஸம்போ³தி⁴தோ(அ)பி ஸ்பு²டம் ।**
**ப்⁴ராந்த்யாரோபிதமேவ ஸாது⁴ கலயத்வாலம்ப³தே தத்³கு³ணன்**
**ஹந்தாஸௌ ப்ரப³லா து³ரந்ததமஸঃ ஶக்திர்மஹத்யாவ்ருதிঃ ॥ 116 ॥**

**प्रज्ञावान् अपि** = நல்ல புத்திசாலியாய் இருந்தாலும்,
**ப்ரஜ்ஞாவான் அபி**
**पण्डितः अपि** = சாஸ்திர ஞானமுள்ளவனுய் இருந்தாலும்,
**பண்டி³தঃ அபி**
**चतुरः अपि** = ஸாமர்த்தியமுள்ளவனுய் இருந்தாலும்,
**சதுரঃ அபி**
**अत्यन्तसूक्ष्म-अर्थ-दृक्** = வெகு ஸூக்ஷ்மமான விஷயங்களையும்
**அத்யந்தஸூக்ஷ்ம-அர்த²-த்³ருக்** அறியக்கூடியவனுயிருந்தாலும்,
**बहुधा** = பலவிதமாய்,
**ப³ஹுதா⁴**
**स्फुटं** = தெளிவாக,
**ஸ்பு²டம்**
**संबोधितः अपि** = நன்கு அறிவூட்டப்பட்டவனுயிருந்தாலும்,
**ஸம்போ³தி⁴தঃ அபி**
**तमसा** = தமோகுணத்தினுல்,
**தமஸா**

| | | |
|---|---|---|
| **व्यालीढः** | = | நன்கு மூடப்பட்டவனுகிவிட்டால், |
| **வ்யாலீட⁴:** | | |
| **न देत्ति** | = | (தத்வத்தை) அறிவதில்லை. |
| **ந தே³த்தி** | | |
| **भ्रान्त्या** | = | பிராந்தியினுல், |
| **ப்⁴ராந்த்யா** | | |
| **आरोपितं एव** | = | கல்பிக்கப்படும் வஸ்துவையே, |
| **ஆரோபிதம் ஏவ** | | |
| **साधु** | = | சரியென்று, |
| **ஸாது⁴** | | |
| **कलयति** | = | எண்ணுகிருன், |
| **கலயதி** | | |
| **तद्-गणान्** | = | அதன் குணங்களையே, |
| **தத்³-க³ணுன்** | | |
| **आलम्बते** | = | தழுவுகிருன், |
| **ஆலம்ப³தே** | | |
| **हन्त** | = | மிகவும் பரிதாபம்! |
| **ஹந்த** | | |
| **दुरन्ततमसः** | = | போக்கடிப்பதற்கு மிகவும் சிரமமான தமோ குணத்தின், |
| **து³ரந்ததமஸ:** | | |
| **शक्तिः** | = | சக்தியான, |
| **ஶக்தி:** | | |
| **असौ** | = | இந்த, |
| **அஸௌ** | | |
| **आवृतिः** | = | ஆவரணம் என்பது, |
| **ஆவ்ருதி:** | | |
| **महति** | = | பெரிது, |
| **மஹதி** | | |
| **प्रबला** | = | மிகவும் பலமுள்ளது. (உபநிஷத்துக்களின் மூலம் ஆசார்ய உபதேசத்தால் ஆத்மா வைத்தவிற மற்றவை எல்லாம் பொய் என்று நன்கு அறிந்த போதிலும் பிராந்தி விலகுவதில்லை என்பதை அநுபவத்தில் காண்கிருேமல்லவா) |
| **ப்ரப³லா** | | |

**(அவதாரிகை)** ஆவரண சக்தி என்னவெல்லாம் செய்கிறதென்பதையும் அதற்கு உள்பட்டவனை விக்ஷேப சக்தி நன்கு கெடுத்துவிடு மென்பதையும் காட்டு கிருர்: -

**अभावना वा विपरीतभावना संभावना विप्रतिपत्तिरस्याः ।**
**संसर्गयुक्तं न विमुञ्चति ध्रुवं विक्षेपशक्तिः क्षपयत्यजस्रम् ॥ ११७ ॥**

**அபா⁴வனு வா விபரீதபா⁴வனு ஸம்பா⁴வனு விப்ரதிபத்திரஸ்யா: ।**
**ஸம்ஸர்க³யுக்தம் ந விமுஞ்சதி த்⁴ருவம் விக்ஷேபஶக்தி: க்ஷபயத்யஜஸ்ரம் ॥117॥**

| | | |
|---|---|---|
| **अस्याः** அஸ்யா: | = | இந்த ஆவரண சக்தியின், |
| **संसर्ग युक्तं** ஸம்ஸர்க³யுக்தம் | = | சேர்க்கையுள்ளவனை, |
| **अभावना** அபா⁴வனு | = | (சாஸ்திரத்தில் உபதேசிக்கப்படும் தத்வம்) இருக்காது என்றோ இல்லை யென்றோ தோன்றுதல், |
| **विपरीत भावना** விபரீத பா⁴வனு | = | நேர்மாறுதலாக (வேறு ஒன்றை தத்வமென்று) எண்ணுதல், |
| **विप्रतिपत्तिः** ப்ரதிபத்தி: | = | (விருத்தமான குணங்களோடு கூடியிருக்கும் அது வோ இதுவோ என்று) பலவாறுக எண்ணுவதான, |
| **संभावना** ஸம்பா⁴வனு | = | ஸம்சயம், (ஆக இம்மூன்றும்), |
| **ध्रुवं** த்⁴ருவம் | = | நிச்சயமாக, |
| **न विमुञ्चति** ந விமுஞ்சதி | = | விட்டுவிலகாது. (அவனை), |
| **विक्षेप शक्तिः** விக்ஷேப ஶக்தி: | = | விக்ஷேபசக்தியானது, |
| **अजस्रं** அஜஸ்ரம் | = | இடைவிடாமல், |
| **क्षपयति** பயதி | = | கெடுத்துவிடும். |

ஆவரண சக்தியானது ஜீவப்ரஹ்மைக்யம் பொருந்தாது என்ற அஸம்பாவனையையும், அநாத்மாவான சரீராதிகளில் விபரீத ஆத்மபாவனையையும், உபநிஷத்துக்களிலும் குரு வாக்யத்திலும் ஸம்சயபாவனையையும் உண்டுபண்ணி பலவிதமாக மனதில் விக்ஷேபத்தைக் கொடுத்து ஆத்மஸ்வரூபத்தை விளங்காதபடி செய்து புருஷனையழித்துவிடுகிறது. இதில் சிரவணத்தால் ஸம்சயபாவனையும் மனனத்தால் அஸம்பாவனையும் நிதித்யாஸனத்தால் விபரீத பாவனையும் நீங்கியவுடன் ஞானம் ஏற்பட்டு அக்ஞானாவரணம் அழிந்து விக்ஷேபமும் நீங்கிவிடுகிறது. **(117)**

**(அவதாரிகை)** விக்ஷேய சக்தியினுல் காமம், க்ரோதம் முதலியது ஏற்படுவது போல ஆவரணத்தினுல் ஏற்படுகிறவைகளை எடுத்துச் சொல்கிறுர்: -

**अज्ञानमालस्य जडत्व निद्राप्रमादमूढत्वमुखास्तमोगुणाः ।**
**एतैः प्रयुक्तो न हि वेत्ति किंचित् निद्रालुवत्स्तम्भवदेव तिष्ठति ॥ ११८ ॥**

**அஜ்ஞானமாலஸ்ய ஜட³த்வ நித்³ராப்ரமாத³**
**மூட⁴த்வமுகா²ஸ்தமோகு³ணா: ।**
**ஏதை: ப்ரயுக்தோ ந ஹி வேத்தி கிஞ்சித்**
**நித்³ராலுவத்ஸ்தம்ப⁴வதே³வ திஷ்ட²தி ॥ 118 ॥**

**अज्ञानं** = அறிந்துகொள்ளாமை,
**அஜ்ஞானம்**
**आलस्यं** = சோம்பல்,
**ஆலஸ்யம்**
**जडत्व** = ஸாமர்த்தியமின்மை,
**ஜட³த்வ**
**निद्रा** = தூக்கம்,
**நித்³ரா**
**प्रमाद** = கவனக்குறைவு,
**ப்ரமாத³**
**मूढत्वं** = முட்டாள்தனம்,
**மூட⁴த்வம்**
**मुखाः** = முதலானவைகள்,
**முகா²:**
**तमो-गुणाः** = தமஸின் குணங்கள்,
**தமோ-கு³ணா:**
**एतैः** = இவைகளுடன்,
**ஏதை:**
**प्रयुक्तः** = நன்கு சேர்ந்தவன்,
**ப்ரயுக்த:**
**किंचित्** = எதையும்,
**கிஞ்சித்**
**न हि वेत्ति** = அறியமாட்டான் என்பது பிரஸித்தம். (அவன்),
**ந ஹி வேத்தி**
**निद्रालुवत्** = தூங்குகிறவனைப் போலவும்,
**நித்³ராலுவத்**
**स्तम्भवत्** = தூணைப் போலவும்,
**ஸ்தம்ப⁴வத்**
**एव** = தான்,
**ஏவ**

**तिष्ठति** = இருப்பான்.

**திஷ்ட²தி**

பிறர் சொல்லியும்கூட அறியாமலிருப்பது அக்ஞானம் அல்லது கீதையில் சொன்ன பிரகாரம் மானித்வம் (தற்பெருமை) முதலியவை அக்ஞானம். முயற்சிக்காமலிருப்பது சோம்பல். செய்யவேண்டிய காரியத்தைச் செய்ய சக்தி இருந்தும் செய்யாமலிருப்பது ப்ரமாதம். உள்ளது உள்ளபடி அறியாமலிருப்பது மௌட்யம். அவசியம் அறியவேண்டியதை அறியாமலிருப்பது ப்ரமாதம். அவசியம் செய்ய வேண்டிய காரியத்தை செய்யாமலிருப்பது ஆலஸ்யம். **(118)**

(**அவதாரிகை**) ரஜோ குணத்திற்கும் தமோ குணத்திற்கும் இடம் கொடுத்து விட்டால் மிகவும் கெடுதல் ஏற்படுமானதால் விலக்குவதற்காக அவைகளைப்பற்றி இதுவரை சொல்லிவிட்டு வாஸ்தவமாய் அவலம்பிக்க வேண்டியதாயுள்ள ஸத்வ குணத்தைப்பற்றி சொல்லவாரம்பிக்கிறுர். முன் 110 வது சுலோகத்தில் மூன்று குணங்களும் அடங்கிய மாயையே ஜகத் காரணம் என்று சொல்லியிருப்பதை யனுஸரித்து ஸம்ஸார தசையிலும் ஸத்வத்தின் கலப்பு இல்லாதபோனுல் அனுபவமே ஏற்படாது. ஆனுல் அவ்விதம் கலப்பதில் தமஸை கூடிய மட்டும் விலக்கி கொஞ்சம் ரஜோ குணமிருக்கும்வரை ஞான மார்க்கத்தில் போவதற்கு வேண்டிய யோக்கியதை ஏற்படு மென்றும், அவ்விரண்டையுமே விலக்கி சுத்தமான ஸத்வ குணத்தில் நிலைத்திருந்தால் ஞானமே ஸித்திக்கும் என்றும் எடுத்துக் காட்டுகிறுர்: -

**सत्त्वं विशुद्धं जलवत्तथापि ताभ्यां मिलित्वा सरणाय कल्पते ।**
**यत्रात्मबिम्बः प्रतिबिम्बितः सन्प्रकाशयत्यर्क इवाखिलं जडम् ॥ ११९ ॥**

**ஸத்த்வம் விஶுத்³த⁴ம் ஜலவத்ததா²பி தாப்⁴யாம்**
**மிலித்வா ஸரணய கல்பதே ।**
**யத்ராத்மபி³ம்ப³: ப்ரதிபி³ம்பி³த: ஸன்ப்ரகாஶயத்யர்க**
**இவாகி²லம் ஜட³ம் ॥ 119 ॥**

**यत्र** = எதனிடத்தில்,

**யத்ர**

**आत्म-बिम्बः** = ஆத்மாவாகிற பிம்பமானது,

**ஆத்ம-பி³ம்ப³:**

**प्रतिबिम्बितः** = பிரதிபிம்பமடைந்ததாக,

**ப்ரதிபி³ம்பி³த:**

**सन्** = இருந்துகொண்டு,

**ஸன்**

**अर्कः इव** = ஸூர்யன் போல,

**அர்க: இவ**

| | | |
|---|---|---|
| **अखिलं** <br> **அகி²லம்** | = | எல்லா, |
| **जडं** <br> **ஜட³ம்** | = | ஜடபதார்த்தத்தையும், |
| **प्रकाशयति** <br> **ப்ரகாஶயதி** | = | விளங்கச் செய்கிறதோ (அந்த), |
| **सत्त्वं** <br> **ஸத்த்வம்** | = | ஸத்வகுணம், |
| **जलवत्** <br> **ஜலவத்** | = | ஜலம் போல, |
| **विशुद्धं** <br> **விஶுத்³த⁴ம்** | = | நன்கு சுத்தமாயுள்ளது. |
| **तथा अपि** <br> **ததா² அபி** | = | அப்படி யிருந்தபோதிலும், |
| **ताभ्यां** <br> **தாப்⁴யாம்** | = | (ரஜோகுணம் தமோகுணம் ஆகிய) அவ்விரண்டுடன், |
| **मिलित्वा** <br> **மிலித்வா** | = | கலந்துகொண்டு, |
| **सरणाय** <br> **ஸரணாய** | = | ஸம்ஸாரத்தின் பொருட்டு, |
| **कल्पते** <br> **கல்பதே** | = | ஏற்பட்டு விடுகிறது. **(119)** |

**(அவதாரிகை)** ரஜோகுண தமோகுணங்களிருந்தாலும் அவைகளால் அடக்கப் படாத ஸத்வ குணத்தின் காரியங்களைக் கூறுகிறார்:

**मिश्रस्य सत्त्वस्य भवन्ति धर्मास्त्वमानिताद्या नियमा यमाद्याः ।**
**श्रद्धा च भक्तिश्च मुमुक्षुता च दैवी च सम्पत्तिरसन्निवृत्तिः ॥ १२० ॥**

**மிஶ்ரஸ்ய ஸத்த்வஸ்ய ப⁴வந்தி த⁴ர்மாஸ்த்வமானிதாத்³யா**
**நியமா யமாத்³யா: ।**
**ஶ்ரத்³தா⁴ ச ப⁴க்திஶ்ச முமுக்ஷுதா ச தை³வீ ச**
**ஸம்பத்திரஸந்நிவ்ருத்தி: ॥ 120 ॥**

| | | |
|---|---|---|
| **अमानिताद्या** <br> **அமானிதாத்³யா** | = | அமானித்வம் முதலான ஞானஸாதனங்கள், |
| **नियमा:** <br> **நியமா:** | = | நியமங்கள், |

| | | |
|---|---|---|
| **यमाद्याः**<br>**யமாத்³யாः** | = | யமங்கள் முதலான எட்டு யோகாங்கங்கள், |
| **श्रद्धा च**<br>**ஶ்ரத்³தா⁴ ச** | = | விசுவாசம், |
| **भक्तिः च**<br>**ப⁴க்திः ச** | = | (ஸாதனபக்தி, ஸாத்யபக்தி என்றுள்ள இரண்டுவித) பக்தி, |
| **मुमुक्षुता च**<br>**முமுக்ஷுதா ச** | = | ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட வேண்டுமென்ற ஆவல், |
| **दैवी च सम्पत्तिः**<br>**தை³வீ ச ஸம்பத்திः** | = | தைவீ ஸம்பத்து, |
| **असन्निवृत्तिः**<br>**அஸந்நிவ்ருத்திः** | = | கெட்ட காரியங்களிலிருந்து விலகிக்கொள்ளல் (ஆகிய இவையெல்லாம்) |
| **मिश्रस्य**<br>**மிஶ்ரஸ்ய** | = | (கொஞ்சம்) கலப்புள்ள |
| **सत्त्वस्य**<br>**ஸத்த்வஸ்ய** | = | ஸத்வகுணத்தினுடைய, |
| **धर्माः**<br>**த⁴ர்மாः** | = | தர்மங்களாக, |
| **भवन्ति**<br>**ப⁴வந்தி** | = | இருக்கின்றன. |

பகவத்கீதை 18 வது அத்யாயத்தில் ‘அமானித்வம்' முதலியவை (20) ஞானஸாதனமாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றில்: -

தன்னிடம் உள்ளதும் இல்லாததுமான குணங்களைக் கொண்டு தானே தன்னைப் புகழ்ந்துகொள்வது மானித்வம், இதை விலக்குவது அமானித்வம்.

புகழ், லாபம், மதிப்பு இவற்றிற்காகவே தர்மங்களைச் செய்வதுடன் இதை உலகில் பிரகடனம் செய்வது தம்பம். இதை விலக்குவது அதம்பித்வம்.

மனம், வாக்கு, உடல் என்னும் முக்கரணங்களாலும் பிறரைத் துன்புறுத்தா மலிருப்பது அஹிம்ஸை.

தன்னைப் பிறர் அவமதித்தபோதிலும் மனம் கலங்காமல் இருப்பது க்ஷாந்தி (பொறுமை.)

மனம், வாக்கு, காயம் மூன்றும் ஒரேமாதிரி இருப்பது ஆர்ஜவம் (நேர்மை).

நமஸ்காரம், ஸேவை, பிரச்நம் இவைகள்மூலம் குருவை அண்டியிருப்பது ஆசார்யோபாஸனம்.

மண், தீர்த்தம் இவைகளால் சரீரத்தில் வெளியிலுள்ள அழுக்கையும், நட்பு முதலான நல் வாஸனைகளாலும், உலக விஷயங்களின் தோஷங்களைச் சிந்திப்ப தாலும் உள் அழுக்கான ஆசை முதலியவைகளையும் போக்குவது சௌசம் (தூய் மை).

மோக்ஷ உபாயங்களைக் கடைப்பிடிக்கும்பொழுது எத்தனை இடைஞ்சல்கள் வந்த போதிலும் அவைகளை லக்ஷ்யம் செய்யாமல் திரும்பத் திரும்ப முயற்சிப்பது ஸ்தைர்யம் (நிலை நிறுத்தல்)

தேஹம் இந்திரியம் முதலியவைகள் முக்திக்கு எதிரான வழியில் செல்வ தைத் தடுத்து முக்திக்கு அனுகூலமான வழியில் போகும்படி செய்வது ஆத்மவிநி க்ரஹம் (தேஹேந்திரியாதிகளை அடக்குவது)

கண், காது முதலான புலன்களுக்கு விஷயமான, நேரில் பார்த்தும் கேட்டும் உள்ள ரூபம், சப்தம் முதலானவைகளில் பற்றின்மை வைராக்யம்.
நானே எல்லாவற்றிலும் பெரியவன் என்ற கர்வமில்லாமலிருப்பது அநஹங் காரம்.

கர்பத்தில் வஸித்து யோனி வழியாக வெளியே வருவது பிறப்பு, எல்லா மர்மஸ்தானங்களும் துண்டிக்கப்படுவது மரணம் புத்தி, பலம் சக்தி எல்லாம் அழிந்து எல்லோராலும் அவமதிக்கப்படும் நிலை மூப்பு, ஜ்வரம் முதலான வியாதிகள், வெறுக்கப்படும் பொருள் நம்மையடைவதாலும் விரும்பிய பொருள் நம்மை விட்டுப் பிரிந்து செல்வதாலும் ஏற்படும் ஆத்யாத்மிகம் முதலான துன்பங்கள், வாத - பித்த ச்லேஷ்மங்களும் மலம், மூத்ரம் முதலான துர் நாற்றப்பொருள்களும் சரீரத்திலுள்ள தோஷங்கள், பிறவி முதல் தோஷம் வரையுள்ளவைகளில் தீமைகளை அடிக்கடி சிந்தித்தல்.

புத்ரன் முதலானவர்களில் பற்றை நீக்குதல் அஸக்தி.

புத்ரன் முதலானவர்கள் இன்பமடையும்பொழுது தானே இன்பமடைவதாக வும், அவர்கள் துன்பப்படும்பொழுது தானே துன்பப்படுவதாகவும் எண்ணுமலிருப் பது அநபிஷ்வங்கம்.

நமக்கு இஷ்டமான போகப்பொருள் கிடைத்தபொழுது ஸந்தோஷமும், இஷ்ட மில்லாத வஸ்து கிடைத்தபொழுது துன்பமும் அடையாமல் எப்பொழுதும் மனதை ஸ்மமான நிலையில் வைத்திருத்தல்.

ஈசுவரனைத் தன்னைக்காட்டிலும் வேறாக நினைக்காமல் தனது ஆத்ம ஸ்வரூப மாக எண்ணி 'நானே பகவான் வாஸுதேவன்' என்ற தீர்மானத்துடன் மாறாத நிலையான பக்தி கொள்ளல்.

பரிசுத்தமான, மனதிற்கு தெளிவை உண்டாக்கும் இடத்தில் வஸிப்பது.

உலக போகங்களில் ஈடுபடும் ஜனக்கூட்டத்துடன் சேர்ந்து வாழ்வதில் பிரீதியில்லாமை.

ஆத்மாவைக் குறித்ததான அதாவது ஆத்மா வேறு, அநாத்மா வேறு என்று பிரித்தறிவது அத்யாத்ம ஞானம். அதிலேயே நிலைத்திருத்தல். த்வம் பதார்த்தமான ஜீவாத்ம ஸ்வரூபத்தை சோதித்தல்.

மஹாவாக்யார்த்த ஞானம் என்ற தத்வ ஞானத்தின் பலனான மோக்ஷத்தைப் பற்றி ஆலோசித்தல்.

சௌசம், ஸந்தோஷம், தபஸ், ஸ்வாத்யாயம், ஈசுவர பிரணிதானம் இவ்வைந் தும் பிறவிக்குக் காரணமான காம்ய கர்மாக்களை விலக்கி மோக்ஷத்திற்குக் காரணமான நிஷ்காம கர்மாவில் ஈடுபடும்படி நியமனம் செய்வதால் நியமங்கள் எனப்படும். இவற்றில் சௌசம் முன்னால் விவரிக்கப்பட்டது. கிடைத்ததில் திருப்தியடைவது ஸந்தோஷம். கிருச்ரம் சாந்த்ராயணம் முதலான விரதோபவா ஸாதிகளால் சரீரத்தை கிலேசப்படுத்துவது தவம். பிரணவம், காயத்ரீ முதலான மந்திரங்களை ஜபிப்பது ஸ்வாத்யாயம். தான் செய்யும் எல்லா கர்மாக்களையும் பலனை விரும்பாமல் ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்வது ஈசுவரப்ரணிதானம்.

அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம், ப்ரஹ்மசர்யம், அபரிக்ரஹம் இந்த ஐந்தும் யமங்கள். இவற்றில் அஹிம்ஸை முன்னால் விவரிக்கப்பட்டது. பொய் பேசாதிருத்தல் ஸத்யம், பிறர்பொருளை அபஹரிக்காமை அஸ்தேயம் எட்டு விதமான ஸ்த்ரீ ஸம்பந்தத்தை விலக்குதல் ப்ரஹ்மசர்யம் சரீரம் ஜீவிப்பதற்கு அவசியமாக வேண்டியதைத் தவிர மற்ற போகப் பொருள்களை சேகரிக்காமை அபரிக்ரஹம். யம நியமங்கள் தவிர ஆஸனம், பிராணாயாமம் ப்ரத்யாஹாரம், தாரணை, த்யானம், ஸமாதி என்னும் யோகாங்கங்களையும் ஆதிபதத்தால் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

ஆஸ்திக்ய புத்தி சிரத்தை, சிரவணம் முதலான ஒன்பதும் அபரபக்தி. இது பரம பிரேமை என்னும் பரபக்திக்கு ஸாதனம். ஸ்வஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தால் பந்தத்திலிருந்து விடுதலை அடையவேணுமென்ற தீவிரமான விருப்பம் முமுக்ஷு தை.

பகவத்கீதையில் 16 வது அத்யாயத்தில் கூறப்பட்ட அபயம் முதலான 26 ம் தைவ ஸம்பத்தாகும். அவற்றில் தன்னிடமிருந்து தனக்கு இஷ்டமான பொருள் பிரிந்து போவதையும் அநிஷ்டமான பொருள் வருவதையும் முன்னடியே காட்டக்

கூடிய சூழ்நிலை ஏற்பட்டாலும் அதைக்கண்டு துக்கமோ பயமோ அடையாமலிருப்பது அபயமாகும். அல்லது ஸந்தேகப்படாமல் சாஸ்திரத்தில் கூறப்பட்ட காரியங்களைச் செய்வதில் ஈடுபடுவது அபயம்

மனதில் சிறிதும் அழுக்கில்லாமல் பகவத் தத்வம் நன்கு விளங்கும்படி சுத்தமாக வைத்துக்கொள்வது ஸத்வஸம்சுத்தி, சாஸ்திரம் மூலமாகவும், ஆசார்யர் மூலமாகவும் ஆத்ம தத்வத்தை அறிவது ஞானம். மன ஒருமைப்பாடுடன் அறிந்த விஷயத்தை அனுபவத்திற்குக் கொண்டுவருவது யோகம். இவ்விரண்டிலேயே எப்பொழுதும் ஈடுபடுவது ஞானயோக வ்யவஸ்திதி.

தன் சக்திக்குத் தக்கபடி ஸத்பாத்ரத்திற்குத் தன் பொருளை கொடுப்பது தானம். வெளிப்புலன்களை அடக்குவது தமம். வேதத்தில் சொல்லப்பட்ட அக்னிஹோத்ரம், தர்ச பூர்ண மாஸம் முதலியவைகளும் ஸ்மிருதியில் கூறப்பட்ட தேவயஜ்ஞம் பித்ரு யஜ்ஞம், பூதயஜ்ஞம், மனுஷ்ய யஜ்ஞம் இவைகளும் யஜ்ஞமாகும். அத்ருஷ்டார்த்தமாக வேதாத்யயன ரூபமான ப்ரஹ்மயஜ்ஞம் ஸ்வாத்யாயம்.

தவம் சாரீரம், வாசிகம், மாநஸம் என்று மூன்றுவிதம். தேவதை, பிராமணர், ஆசாரியர், வித்வான் இவர்களைப் பூஜிப்பது, தூய்மை, நேர்மை, ப்ரஹ்மசர்யம், அஹிம்ஸை இவை சாரீரமான தவம்.

பிறர் மனதிற்கு பயத்தைக்கொடுக்காதபடி உண்மையாகவும், பிரியமானதும், ஹிதமானதுமான வார்த்தைகளைப் பேசுவதும், வேதாப்யாஸமும் வாசிக தவம்.

மனதில் தெளிவு, ஸுமுகமாக இருத்தல், மௌனம், மனதை அடக்குதல், சித்தசுத்தி இவை மானஸமான தவம்.

மனம், வாக்கு, சரீரம் மூன்றிலும் ஒரேமாதிரியாக நடத்தல், நேர்மை - ஆர்ஜவமாகும். பிறரைத் துன்புறுத்தாமல் இருப்பது அஹிம்ஸை. தான் நேரில் கண்டதையே பேசுவது ஸத்யம். பிறர் திட்டினாலும் அடித்தாலும் உடனே தன் மனதில் ஏற்படும் கோபத்தை அந்த சமயத்தில் அடக்குவது அக்ரோதம். துக்கத்தின் ஸங்கத்தை விலக்குவது த்யாகம். உட்புலனான மனதையடக்குவது சாந்தி.

பிறரின் தோஷங்களை வெளிப்படுத்தாமலிருப்பது அபைசுநம். பிறர் துன்பப்படுவதைக்கண்டு மனம் பொறுக்காமலிருப்பது தயை. போகப்பொருள்கள் அருகிலிருந்த போதிலும் அதைக்கண்டு மனதில் விகாரம் ஏற்படாமலிருப்பது அலோலுபத்வம். ஸாது ஜனங்களுடன் சேர்ந்து பழகுவதற்கு உள்ள தகுதி மார்தவம். கெட்ட காரியம் செய்வதில் வெட்கம், வீணான சேஷ்டைகளைச் செய்யாமலிருப்பது அசாபலம். பெண்கள், சிறுவர்கள், முட்டாள்கள் இவர்களால் அவமதிக்கப் படாமலிருப்பது தேஜஸ்.

தன்னையவமதித்தவர்களை அடக்குவதற்கு ஸாமர்த்யம் இருந்தபோதிலும் அவர்கள் விஷயமாக மனதில் கோபம் ஏற்படாமலிருப்பது க்ஷமை (பொறுமை)

(மனதில் தோன்றிய கோபத்தை உடனேயடக்குவது அக்ரோதம்) துன்பம் ஏற்படும் பொழுது கலங்கும் மனதைக் கட்டுப்படுத்தி நிலைநிறுத்துதல் த்ருதி. உள்ளும் வெளியும் தூய்மை சௌசம். பிறரை அடிக்க ஆயுதங்களை எடுக்காமலிருப்பது அத்ரோஹம். தன்னை எல்லோரும் கொண்டாட வேணும் என்ற எண்ணம் அதிகமாக இருப்பது அதிமானிதா. இது இல்லாமல் பெரியோர்களை வணங்குவது நாதிமானிதா.

பிறக்கும்பொழுது தேவர்களுக்குத் தக்கதான ஸாத்வீகமான நல்ல வாஸனை யாருக்கு வெளிப்படுகிறதோ, அவர்களிடம் அபயம் முதலான இந்த 26 குணங்களும் விளங்கும்.

கெட்ட காரியங்களை - பாபங்களை - விலக்குவது அல்லது ப்ரஹ்ம வ்யதிரிக்த மான எல்லாவற்றையும் விலக்குவது. அஸந்நிவிருத்தி. **(120)**

## विशुद्धसत्वस्य गुणाः प्रसादः स्वात्मानुभूतिः परमा प्रशान्तिः ।
## तृप्ति प्रहर्षः  परमात्मनिष्ठा यया सदानन्दरसं समृच्छति ॥ १२१ ॥

**விஶுத்3த4ஸத்வஸ்ய கு3ணா: ப்ரஸாத3: ஸ்வாத்மானுபூ4தி: பரமா ப்ரஶாந்தி: ।**
**த்ருப்தி ப்ரஹர்ஷ: பரமாத்மநிஷ்டா2 யயா ஸதா3னந்த3ரஸம் ஸம்ருச்ச2தி ॥121॥**

**विशुद्ध-सत्वस्य** = நன்கு (ரஜஸ் தமஸ் கலப்பில்லாமல்)
**விஶுத்3த4-ஸத்வஸ்ய** சுத்தமாயுள்ள ஸத்வகுணத்தினுடைய,

**गुणाः** = குணங்கள்,
**கு3ணா:**

**प्रसादः** = மனஸின் தெளிவு,
**ப்ரஸாத3:**

**स्व-आत्म-अनुभूतिः** = தன் ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம்,
**ஸ்வ-ஆத்ம-அனுபூ4தி:**

**परमा** = உத்தமமான,
**பரமா**

**प्रशान्तिः** = நல்ல சாந்தி,
**ப்ரஶாந்தி:**

**तृप्तिः** = திருப்தி,
**த்ருப்தி:**

**प्रहर्षः** = ஆனந்தம்,
**ப்ரஹர்ஷ:**

**यया** = எதினால்,
**யயா**

**सदानन्द-रसं** = எப்பொழுதும் ஆனந்த ரஸத்தை,
**ஸதா3னந்த3-ரஸம்**

| | | |
|---|---|---|
| **समृच्छति**<br>**ஸம்ருச்ச²தி** | = | நன்றாக அடைகிறானோ, அவ்வித, |
| **परम-आत्म निष्ठा**<br>**பரம-ஆத்ம நிஷ்டா²** | = | ஸர்வோத்க்ருஷ்டமான ஆத்மாவினிடத்திலேயே நிலைத்திருத்தல் (ஆகிய இவைகள்). **(121)** |

## 13. காரண சரீரம்

(**அவதாரிகை**) 110 வது சுலோகம் முதல் இதுவரை முக்குணங்கள் உள்ள மாயை என்றும் அவ்யக்தம் என்றும் சொல்லிவந்தது தான் காரண சரீரம் எனப்படும். ஸ்தூலம் ஸூக்ஷ்மம் முதலான ஸகல கார்யங்களுக்கும் காரணமாயிருப்பதாலும் ஞானத்தால் அழிந்துபோவதாலும் இதற்கு காரண சரீரம் என்று பெயர். அது தனித்துத் தெரியக்கூடிய அவஸ்தை ஸுஷுப்தி என்கிறார்: -

**अव्यक्तमेतत्त्रिगुणैर्निरुक्तं तत्कारणं नाम शरीरमात्मनः ।**
**सुषुप्तिरेतस्य विभक्त्यवस्था प्रलीनसर्वेन्द्रियवुद्धिवृत्तिः ॥ १२२ ॥**

**அவ்யக்தமேதத்ரிகு³ணைர்நிருக்தம் தத்காரணம் நாம ஶரீரமாத்மன: ।**
**ஸுஷுப்திரேதஸ்ய விப⁴க்த்யவஸ்தா² ப்ரலீனஸர்வேந்த்³ரியவுத்³தி⁴வ்ருத்தி:**
**॥ 122 ॥**

| | | |
|---|---|---|
| **त्रि-गुणैः**<br>**த்ரி-கு³ணை** | = | மூன்று குணங்களுடன் கூடியதாக, |
| **निरुक्तं**<br>**நிருக்தம்** | = | நிர்வசனம் செய்யப்பட்ட, |
| **एतत्**<br>**ஏதத்** | = | இந்த, |
| **अव्यक्त**<br>**அவ்யக்த** | = | அவ்யக்தம் என்கிற, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **आत्मनः**<br>**ஆத்மன:** | = | ஆத்மாவிற்கு, |
| **कारणं शरीरं**<br>**காரணம் ஶரீரம்** | = | காரணசரீரம் என்று (சாஸ்திரங்களில்) பிரஸித்தம்,. |
| **एतस्य**<br>**ஏதஸ்ய** | = | இதன், |
| **विभवित अवस्था**<br>**விப⁴வித அவஸ்தா²** | = | பிரித்து அறியக்கூடிய அவஸ்தை, |

**प्रलीन-सर्व-इन्द्रिय-वुद्धि-वृत्तिः** = எல்லா இந்திரியங்களுடையவும்,
**ப்ரலீன-ஸர்வ-இந்த்³ரிய-வுத்³தி⁴-வ்ருத்திஃ** (புத்தியினுடையவும் விருத்திகள் லயம் அடைந்திருப்பதான,
**सुषुप्तिः** = நல்ல தூக்கம்.
**ஸுஷுப்திஃ**

**(அவதாரிகை)** அந்த ஸமயத்தில் புத்திகூட அவ்யக்தத்தில் பீஜ ஸ்வரூபமாய் அடங்கியேயிருக்கிறதென்றும் அதிஞல்தான் அப்பொழுது எவ்வித அறிவும் தெரிகிற தில்ஜல யென்றும் விளக்குகிறுர்: -

**सर्वप्रकारप्रमितिप्रशान्तिर्बी जात्मनावस्थितिरेव बुद्धेः ।**
**सुषुप्तिरत्रास्य किल प्रतीतिः किंचिन्न वेद्मीति जगत्प्रसिद्धेः ॥ १२३ ॥**

**ஸர்வப்ரகாரப்ரமிதிப்ரஶாந்திர்பீ³ ஜாத்மனாவஸ்தி²திரேவ பு³த்³தே⁴ஃ ।**
**ஸுஷுப்திரத்ராஸ்ய கில ப்ரதீதிஃ கிஞ்சின்ன வேத்³மீதி ஜக³த்ப்ரஸித்³தே⁴ஃ ॥123॥**

**सर्व-प्रकार-प्रमिति-प्रशान्तिः** = எல்லாவிதமான (பிரத்யக்ஷம், அனுமானம்
**ஸர்வ-ப்ரகார-ப்ரமிதி-ப்ரஶாந்திஃ** முதலான) அறிவுகளும் நன்கு அடங்கி,
**बुद्धेः** = புத்தியின்,
**பு³த்³தே⁴ஃ**
**बीज आत्मना** = பீஜரூபமாக,
**பீ³ஜ ஆத்மனு**
**अवस्थितिरेव** = இருக்கும் தன்மைதான்,
**அவஸ்தி²திரேவ**
**सुषुप्तिः** = ஸுஷுப்தி (நல்ல தூக்கம்) என்பது,
**ஸுஷுப்திஃ**
**अत्र** = இவ்விஷயத்தில்,
**அத்ர**
**किल** = அல்லவா,
**கில**
**अस्य** = (தூங்கி எழுந்திருக்கும்) இவனுக்கு,
**அஸ்ய**
**किंचित्** = எதையும்,
**கிஞ்சித்**
**न वेद्मी** = நான் அறிவதில்ஜல,
**ந வேத்³மீ**
**इति** = என்று,
**இதி**

| | | |
|---|---|---|
| **प्रतीतिः** ப்ரதீதிঃ | = | ஞானமுண்டாகிறது என்று, |
| **जगत्प्रसिद्धेः** ஜக³த்ப்ரஸித்³தே⁴ঃ | = | உலகம் பூராவும் பிரஸித்தியிருப்பதால் (ஸுஷுப்தியை மறுக்கமுடியாது). **(123)** |

(**அவதாரிகை**) இவ்விதம் 74-வது சுலோகத்தில் ஸ்தூல சரீரத்தை சொல்ல வாரம்பித்து, முன் சுலோகத்தில் காரண சரீரத்தில் முடித்து, மத்தியில் ஜகத் காரணமான அவ்யக்தம், மூன்று குணங்கள், சப்தம் முதலிய விஷயங்கள், அவைகளை கிரஹிக்கும் இந்திரியங்கள், அத்த: காணம், ஸுகதுக்க அனுபவங்கள், பஞ்சமஹாபூதங்கள் முதலிய ஜகத்திலுள்ள ஸகல பதார்த்தங்களையும் சொல்லி விட்டு, இப்பொழுது இவை யெல்லாமே அனாத்மா, ஆத்மாவல்லாதது, என்று 'அனாத்மா எது?' என்று சிஷ்யன் 51-வது சுலோகத்தில் கேட்ட 5-வது கேள்விக்கு பதில் சொல்லி முடிக்கிறார்: -

**देहेन्द्रियप्राणमनोऽहमादयः सर्वे विकारा विषयाः सुखादयः ।**
**व्योमादिभूतान्यखिलं च विश्वमव्यक्तपर्यन्तमिदं ह्यनात्मा ॥ १२४ ॥**

**தே³ஹேந்த்³ரியப்ராணமனோ(அ)ஹமாத³யঃ ஸர்வே**
**விகாரா விஷயாঃ ஸுகா²த³யঃ ।**
**வ்யோமாதி³பூ⁴தான்யகி²லம் ச விஶ்வமவ்யக்தபர்யந்தமித³ம்**
**ஹ்யனாத்மா ॥ 124 ॥**

| | | |
|---|---|---|
| **देहे-इन्द्रिय-प्राण-मनो-अहं-आदयः** தே³ஹே-இந்த்³ரிய-ப்ராண-மனோ-அஹம்-ஆத³யঃ, | = | சரீரம், இந்திரியம்; பிராணன், மனஸ், அஹங்காரம் முதலியவைகளும் |
| **सर्वे** ஸர்வே | = | எல்லா, |
| **विकाराः** விகாரா: | = | மாறுபாடுகளும், |
| **विषयाः** விஷயாঃ | = | (சப்த ஸ்பர்சாதி) விஷயங்களும், |
| **सुख-आदयः** ஸுக²-ஆத³யঃ | = | ஸுகம் (துக்கம், காமம், குரோதம்) முதலியவைகளும், |
| **व्योम-आदि** வ்யோம-ஆதி³ | = | ஆகாசம் முதலான, |
| **भूतानि** பூ⁴தானி | = | பூதங்களும், |
| **अखिलं** அகி²லம் | = | எல்லா; |

| | | |
|---|---|---|
| **विश्वं च**<br>**விஶ்வம் ச** | = | ஜகத்தும், |
| **अव्यक्तपर्यन्तं**<br>**அவ்யக்தபர்யந்தம்** | = | (மூலகாரணமாயிருக்கும்) அவ்யக்தம் (என்ற மாயை) முடியவுள்ள, |
| **इदं**<br>**இத³ம்** | = | இது (எல்லாம்), |
| **अनात्मा हि**<br>**அனாத்மா ஹி** | = | அனாத்மாதான். |

**(124)**

**(அவதாரிகை)** தேஹம் முதல் மாயை முடிய எல்லாம் அனாத்மா வென்று சொன்னதையே திரும்ப திருஷ்டாந்தத்துடன் சொல்கிறார்: -

**माया मायाकार्यं सर्वं महदादि देहपर्यन्तम् ।**
**असदिदमनात्मतत्त्वं विद्धि त्वं मरुमरीचिकाकल्पम् ॥ १२५ ॥**

**மாயா மாயாகார்யம் ஸர்வம் மஹதா³தி³ தே³ஹபர்யந்தம் ।**
**அஸதி³த³மனாத்மதத்த்வம் வித்³தி⁴ த்வம் மருமரீசிகாகல்பம் ॥ 125 ॥**

| | | |
|---|---|---|
| **माया**<br>**மாயா** | = | மாயை, |
| **महत्-आदि**<br>**மஹத்-ஆதி³** | = | மஹத் தத்வம் முதல், |
| **देह-पर्यन्तं**<br>**தே³ஹ-பர்யந்தம்** | = | தேஹம் முடியவுள்ள, |
| **मायाकार्यं**<br>**மாயாகார்யம்** | = | மாயையினால் ஏற்பட்டிருப்பது ஆகிய, |
| **इदं**<br>**இத³ம்** | = | இந்த, |
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லாம், |
| **असत्**<br>**அஸத்** | = | வாஸ்தவமில்லாததாயும், |
| **मरु-मरीचिका-कल्पम्**<br>**மருமரீசிகாகல்பம்** | = | பொட்டல் பூமியில் தோன்றும் கானல்போலுள்ளதாயுமுள்ள, |
| **अनात्म तत्त्वं**<br>**அனாத்ம தத்த்வம்** | = | அனாத்மத் தன்மையுடையதென்று, |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |

विद्धि = அறிந்துகொள்.
வித்³தி⁴ (125)

## 14. ஆத்ம ஸ்வரூபம்

(**அவதாரிகை**) 51-வது சுலோகத்திலேயே ஆத்மா யார் என்று 6-வது கேள்வி யாகக் கேட்டதற்கு குருநாதர் பதில் சொல்ல வாரம்பிக்கிறுர்: -

**अथ ते सम्प्रवक्ष्यामि स्वरूपं परमात्मनः ।**
**यद्विज्ञाय नरो बन्धान्मुक्तः कैवल्यमश्नुते ॥ १२६ ॥**

**அத² தே ஸம்ப்ரவக்ஷ்யாமி ஸ்வரூபம் பரமாத்மனঃ ।**
**யத்³விஜ்ஞாய நரோ ப³ந்தா⁴ன்முக்தঃ கைவல்யமஶ்னுதே ॥ 126 ॥**

अथ = (அனுத்மாவைப் பற்றி சொல்லியானபிறகு)
அத² இனி,
नरः = மனுஷ்யன்,
நரঃ
यत् = எதை,
யத்
विज्ञाय = நன்கு அறிந்து,
விஜ்ஞாய
बन्धात् = ஸம்ஸாரபந்தத்திலிருந்து,
ப³ந்தா⁴த்
मुक्तः = விடுபட்டு,
முக்தঃ
कैवल्यं = தனித்து (ஸச்சிதாநந்தரூபமாய் ஏகமாய்)
கைவல்யம் இருக்கும் தன்மையை,
अश्नुते = அடைவாஞே (அந்த),
அஶ்னுதே
परमात्मनः = மேலான ஆத்மாவினுடைய,
பரமாத்மனঃ
स्वरूपं = ஸ்வரூபத்தை,
ஸ்வரூபம்
ते = உனக்கு,
தே
सम्प्रवक्ष्यामि = தெளிவாய் விஸ்தாரமாய் சொல்லுகிறேன்.
ஸம்ப்ரவக்ஷ்யாமி (126)

**(அவதாரிகை)** அறிவிற்கு விஷயமாகாத ஒரு பதார்த்தத்தின் தன்மையைப் பற்றி சொல்வதென்றால், ஏற்கனவே அனுபவத்திற்கு விஷயமாயுள்ளதை எடுத்துக் கொண்டு அதன் மூலமாகவே உபதேசித்தால் தான் அத்தன்மை ஒருவாறு தெரிய வரும். இந்த நியாயத்தை அனுசரித்தே ஆத்மாவின் தன்மையைச் சொல்கிறுர். எல்லாப் பிராணிகளாலும் ஏகோபித்து 'நான்' 'நான்' என்று, இன்னொருவர் சொல்லித் தெரிவதற்கு அவசியமில்லாமல், தானே உணர்ந்துவரும் தத்வமே ஆத்மா. விழிப்பு, கனவு, தூக்கம் இம்மூன்று நிலைகளிலும் தான் வேறுபடாமலிருந்துகொண்டு அவைகளைப் பார்த்துக் கொண்டிருப்பவர் ஆத்மா. சரீரம், பிராணன், மனஸ், புத்தி முதலியவைகளின் இருப்பையும், அவைகளின் வியாபாரங்களையும், அவைகளின் மறைவையும் அறிந்து கொண்டேயிருக்கும் தத்வம் ஆத்மா என்கிறுர்: -

**अस्ति कश्चित्स्वयं नित्यमहम्प्रत्ययलम्बनः ।**
**अवस्थात्रयसाक्षी सन्पञ्चकोश विलक्षण ॥ १२७ ॥**

**அஸ்தி கஶ்சித்ஸ்வயம் நித்யமஹம்ப்ரத்யயலம்ப³ன: ।**
**அவஸ்தா²த்ரயஸாக்ஷீ ஸன்பஞ்சகோஶ விலக்ஷண ॥ 127 ॥**

| | | |
|---|---|---|
| **स्वयं** ஸ்வயம் | = | தாஞகவே (வேறு எதையும் எதிர்பார்க்காமல்), |
| **नित्यं** நித்யம் | = | எப்பொழுதும், |
| **अहं- प्रत्यय-लम्बनः** அஹம்- ப்ரத்யய-லம்ப³ன: | = | 'நான்' என்கிற எண்ணத்திற்கு ஆசிரயமாய், |
| **अवस्था-त्रय-साक्षी** அவஸ்தா²-த்ரய-ஸாக்ஷீ | = | (ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தியென்ற) அவஸ்தைகள் மூன்றுக்கும் ஸாக்ஷியாய், |
| **पञ्च-कोश विलक्षणः** பஞ்ச-கோஶ விலக்ஷண: | = | (அன்னமயம், பிராணமயம், மனேமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம் என்கிற) ஐந்து கோசங்களுக்கு விருத்தமான லக்ஷணத்துடன் வேறுபட்டதாய், |
| **सन्** ஸன் | = | இருக்கிற, |
| **कश्चित्** கஶ்சித் | = | ஒரு பதார்த்தம், |
| **अस्ति** அஸ்தி | = | இருக்கிறது. (அதுவே ஆத்மா). **(127)** |

**(அவதாரிகை)** ஆத்மா அவஸ்தாத்ரயஸாக்ஷி என்பதைக் காட்டுகிறுர்: -

**यो विजानाति सकलं जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।**
**बुद्धितद्वृत्तिसद्भावमभावमहमित्ययम् ॥ १२८ ॥**

**யோ விஜாநாதி ஸகலம் ஜாக்³ரத்ஸ்வப்னஸுஷுப்திஷு ।**
**பு³த்³தி⁴தத்³வ்ருத்திஸத்³பா⁴வமபா⁴வமஹமித்யயம் ॥ 128 ॥**

| | | |
|---|---|---|
| **य:** | = | எது, |
| **ய:** | | |
| **जाग्रत्-स्वन-सुषुप्तिषु** | = | ஜாக்கிரத் (விழிப்பு), ஸ்வப்னம் (கனவு), |
| **ஜாக்³ரத்-ஸ்வன-ஸுஷுப்திஷு** | | ஸுஷுபதி (நல்ல தூக்கம்) (ஆகிற மூன்று அவஸ்தை) களிலும், |
| **सकलं** | = | (விழிப்பில் வெளியுலகத்திலுள்ள பதார்த்தங்கள், |
| **ஸகலம்** | | கனவில் வாஸனைகளால் கல்பிக்க ப்பட்டு உள்ளேயிருப்பதாய் தோன்றும் பதார்த்தங்கள், நல்ல தூக்கத்தில் ஒன்றையும் தெரிய வொட்டாமலடிக்கும் அக்ஞானம் ஆகிய இவை) எல்லாவற்றையும், |
| **बुद्धि-तद्वृत्ति-सद्भावं** | = | (விழிப்பிலும் கனவிலும்) புத்தியினுடையவும் |
| **பு³த்³தி⁴-தத்³வ்ருத்தி-ஸத்³பா⁴வம்** | | அதன் வியாபாரங்களுடையவும் இருக்கும் தன்மையையும்), |
| **अभावं** | = | (நல்ல தூக்கத்தில் அவைகள்) |
| **அபா⁴வம்** | | லயத்தையடைந்திருக்கும் தன்மையையும், |
| **अहं** | = | 'நான்' |
| **அஹம்** | | |
| **इति** | = | என்று (இருந்துகொண்டு), |
| **இதி** | | |
| **विजानाति** | = | நன்கு அறிகிறதோ, |
| **விஜாநாதி** | | |
| **अयं** | = | இது (ஆத்மா). |
| **அயம்** | | **(128)** |

**(அவதாரிகை)** இந்த ஞானஸ்வரூபமான ஆத்மா எல்லாவற்றையும் அறியுமே தவிர தான் மட்டும் வேறு எதினாலும் அறியப்படக் கூடியதில்லை. இது எல்லா பதார்த்தங்களிலும் ஊடுருவி வியாபித்திருக்குமே தவிர தான் மட்டும் வேறு எதினாலும் வியாபிக்கப்படுவதில்லை. இது எல்லா பதார்த்தங்களையும் பிரகாசிக்கச் செய்யுமே தவிர தான் மட்டும் வேறு எதினாலும் பிரகாசிக்கப்படுவதில்லை என்கிறார்:-

**य: पश्यति स्वयं सर्वं यं न पश्यति किंचन ।**
**यश्चेतयति बुद्ध्यादि न तद्यं चेतयत्ययम् ॥ १२९ ॥**

**ய: பஶ்யதி ஸ்வயம் ஸர்வம் யம் ந பஶ்யதி கிஞ்சன ।**
**யஶ்சேதயதி பு3த்3த்4யாதி3 ந தத்3யம் சேதயத்யயம் ॥ 129 ॥**

| | | |
|---|---|---|
| **यः**<br>**ய:** | = | எவர், |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தானே (எவ்வித ஸஹாயமோ, கருவியோ இல்லாமல்), |
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லாவற்றையும், |
| **पश्यति**<br>**பஶ்யதி** | = | பார்க்கிறாரோ (அறிகிறாரோ), |
| **यं**<br>**யம்** | = | எவரை, |
| **किंचन**<br>**கிஞ்சன** | = | எதுவும், |
| **न पश्यति**<br>**ந பஶ்யதி** | = | பார்ப்பது கிடையாதோ, |
| **यः**<br>**ய:** | = | எவர், |
| **बुद्ध्यादि**<br>**பு3த்3த்4யாதி3** | = | புத்தி (மனஸ், பிராணன், இந்திரியங்கள், சரீரம்) முதலானவைகளை, |
| **चेतयति**<br>**சேதயதி** | = | அறிவுள்ளதுபோல் செய்கிறாரோ, |
| **यं**<br>**யம்** | = | எவரை, |
| **तत्**<br>**தத்** | = | அவைகளில் யாதொன்றும், |
| **चेतयति**<br>**சேதயதி** | = | அறிவுள்ளதாகச் செய்ய, |
| **न**<br>**ந** | = | முடியாதோ, |
| **अयं**<br>**அயம்** | = | இவர் (ஆத்மா). |

**(129)**

**येन विश्वमिदं व्याप्तं यं न व्याप्नोति किंचन ।**
**अभारूपमिदं सर्वं यं भान्तमनुभात्ययम् ॥ १३० ॥**

**யேன விஶ்வமித³ம் வ்யாப்தம் யம் ந வ்யாப்னோதி கிஞ்சன ।**
**அபா⁴ரூபமித³ம் ஸர்வம் யம் பா⁴ந்தமனுபா⁴த்யயம் ॥ 130 ॥**

| | | |
|---|---|---|
| **येन** **யேன** | = | எவரால், |
| **इदं** **இத³ம்** | = | இந்த, |
| **विश्वं** **விஶ்வம்** | = | ஜகத், |
| **व्याप्तं** **வ்யாப்தம்** | = | வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, |
| **यं** **யம்** | = | எவரை, |
| **किंचन** **கிஞ்சன** | = | எதுவும், |
| **न व्याप्नोति** **ந வ்யாப்னோதி** | = | வியாபிக்கிறதில்லையோ, |
| **अभारूपं** **அபா⁴ரூபம்** | = | பிரகாசத் தன்மையற்ற, |
| **इदं** **இத³ம்** | = | இது, |
| **सर्वं** **ஸர்வம்** | = | எல்லாம், |
| **भान्तं** **பா⁴ந்தம்** | = | பிரகாசித் துக்கொண்டிருக்கிற, |
| **यं** **யம்** | = | எவரை, |
| **अनु भाति** **அனு பா⁴தி** | = | தழுவிப் பிரகாசிக்கிறதோ, |
| **अयं** **அயம்** | = | இவர் (ஆத்மா). |

**(130)**

(**அவதாரிகை**) புத்தி முதலானதுகளை அறிவுள்ளவைபோல சேஷ்டிக்கச் செய்வதில் அவைகளை யஜமானன் வேலைக்காரர்களை ஏவுகிறதுபோல் அல்ல, தன்னுடைய இருப்பினுலேயே அவைகள் வேலை செய்கின்றன என்கிறுர்: -

**यस्य संनिधिमात्रेण देहेन्द्रियमनोधियः ।**
**विषयेषु स्वकीयेषु वर्तन्ते प्रेरिता इव ॥ १३१ ॥**

**யஸ்ய ஸம்நிதி⁴மாத்ரேண தே³ஹேந்த்³ரியமனோதி⁴ய꞉ ।**
**விஷயேஷு ஸ்வகீயேஷு வர்தந்தே ப்ரேரிதா இவ ॥ 131 ॥**

| | | |
|---|---|---|
| **देहे-इन्द्रिय-मनः-धियः** தே³ஹே-இந்த்³ரிய-மன꞉-தி⁴ய꞉ | = | சரீரம், இந்திரியங்கள், மனஸ், புத்தி இவைகள், |
| **यस्य** யஸ்ய | = | எவருடைய, |
| **संनि-धिमात्रेण** ஸம்நிதி⁴-மாத்ரேண | = | ஸன்னிதி (முன் இருப்பு) மாத்திரத்தால், |
| **स्वकीयेषु** ஸ்வகீயேஷு | = | தங்கள் தங்களுக்கு உரிய, |
| **विषयेषु** விஷயேஷு | = | விஷயங்களில், |
| **प्रेरिता इव** ப்ரேரிதா இவ | = | ஏவப்பட்டவைகள்போல, |
| **वर्तन्ते** வர்தந்தே | = | ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றனவோ (அவர் ஆத்மா). **(181)** |

**अहंकारादिदेहान्ता विषयाश्च सुखादयः ।**
**वेद्यन्ते घटवद्येन नित्यबोधस्वरूपिणा ॥ १३२ ॥**

**அஹங்காராதி³தே³ஹாந்தா விஷயாஸ்ச ஸுகா²த³ய꞉ ।**
**வேத்³யந்தே க⁴டவத்³யேன நித்யபோ³த⁴ஸ்வரூபிணா ॥ 132 ॥**

| | | |
|---|---|---|
| **अहंकारादि देहान्ताः** அஹங்காராதி³ தே³ஹாந்தா | = | அஹங்காரம் முதல் தேஹம் வரை (ஐந்து கோசங்கள்) யாவும், |
| **विषयाः च** விஷயா꞉ ச | = | (சப்தம், முதலிய) விஷயங்களும், |
| **सुखादयः** ஸுகா²த³ய꞉ | = | ஸுகம் (துக்கம், காமம், குரோதம்) முதலியவைகளும், |
| **नित्य-बोध-स्वरूपिणा** நித்யபோ³த⁴ஸ்வரூபிணா | = | நித்யமாயுள்ள அறிவு ஸ்வரூபமாயிருக்கும், |
| **येन** யேன | = | எவரால், |
| **घटवत्** க⁴டவத் | = | (வெளியிலுள்ள ஜடமான) குடம் போலவே, |

| | | |
|---|---|---|
| **वेद्यन्ते**<br>**வேத்³யந்தே** | = | அறியப்படுகின்றனவோ, (அவர் ஆத்மா). (132) |

## एषोऽन्तरात्मा पुरुषः पुराणो निरन्तराखण्डसुखानुभूतिः ।
## सदैकरूपः प्रतिबोधमात्रो येनेषिता वागसवश्चरन्ति ॥ १३३ ॥

**ஏஷோ(அ)ந்தராத்மா புருஷ: புராணோ நிரந்தராக²ண்ட³ஸுகா²னுபூ⁴தி: ।**
**ஸதை³கரூப: ப்ரதிபோ³த⁴மாத்ரோ யேனேஷிதா வாக³ஸவஸ்சரந்தி ॥ 133 ॥**

| | | |
|---|---|---|
| **येन**<br>**யேன** | = | எவரால், |
| **इषिताः**<br>**இஷிதா:** | = | இச்சிக்கப்பட்டு, |
| **वाक्**<br>**வாக்** | = | வாக்கு (முதலான இந்திரியங்கள்), |
| **असवः**<br>**அஸவ:** | = | (பிராணன், அபானன் முதலான) பிராணன்கள், |
| **चरन्ति**<br>**சரந்தி** | = | சேஷ்டிக்கின்றனவோ, |
| **एषः**<br>**ஏஷ:** | = | இவர் (தான்), |
| **अन्तः-आत्मा**<br>**அந்த:-ஆத்மா** | = | (ஐந்து கோசங்களுக்கும்) உள்ளேயிருக்கும் ஆத்மா. (அவர்), |
| **पुरुषः**<br>**புருஷ:** | = | (சரீராதிகளான) நகரத்தில் இருப்பவர், |
| **पुराणः**<br>**புராண:** | = | எப்பொழுதும் இருந்துவருகிறவர், |
| **निरन्तर-अखण्ड-सुखानुभूतिः**<br>**நிரந்தர-அக²ண்ட³-ஸுகா²னுபூ⁴தி:** | = | இடைவெளியன்னியில் பரிபூர்ணமான ஆனந்த அனுபவ ஸ்வரூபமாயுள்ளவர், |
| **सदा:**<br>**ஸதா³:** | = | எப்பொழுதும், |
| **एकरूपः**<br>**ஏகரூப:** | = | ஒரே (மாறுதலன்னியிலுள்ள) ஸ்வரூபமுள்ளவர், |
| **प्रतिबोध-मात्रः**<br>**ப்ரதிபோ³த⁴-மாத்ர:** | = | ஒவ்வொரு சிறு அறிவிலும் அறிவு ரூபமாய் அறியத்தகுந்தவர் (அல்லது அக்ஞானமாகிய தூக்கத்திலிருந்து விழித்தவுடன் அறியத் தகுந்தவர்). (133) |

**(அவதாரிகை)** அவரைத் தேடுவதற்கு எங்கேயும் போகவேண்டாம் நமக்குள்ளேயேயிருக்கிறுர். ஏனெனில் பரமாத்மாதான் நம் சரீரத்தில் ஜீவாத்ம ரூபமாக விளங்குகிறுர். ஜீவஸ்வரூபத்தை நன்கு சோதித்துப் பார்த்தால் அதுவே தத்பதார்த்தமான பரமாத்மா என்கிறுர்: -

**अत्रैव सत्त्वात्मनि धीगुहायामव्याकृताकाश उरुप्रकाशः ।**
**आकाश उच्चै रविवत्प्रकाशते स्वतेजसा विश्वमिदं प्रकाशयन् ॥ १३४ ॥**

**அத்ரைவ ஸத்த்வாத்மனி தீ⁴கு³ஹாயாமவ்யாக்ருதாகாஶ உருப்ரகாஶः ।**
**ஆகாஶ உச்சை ரவிவத்ப்ரகாஶதே ஸ்வதேஜஸா விஶ்வமித³ம் ப்ரகாஶயன் ॥134॥**

**अत्र एव** = இங்கேயே (இந்த ஸ்தூலசரீரத்திற்கு உள்ளேயே),
**அத்ர ஏவ**
**सत्त्वात्मनि** = ஸத்வகுணப் பிரதானமாயிருக்கிற,
**ஸத்த்வாத்மனி**
**धी गुहायां** = புத்தியாகிற குஹைக்குள் (ஸூக்ஷ்ம
**தீ⁴ கு³ஹாயாம்** சரீரத்திற்கும் உள்ளே),
**अव्याकृत-आकाशे** = (அவ்விரண்டு சரீரங்களுக்கும் காரணமாயிருக்கும்)
**அவ்யாக்ருத-ஆகாஶே** அவ்யாகிருதமாகிய (அவ்யக்தம், மாயை, அவித்யை என்று சொல்லப்படும்) வெட்ட வெளியில் (காரண சரீரத்திற்கும் உள்ளே),
**उरुप्रकाशः** = வெகு பிரகாசமுள்ளவராய்,
**உருப்ரகாஶः**
**आकाशः** = எங்கும் (ஞானத்தினுல் வியாபித்து)
**ஆகாஶ:** பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஆத்மா,
**स्वतेजसा** = தன்னுடைய தேஜஸினுல்,
**ஸ்வதேஜஸா**
**इदं** = இந்த,
**இத³ம்**
**विश्वं** = ஜகத்தை,
**விஶ்வம்**
**प्रकाशयन्** = பிரகாசிக்கும் படிச் செய்துகொண்டு,
**ப்ரகாஶயன்**
**उच्चै** = மேலானதாக,
**உச்சை**
**रविवत्** = ஸூர்யனைப் போல,
**ரவிவத்**

| | | |
|---|---|---|
| **प्रकाशते**<br>**ப்ரகாஶதே** | = | பிரகாசிக்கிருர். |

ஸூர்யன் உயரவிருப்பதினுலேயே பதார்த்தங்கள் தாஞகவே விளங்குகின்றனவே தவிர, அவைகளை விளக்குவதற்காக ஸூர்யன் எவ்வித பிரவிருத்தியும் செய்வது கிடையாது. விளக்கப்படும் பதார்த்தங்களில் ஏற்படும் மாறுதலும் ஸூர்யஜன மாறுதலடையச் செய்யாது என்று தாத்பர்யம். **(134)**

(**அவதாரிகை**) அதே விஷயத்தை அக்னியை திருஷ்டாந்தமாகக் கூறி, ஆத்மாவிற்கு எவ்வித விகாரமும் கிடையாதென்பதை தெளிவுபடுத்துகிருர்: -

**ज्ञाता मनोहंकृतिविक्रियाणां देहेन्द्रियप्राणकृतक्रियाणाम् ।**
**अयोग्निवत्तानानु वर्तमानो न चेष्टते नो विकरोति किंचन ॥ १३५ ॥**

**ஜ்ஞா²தா மஞேஹங்க்ருதிவிக்ரியாணும் தே³ஹேந்த்³**
**ரியப்ராணக்ருதக்ரியாணும் ।**
**அயோக்³னிவத்தானனு வர்தமாஞே ந சேஷ்டதே**
**நோ விகரோதி கிஞ்சன ॥ 135 ॥**

| | | |
|---|---|---|
| **मनः अहंकृति-विक्रियाणां**<br>**மனः அஹங்க்ருதி-விக்ரியாணும்** | = | மனஸ், அஹங்காரம் இவைகளின் மாறுதல்களையும், |
| **देहे-इन्द्रिय-प्राण-कृत-क्रियाणां**<br>**தே³ஹே-இந்த்³ரிய-ப்ராண-க்ருத-க்ரியாணும்** | = | தேஹம், இந்திரியங்கள், பிராணன் இவை செய்யும் வியாபாரங்களையும், |
| **ज्ञाता**<br>**ஜ்ஞா²தா** | = | (ஸாக்ஷியாய் இருந்து கொண்டு) அறிகிறவராய், |
| **तान्**<br>**தான்** | = | (மனஸ், தேஹம் முதலிய) அவைகளை, |
| **अनु**<br>**அனு** | = | ஒட்டி, |
| **वर्तमानः**<br>**வர்தமானः** | = | இருந்து கொண்டு, |
| **अयोग्निवत्**<br>**அயோக்³னிவத்** | = | இரும்பில் தோன்றும் அக்னியைப் போலவே, |
| **न चेष्टते**<br>**ந சேஷ்டதே** | = | எவ்வித வியாபாரமும் செய்வதில்லை, |
| **किंचन**<br>**கிஞ்சன** | = | வேறு எதையும், |

**नो विकरोति** = மாறுதலடையச் செய்வதுமில்லை.

**நோ விகரோதி**

இரும்புக்கம்பியை பழுக்கப் பழுக்கக் காய்ச்சினால் அதில் தோன்றும் அக்னி அந்த கம்பி வளைவாயிருந்தால் வளைவாகவும் வட்டமாகவிருந்தால் வட்டமாகவும், தோன்றினபோதிலும் இவ்வித ரூபங்கள் வாஸ்தவத்தில் அக்னியிடத்தில் கிடையாது. அதேபோல தேஹாதிகளின் ஸம்பந்தத்தால் அவைகளிலுள்ள குணங்களும் ஆத்மாவிடத்தில் தோன்றினபோதிலும் அவை ஆத்மாவைச் சேர்ந்த தல்ல. **(135)**

(**அவதாரிகை**) மாறுதல்கள் எல்லாம் ஆத்மாவல்லாததற்குத் தான் உண்டே தவிர ஆத்மாவிற்குக் கிடையாது என்கிறார்: -

**न जायते नो म्रियते न वर्धते न क्षीयते नो विकरोति नित्यः ।**
**विलीयमानेऽपि वपुष्यमुष्मिन्न लीयते कुम्भ इवाम्बरं स्वयम् ॥ १३६ ॥**

**ந ஜாயதே நோ ம்ரியதே ந வர்த⁴தே ந க்ஷீயதே நோ விகரோதி நித்யः ।**
**விலீயமானே(அ)பி வபுஷ்யமுஷ்மின்ன லீயதே கும்ப⁴ இவாம்ப³ரம் ஸ்வயம்**
**॥ 136 ॥**

(இந்த ஆத்மா),

**नित्यः** = நித்யமாயிருப்பவர் (என்றைக்கும் ஒரே மாதிரியாயிருப்பவர்),

**நித்யः**

**न जायते** = அவர் பிறப்பதில்லை,

**ந ஜாயதே**

**नो म्रियते** = இறப்பதில்லை,

**நோ ம்ரியதே**

**न वर्धते** = வளர்வதில்லை,

**ந வர்த⁴தே**

**न क्षीयते** = குறைவதில்லை,

**ந க்ஷீயதே**

**नो विकरोति** = மாறுபடுவதில்லை,

**நோ விகரோதி**

**अमुष्मिन्** = இந்த,

**அமுஷ்மின்**

**वपुषि** = சரீரம்,

**வபுஷி**

**विलीय-माने अपि** = நன்கு நாசமடைந்தாலும்கூட,

**விலீய-மானே அபி**

**कुम्भे** = குடம் (நாசமடையும்போது) (அதிலுள்ள),
**கும்பே⁴**
**अम्बरं** = ஆகாசம் (எப்படி நாசமடைவதில்லையோ),
**அம்ப³ரம்**
**इव** = அதைப்போலவே, (ஆத்மாவும்),
**இவ**
**स्वयं** = தான்,
**ஸ்வயம்**
**न लीयते** = நாசமடைவது கிடையாது.
**ந லீயதே** **(136)**

(**அவதாரிகை**) அவர் சுத்தஞானஸ்வரூபர் என்பதைச் சொல்கிறுர்: -

**प्रकृतिविकृतिभिन्नः शुद्धबोधस्वभावः**
**सदसदिदमशेषं भासयन्निर्विशेषः ।**
**विलसति परमात्मा जाग्रदादिष्ववस्था-**
**स्वहमहमिति साक्षात्साक्षिरूपेण बुद्धे ॥ १३७ ॥**

**ப்ரக்ருதிவிக்ருதிபி⁴ன்ன: ஶுத்³த⁴போ³த⁴ஸ்வபா⁴வ:**
**ஸத³ஸதி³த³மஶேஷம் பா⁴ஸயந்நிர்விஶேஷ: ।**
**விலஸதி பரமாத்மா ஜாக்³ரதா³தி³ஷ்வவஸ்தா²-**
**ஸ்வஹமஹமிதி ஸாக்ஷாத்ஸாக்ஷிரூபேண பு³த்³தே⁴ ॥ 137 ॥**

**परमात्मा** = உத்தமமான ஆத்மாவானவர்,
**பரமாத்மா**
**प्रकृति विकृतिभिन्नः** = காரணம், கார்யம் இரண்டிற்கும்
**ப்ரக்ருதி விக்ருதிபி⁴ன்ன:** வேறுபட்டவராய்,
**शुद्ध-बोध-स्वभावः** = சுத்தமான அறிவையே ஸ்வரூபமாயுள்ளவராய்,
**ஶுத்³த⁴போ³த⁴ஸ்வபா⁴வ:**
**सत्** = வியக்தமாய் தெரியக்கூடிய தேஜஸ், ஜலம்,
**ஸத்** பிருதிவீ,
**असत्** = வியக்தமாய் தெரியக்கூடாததாயிருக்கிற
**அஸத்** ஆகாசம், வாயு முதலிய,
**इदं** = இது,
**இத³ம்**
**अशेषं** = பாக்கியன்னியில் எல்லாவற்றையும்,
**அஶேஷம்**

**भासयन्** = விளங்கும்படிச்செய்கிறவராய்,
**பா⁴ஸயன்** (ஆனால் தான் மாத்திரம்),
**निर्विशेषः** = எவ்வித குணமுமன்னியில் இருப்பவராய்,
**நிர்விஶேஷ:** (இருந்துகொண்டு),
**जाग्रदादिषु** = ஜாக்ரத் (ஸ்வப்னம், ஸுஷுப்தி) முதலான,
**ஜாக்³ரதா³தி³ஷு**
**अवस्थासु** = அவஸ்தைகளில்,
**அவஸ்தா²ஸு**
**साक्षात्** = நேரிடையாய்,
**ஸாக்ஷாத்**
**अहं अहं इति** = 'நான்' 'நான்' என்று,
**அஹம் அஹம் இதி**
**बुद्धे** = புத்திக்கு,
**பு³த்³தே⁴**
**साक्षि रूपेण** = (எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கிற)
**ஸாக்ஷி ரூபேண** ஸாக்ஷியென்ற ரூபத்துடன்,
**विलसति** = நன்கு விளங்குகிறார்.
**விலஸதி** **(137)**

(**அவதாரிகை**) மனஸ் அலையற்று நின்று புத்தி தெளிவடையுமானால் இவ்வாத்மாவை நேரில் ஸாக்ஷாத்கரித்து ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு விடலாமென்று குரு சிஷ்யனுக்கு போதிக்கிறார்: -

**नियमितमनसामुं त्वं स्वमात्मानमात्म-**
**न्ययमहमिति साक्षाद्विद्धि बुद्धिप्रसादात् ।**
**जनिमरणतरङ्गापारसंसारसिन्धुं**
**प्रतर भव कृतार्थो ब्रह्मरूपेण संस्थः ॥ १३८ ॥**

**நியமிதமனஸாமும் த்வம் ஸ்வமாத்மானமாத்ம-**
**ந்யயமஹமிதி ஸாக்ஷாத்³வித்³தி⁴ பு³த்³தி⁴ப்ரஸாதா³த் ।**
**ஜனிமரணதரங்கா³பாரஸம்ஸாரஸிந்து⁴ம்**
**ப்ரதர ப⁴வ க்ருதார்தோ² ப்³ரஹ்மரூபேண ஸம்ஸ்த²: ॥ 138 ॥**

**त्वं** = நீ,
**த்வம்**
**अमुं** = இந்த,
**அமும்**

| | | |
|---|---|---|
| स्वं<br>ஸ்வம் | = | உன்னுடைய, |
| आत्मानं<br>ஆத்மானம் | = | ஆத்மாவை, |
| आत्मानि<br>ஆத்மானி | = | தன்னிடத்திலேயே, |
| नियमित-मनसा<br>நியமித-மனஸா | = | நன்கு கட்டுப்படுத்தப்பட்ட மனஸினுல், |
| बुद्धि प्रसादात्<br>பு$^3$த்$^3$தி$^4$ ப்ரஸாதா$^3$த் | = | (ஸம்சயம் முதலிய எவ்வித கலக்கமுமன்னியில்) புத்தி தெளிவடைந்துவிட்டால், |
| अयं<br>அயம் | = | 'இவர்' |
| अहं<br>அஹம் | = | 'நான், |
| इति<br>இதி | = | என்று, |
| साक्षात्<br>ஸாக்ஷாத் | = | நேரிடையாய், |
| विद्वि<br>வித்$^3$வி | = | அறிந்துகொள். (அவ்விதம் ஏற்படும் ஆத்மக்ஞானத்தினுல்) |
| जनि-मरण-तरङ्ग-अपार-संसार-सिन्धुं<br>ஜனி-மரண-தரங்க$^3$-அபார-ஸம்ஸார-ஸிந்து$^4$ம் | = | பிறப்பு, இறப்பு ஆகிய அலைகளுடன் கூடிய, கரையற்ற ஸம்ஸாரமாகிற கடலை, |
| प्रतर<br>ப்ரதர | = | நன்கு தாண்டிவிடு, |
| कृतार्थः<br>க்ருதார்த$^2$: | = | செய்யவேண்டியதை யெல்லாம் செய்தவனுக (வேறு எதையும் அடைய வேண்டாதவனுக) |
| भव<br>ப$^4$வ | = | ஆகி விடு, |
| ब्रह्म-रूपेण<br>ப்$^3$ரஹ்ம-ரூபேண | = | சுத்த சைதன்யமான ப்ரஹ்மஸ்வரூபமாகவே, |
| संस्थः<br>ஸம்ஸ்த$^2$: | = | நன்கு நிலையுற்றவனுக, |
| भव<br>ப$^4$வ | = | இருந்துவிடு. |

(138)

**(அவதாரிகை)** ஈசுவரனுக்கும் ஜீவனுக்குமுள்ள ஒன்ருயிருக்கும் தன்மையை அறிவதென்ருல் அவ்விருவரையும் சொல்லும் வார்த்தைகளான தத் (அது) த்வம் (நீ) என்ற பதங்களின் நேரான அர்த்தத்தை கிரஹிக்கக்கூடாதென்றும், லக்ஷணையால் ஏற்படும் அர்த்தத்தையே கிரஹிக்கவேண்டுமென்றும், 244வது சுலோகத்தில் சொல்ல ப்பட்டது. அதற்கு என்ன அவசியமென்ருல் நேர் அர்த்தத்தை எடுத்துக்கொண்டால் ஈசுவரனுடைய தன்மையும் ஜீவனுடைய தன்மையும் ஒன்ருக முடியாமல் விருத்தமாகவே இருக்கின்றன வென்றும், பல திருஷ்டாந்தங்களால் அதே சுலோகத்தில் காட்டப்பட்டது. நேர் அர்த்தம் ஒருவிதமிருக்க அதை விட்டு விட்டு வேறு விதமாய் அர்த்தம் செய்வது நியாயமா என்று தோன்றலாம். உலகத்தில் வார்த்தைகளை உபயோகிக்கும்போது எப்பொழுதும் நேர் அர்த்தத்தில்தான் உபயோ கப்படுத்த வேண்டும் என்பது கிடையாது, லக்ஷணையாகவும் உபயோகிப்பதுண்டு, ‘கங்கையில் இடைச்சேரி இருக்கிறது' என்கிறேம். கங்கையென்பது ஜலப்பிரவா ஹத்தை நேரில் குறிக்கும். அந்த பிரவாஹத்தில இடைச்சேரி இருக்கமுடியாது. ஆகையால் ‘கங்கையில்’ என்பதற்கு 'கங்கைக் கரையில்' என்று அர்த்தம் செய்து கொள்ளவேண்டும். இங்கே பிரவாஹம் என்கிற நேர் அர்த்தத்தை விட்டுவிடுவதால் இதை ஜஹத் (விட்ட) லக்ஷணை என்கிருர்கள். அப்படியே ஒரு குதிரைப் பந்தயத்தில் 'சிவப்பு ஓடுகிறது' என்று சொன்னல் சிவப்பு என்ற வர்ணம்தான் நேர் அர்த்தமாகும். ஆனால் வர்ணம் தனித்து ஓடமுடியாது. ஆகையால் ‘சிவப்புக் குதிரை' செய்து என்று அர்த்தம் செய்து கொள்ளவேண்டும். இங்கே சிவப்பு என்பதை விடாமலே அர்த்தம் செய்வதால் இதை அஜஹத் (விடாத) லக்ஷணை என்கிருர்கள். 'மதுரையில் சென்ற வருஷம் பார்த்த அவனே தான் இப்பொழுது ஸ்ரீரங்கத்தில் இருக்கும் இவன்’ என்று சொல்லும்போது 'அவன்' என்பதற்கு அடைமொழிகளாகிற இடமும் காலமும் 'இவன்' என்பதற்கு அடைமொழிகளாகிற இடமும் காலமும் வேறுபடுவதால் ‘அவன்' ‘இவன்’ ஆக இருக்கமுடியாது. ஆகையால் விரோதப்படுகிற அவ்வடை மொழிகளை விலக்கி விட்டு ‘அவன்’ ‘இவன்' இரண்டிலும் பொதுவாயிருந்துவரும் மனிதனை கிரஹிக் கிறேம். இங்கே விருத்தமான அம்சங்களை விட்டுவிட்டு விருத்தமில்லாத அம்சத்தை எடுத்துக்கொள்வதால் இது ஜஹத் - அஜஹத் (விட்டும் விடாததுமான) லக்ஷணை என்கிருர்கள்.

இந்த ரீதியில் ஈசுவரனுடையவும் ஜீவனுடையவும் நேர் அர்த்தத்திலிருந்து விரோதப்படும் அம்சங்களை விட்டு விட்டு விரோதப்படாமலிருக்கும் சைதன்யத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு இரண்டு பேர்களுக்கும் ஒன்ருயிருக்கும் தன்மையை சொல்வதால் இங்கு உபயோகப்படுவது மேலே கண்ட மூன்ருவது விதமான ஜஹத் - அஜஹத் (விட்டும் விடாததுமான) லக்ஷணை என்பதை ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச் சொல்கிருர்: -

**ततस्तु तौ लक्षणया सुलक्ष्यौ तयोरखण्डैकरसत्वसिद्धये।**
**नाल जहत्या न तथा जहत्या किं तूभयार्थैकतयैव भाव्यम्॥ २४९॥**

**ததஸ்து தௌ லக்ஷணயா ஸுலக்ஷ்யௌ**
**தயோரக²ண்டை³கரஸத்வஸித்³த்⁴யே ।**
**நால ஜஹத்யா ந ததா² ஜஹத்யா கிம்**
**தூஜ்²யாயைகதயைவ பா⁴வ்யம் ॥ 249 ॥**

| | | |
|---|---|---|
| **तयो:**<br>**தயோ:** | = | (ஈசுவரன் ஜீவன் ஆக) இருவருக்கு, |
| **अखण्डैकरसत्वसिद्धये**<br>**அக²ண்டை³கரஸத்வஸித்³த⁴யே** | = | வேறுபடாமல் ஒரே ஸ்வபாவத்துடனிருக்கும் தன்மை ஸித்திக்கவேண்டியதற்காக, |
| **ततस्तु**<br>**ததஸ்து** | = | (முன் சொன்ன) அந்தக் காரணத்தினுலேயே (உபாதிகளே விலக்கிப் பார்க்க வேண்டியதாயிருப்பதினுல்), |
| **तौ**<br>**தௌ** | = | அவ்விருவரும், |
| **लक्षणया**<br>**லக்ஷணயா** | = | லக்ஷணேயினுல் தான், |
| **सुलक्ष्यौ**<br>**ஸுலக்ஷ்யௌ** | = | நன்கு குறிப்பிட வேண்டியவர்களாக இருக்கிருர்கள். (லக்ஷணேயிலும்) |
| **जहत्या**<br>**ஜஹத்யா** | = | ஜஹத் (விட்ட) லக்ஷணேயினுல், |
| **न अलं**<br>**ந அலம்** | = | போதாது, |
| **तथा**<br>**ததா²** | = | அப்படியே, |
| **अजहत्या**<br>**அஜஹத்யா** | = | (விடாத) லக்ஷணேயினுலும், |
| **न**<br>**ந** | = | போதாது, |
| **किं तू**<br>**கிம் து** | = | ஆனுல், |
| **उभयार्थैकतया**<br>**உப⁴யார்தை²கதயா** | = | இரண்டு பதங்களின் அர்த்தங்களும் ஒன்றுக ஏற்படும் தன்மையைக் கொடுக்கக்கூடிய லக்ஷணேயினுல் (அதாவது, விட்டுவிடாத லக்ஷணேயினுல்), |
| **एव**<br>**ஏவ** | = | தான், |
| **भाव्यम्**<br>**பா⁴வ்யம்** | = | இருக்கவேண்டும். |

**(249)**

**(அவதாரிகை)** திருஷ்டாந்தத்தைச் சொல்லி இதை தெளிவுபடுத்துகிருர்: -

**स देवदत्तोऽयमितीह चैकता विरुद्धधर्मांशमपास्य कथ्यते ।**
**यथा तथा तत्त्वमसीति वाक्ये विरुद्धधर्मानुभयत्र हित्वा ।**
**संलक्ष्य चिन्मात्रतया सदात्मनोरखण्डमाव: परिचीयते बुधैः ॥ २५० ॥**

**ஸ தே³வத³த்தோ(அ)யமிதீஹ சைகதா விருத்³த⁴த⁴ர்மாம்ஶமபாஸ்ய கத்²யதே ।**
**யதா² ததா² தத்த்வமஸீதி வாக்யே விருத்³த⁴த⁴ர்மானுப⁴யத்ர ஹித்வா ।**
**ஸம்லக்ஷ்ய சின்மாத்ரதயா ஸதா³த்மனோரக²ண்ட³மாவ꞉ பரிசீயதே பு³தை⁴꞉ ॥250॥**

**सः** = அந்த,
**ஸ꞉**
**देवदत्तः** = தேவதத்தன்,
**தே³வத³த்த꞉**
**अयं** = இவன்,
**அயம்**
**इति** = என்கிற,
**இதி**
**इह** = இந்தவிடத்தில்,
**இஹ**
**विरुद्धधर्मांशं** = விருத்தமாயிருக்கும் தர்மமாகிற பாகத்தை,
**விருத்³த⁴த⁴ர்மாம்ஶம்**
**अपास्य** = விலக்கிவிட்டு,
**அபாஸ்ய**
**एकता च** = ஒன்றுயிருக்கும் தன்மையே,
**ஏகதா ச**
**यथा** = எப்படி,
**யதா²**
**कथ्यते** = சொல்லப்படுகிறதோ,
**கத்²யதே**
**तथा** = அப்படியே,
**ததா²**
**तत् त्वं असि** = அதுவாக நீ இருக்கிறுய்,
**தத் த்வம் அஸி**
**इति** = என்ற,
**இதி**
**वाक्ये** = வாக்கியத்தில்,
**வாக்யே**
**उभयत्र** = இரண்டிலுமுள்ள,
**உப⁴யத்ர**

| | | |
|---|---|---|
| विरुद्धधर्मान्<br>விருத்³த⁴த⁴ர்மான் | = | விருத்தமாயிருக்கும் தர்மங்களை, |
| हित्वा<br>ஹித்வா | = | விட்டுவிட்டு, |
| चिन्मात्रतया<br>சின்மாத்ரதயா | = | (ஈசுவரனையும் ஜீவனையும்) சைதன்யம் மாத்திரமாகவே, |
| संलक्ष्य<br>ஸம்லக்ஷ்ய | = | நன்கு லக்ஷணையால் அறிந்துகொண்டு, |
| सदात्मनोः<br>ஸதா³த்மனோः | = | ஸத்வஸ்துவான பிரம்மத்திற்கும் பிரத்யகாத்மாவிற்கும், |
| अखण्डमावः<br>அக²ண்ட³மாவः | = | வேறுபடாத் தன்மையானது, |
| बुधैः<br>பு³தை⁴ः | = | அறிவாளிகளால், |
| परिचीयते<br>பரிசீயதே | = | அனுபவிக்கப்படுகிறது. (250) |

(**அவதாரிகை**) சாந்தோக்ய உபநிஷத்திலுள்ள "தத்த்வம் அஸி" என்ற வாக்கியத்தினுல் மாத்திரம் இந்த தத்வம் போதிக்கப்படுகிறதென்பதில்லை. உபநிஷத்துக்களில் நூற்றுக்கணக்கான வாக்கியங்களும் இவ்விஷயத்தை போதிக்கின்றன என்கிறுர்: -

**एवं महावाक्यशतेन कथ्यते ब्रह्मात्मनोरेक्यमखण्डभावः ।**

**ஏவம் மஹாவாக்யஶதேன கத்²யதே ப்³ரஹ்மாத்மனோரேக்யமக²ண்ட³பா⁴வः ।**

| | | |
|---|---|---|
| एवं<br>ஏவம் | = | இப்படியே, |
| ब्रह्मात्मनोः<br>ப்³ரஹ்மாத்மனோः | = | பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும், |
| ऐक्यं<br>ஐக்யம் | = | ஐக்கியம், |
| अखण्डभावः<br>அக²ண்ட³பா⁴வः | = | வேறுபடாத் தன்மை |
| महावाक्यशतेन<br>மஹாவாக்யஶதேன | = | நூறு மஹாவாக்கியங்களினுல், |
| कथ्यते<br>கத்²யதே | = | சொல்லப்படுகிறது. |

अस्थूलमित्येतदसन्निरस्य सिद्धं स्वतो व्योमवदप्रतर्क्यम् ॥ २५१॥

**அஸ்தூ²லமித்யேதத³ஸந்நிரஸ்ய ஸித்³த⁴ம்**
**ஸ்வதோ வ்யோமவத³ப்ரதர்க்யம் ॥ 251 ॥**

**अस्थूलं** = ஸ்தூலமில்லாதது,
**அஸ்தூ²லம்**
**इति** = என்ற வாக்கியத்தினுல்,
**இதி**
**एतत्** = இந்த (பார்க்கப்படுகிற),
**ஏதத்**
**असत्** = வாஸ்தவமல்லாத அனுத்ம பதார்த்தத்தை,
**அஸத்**
**निरस्य** = தள்ளிவிட்டால் (பிரஹ்மமானது),
**நிரஸ்ய**
**स्वतः** = தானுகவே,
**ஸ்வதঃ**
**व्योमवत्** = ஆகாசம் போல,
**வ்யோமவத்**
**अप्रतर्क्यं** = ஆக்ஷேபிக்க முடியாமல் (யுக்திக்கு உள்படாமல்),
**அப்ரதர்க்யம்**
**सिद्धं** = நிலைத்துவிடும்.
**ஸித்³த⁴ம்** (251)

अतो मृषामात्रमिदं प्रतीतं जहीहि यत्स्वात्मतया गृहीतम् ।
ब्रह्माहमित्येव विशुद्धबुद्ध्या विद्धि स्वमात्मानमखण्डबोध ॥ २५२ ॥

**அதோ ம்ருஷாமாத்ரமித³ம் ப்ரதீதம்**
**ஜஹீஹி யத்ஸ்வாத்மதயா க்³ருஹீதம் ।**
**ப்³ரஹ்மாஹமித்யேவ விஶுத்³த⁴பு³த்³த்⁴யா**
**வித்³தி⁴ ஸ்வமாத்மானமக²ண்ட³போ³த⁴ ॥ 252 ॥**

**अतः** = ஆகையினுல்,
**அதঃ**
**यत्स्वात्मतया** = தன் ஸ்வரூபமாக,
**யத்ஸ்வாத்மதயா**
**यत्** = எது,
**யத்**

| | | |
|---|---|---|
| गृहीतं<br>க்³ருஹீதம் | = | எண்ணப்பட்டிருக்கிறதோ, |
| प्रतीतं<br>ப்ரதீதம் | = | தோன்றுகிற, |
| मृषामात्रं<br>ம்ருஷாமாத்ரம் | = | பொய்யாகவே இருக்கிற, |
| इदं<br>இத³ம் | = | இதை, |
| जहीहि<br>ஜஹீஹி | = | விட்டு விடு, |
| विशुद्धबुद्धया<br>விஶுத்³த⁴பு³த்³த⁴யா | = | நன்கு தெளிந்த புத்தியினுல், |
| ब्रह्माहं<br>ப்³ரஹ்மாஹம் | = | 'பிரஹ்மம் நான்', |
| इत्येव<br>இத்யேவ | = | என்றே, |
| स्वं<br>ஸ்வம் | = | தன், |
| आत्मानं<br>ஆத்மானம் | = | ஆத்மாவை, |
| अखण्डबोधं<br>அக²ண்ட³போ³த⁴ம் | = | பரிபூர்ண ஞானஸ்வரூபராய், |
| विद्धि<br>வித்³தி⁴ | = | அறிந்துகொள். (252) |

**(அவதாரிகை)** முன் 230, 231, 232 சுலோகங்களில் எடுத்துச் சொன்ன விஷயத்தையே வேறு விதமாக மஹாவாக்யத்துடன் அன்வயப்படுத்தி மறுபடியும் சொல்கிருர்: -

**मृत्कार्यं सकलं घटादि सततं मृन्मात्रमेवाभित-**
**स्तद्वत्सज्जनितं सदात्मकमिदं सन्मात्रमेवाखिलम् ।**
**यस्मान्नास्ति सतः परं किमपि तत्सत्यं स आत्मा स्वयं**
**तस्मात्तत्त्वमसि प्रशान्तममलं ब्रह्माद्वयं यत्परम् ॥ २५३ ॥**

**ம்ருத்கார்யம் ஸகலம் க⁴டாதி³ ஸததம் ம்ருன்மாத்ரமேவாபி⁴த-**
**ஸ்தத்³வத்ஸஞ்ஜனிதம் ஸதா³த்மகமித³ம் ஸன்மாத்ரமேவாகி²லம் ।**
**யஸ்மான்னாஸ்தி ஸத: பரம் கிமபி தத்ஸத்யம் ஸ ஆத்மா ஸ்வயம்**
**தஸ்மாத்தத்த்வமஸி ப்ரஶாந்தமமலம் ப்³ரஹ்மாத்³வயம் யத்பரம் ॥ 253 ॥**

| | | |
|---|---|---|
| मृत्कार्यं<br>ம்ருத்கார்யம் | = | மண்ணினுல் செய்யப்பட்டிருக்கும், |
| घटादि<br>க⁴டாதி³ | = | குடம் முதலியது, |
| सकलं<br>ஸகலம் | = | எல்லாம், |
| सततं<br>ஸததம் | = | எப்பொழுதும், |
| अभित:<br>அபி⁴தঃ | = | எல்லாப் பக்கத்திலும், |
| मृन्मात्रं<br>ம்ருன்மாத்ரம் | = | மண் மாத்திரம், |
| एव<br>ஏவ | = | தான், |
| तद्वत्<br>தத்³வத் | = | அதைப்போலவே, |
| सञ्जनितं<br>ஸஞ்ஜனிதம் | = | ஸத்தான பிரஹ்மத்திலிருந்து ஏற்பட்டிருக்கும், |
| इदं<br>இத³ம் | = | இந்த பிரபஞ்சம், |
| अखिलं<br>அகி²லம் | = | எல்லாமே, |
| सदात्मकं<br>ஸதா³த்மகம் | = | ஸத்தையே தன்மையாயுடையது, |
| सन्मात्रं<br>ஸன்மாத்ரம் | = | ஸத் மாத்திரம், |
| एव<br>ஏவ | = | தான், |
| यस्मात्<br>யஸ்மாத் | = | எந்த காரணத்தினுல், |
| सत:<br>ஸதঃ | = | ஸத்தைவிட, |
| परं<br>பரம் | = | வேறு, |
| किमपि<br>கிமபி | = | எதுவும், |

| | | |
|---|---|---|
| **नास्ति**<br>**நாஸ்தி** | = | கிடையாதோ, |
| **तत्**<br>**தத்** | = | அதுவே, |
| **सत्यं**<br>**ஸத்யம்** | = | ஸத்யமோ (முக்காலத்திலும் பாதிக்கப்படாமல் இருக்கும் வஸ்துவோ), |
| **सः**<br>**ஸ:** | = | அவர், |
| **आत्मा**<br>**ஆத்மா** | = | ஆத்மா, |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தான், |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | அந்த காரணத்திஞல், |
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **प्रशान्तं**<br>**ப்ரஶாந்தம்** | = | நன்கு அடங்கினதாய், |
| **अमलं**<br>**அமலம்** | = | நிர்மலமாய், |
| **अद्वयं**<br>**அத்³வயம்** | = | இரண்டாவதற்றதாய், |
| **परं**<br>**பரம்** | = | மேலானதாய் இருக்கும், |
| **ब्रह्म**<br>**ப்³ரஹ்ம** | = | பிரஹ்மமோ, |
| **तत्**<br>**தத்** | = | அதாகவே, |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **असि**<br>**அஸி** | = | இருக்கிறுய். |

(253)

**निद्राकल्पितकालदेशविषयज्ञात्रादि सर्वं यथा**
**मिथ्या तद्वदिहापि जाग्रति जगत्स्वाज्ञान कार्यत्वतः ।**
**यस्मादेव मिदं शरीरकरणप्राणाहमाधप्पसत्**
**तस्मात्तत्वमसि प्रशान्तममलं ब्रह्माद्वयं यत्परम् ॥ २५४ ॥**

**நித்³ராகல்பிதகாலதே³ஶவிஷயஜ்ஞாத்ராதி³ ஸர்வம் யதா²**
**மித்²யா தத்³வதி³ஹாபி ஜாக்³ரதி ஜக³த்ஸ்வாஜ்ஞான கார்யத்வத: ।**
**யஸ்மாதே³வ மித³ம் ஶரீரகரணப்ராணாஹமாத⁴ப்பஸத்**
**தஸ்மாத்தத்வமஸி ப்ரஶாந்தமமலம் ப்³ரஹ்மாத்³வயம் யத்பரம் ॥ 254 ॥**

**निद्राकल्पितकालदेशविषयज्ञात्रादि** = நித்திரையினுல் கல்பிக்கப்படும் இடம்,
**நித்³ராகல்பிதகாலதே³ஶவிஷயஜ்ஞாத்ராதி³** காலம், விஷயங்கள் அறிகிறவன் முதலானது,

**सर्वं** = எல்லாமே,
**ஸர்வம்**

**यथा** = எப்படி,
**யதா²**

**मिथ्या** = பொய்யோ,
**மித்²யா**

**तद्वत्** = அதைப்போலவே,
**தத்³வத்**

**इह** = இப்பொழுது,
**இஹ**

**जाग्रति** = விழிப்பு ஸமயத்திலும்,
**ஜாக்³ரதி**

**अपि** = கூட,
**அபி**

**जगत्** = பிரபஞ்சமானது,
**ஜக³த்**

**स्वाज्ञान कार्यत्वतः** = தன் ஆத்ம ஸ்வரூபத்தை அறியாததின் கார்யமா
**ஸ்வாஜ்ஞான கார்யத்வத:** யிருப்பதால் (இதிலும் இடம் காலம் விஷயங்கள் எல்லாம் தோன்றினுலும் பொய் தான்.),

**यस्मात्** = எந்தக் காரணத்தினுல்,
**யஸ்மாத்**

**एवं** = இவ்விதமாக,
**ஏவம்**

**इदं** = இந்த,
**இத³ம்**

**शरीरकरणप्राणाहमादि** = சரீரம் இந்திரியங்கள் பிராணன் அஹங்காரம்
**ஶரீரகரணப்ராணாஹமாதி³** முதலியது,

**अपि** = வாஸ்தவமல்லாததோ,
**அபி**

| | | |
|---|---|---|
| **तस्मात्** **தஸ்மாத்** | = | அந்த காரணத்தினுல், |
| **यत्** **யத்** | = | எது, |
| **प्रशान्तं** **ப்ரஶாந்தம்** | = | நன்கு அடங்கினதாய், |
| **अमलं** **அமலம்** | = | நிர்மலமாய், |
| **अद्वयं** **அத்³வயம்** | = | இரண்டற்றதாய், |
| **परं** **பரம்** | = | மேலானதாயுள்ள, |
| **ब्रह्म** **ப்³ரஹ்ம** | = | பிரஹ்மமோ, |
| **तत्** **தத்** | = | அதாகவே, |
| **त्वं** **த்வம்** | = | நீ, |
| **असि** **அஸி** | = | இருக்கிருய். |

**(254)**

## 26. தத்வாநுஸந்தானம்

**(அவதாரிகை)** பிரஹ்மாத்மைக்யக்ஞானம் மனஸில் நன்ருக ஏற்பட வேண்டியதற்காக மறுபடியும் அம்மஹாவாக்யத்தையே சைத்து இன்னும் 50 சுலோகங்கள் சொல்கிருர்: -

**जातिनीतिकुलगोत्रदूरगं नामरूपगुणदोषवर्जितम् ।**
**देशकालविषयातिवर्ति यद् ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५५ ॥**

**ஜாதிநீதிகுலகோ³த்ரதூ³ரக³ம் நாமரூபகு³ணதோ³ஷவர்ஜிதம் ।**
**தே³ஶகாலவிஷயாதிவர்தி யத்³ ப்³ரஹ்ம தத்த்வமஸி பா⁴வயாத்மனி ॥ 255 ॥**

| | | |
|---|---|---|
| **यत्** **யத்** | = | எது, |
| **जातिनीतिकुलगोत्रदूरगं** **ஜாதிநீதிகுலகோ³த்ரதூ³ரக³ம்** | = | ஜாதி நீதி குலம் கோத்ரம் இவைகளுக்கெல்லாம் தூரத்தில் இருப்பதாயும், |

| | | |
|---|---|---|
| **नामरूपगुणदोषवर्जितम्** | = | பெயர் ரூபம் குணம் தோஷம் எதுவும் |
| **நாமரூபகு³ணதோ³ஷவர்ஜிதம்** | | அற்றதாயும், |
| **देशकालविषयातिवर्ति** | = | இடம் காலம் விஷயம் இவைகளை |
| **தே³ஶகாலவிஷயாதிவர்தி** | | யெல்லாம் மீறினதாயும் இருக்கிறதோ, |
| **तत्** | = | அந்த, |
| **தத்** | | |
| **ब्रह्म** | = | பிரஹ்மமாகவே, |
| **ப்³ரஹ்ம** | | |
| **त्वं** | = | நீ, |
| **த்வம்** | | |
| **असि** | = | இருக்கிறாய் (என்று), |
| **அஸி** | | |
| **आत्मनि** | = | தன்னிடத்தில், |
| **ஆத்மனி** | | |
| **भावय** | = | அனுஸந்தானம் செய் (அதாவது, நான் பிரஹ்மம் |
| **பா⁴வய** | | என்று இடைவிடாமல் பாவிக்க வேண்டும்). **(255)** |

**यत्परं सकलवागगोचरं गोचरं विमलबोधचक्षुषः ।**
**शुद्धचिद्घनमनादि वस्तु यद् ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५६ ॥**

**யத்பரம் ஸகலவாக³கோ³சரம் கோ³சரம் விமலபோ³த⁴சக்ஷுஷ: ।**
**ஶுத்³த⁴சித்³க⁴னமநாதி³ வஸ்து யத்³ ப்³ரஹ்ம தத்த்வமஸி பா⁴வயாத்மனி ॥256॥**

| | | |
|---|---|---|
| **यत्** | = | எது, |
| **யத்** | | |
| **परं** | = | மேலானதாயும், |
| **பரம்** | | |
| **सकलवागगोचरं** | = | எல்லா வாக்குகளுக்கும் விஷயமாகாததும், |
| **ஸகலவாக³கோ³சரம்** | | |
| **विमलबोधचक्षुषः** | = | நிர்மலமான ஞானமாகிய கண்ணுக்கு (மாத்திரம்), |
| **விமலபோ³த⁴சக்ஷுஷ:** | | |
| **गोचरं** | = | விஷயமாகக் கூடியதாயும் இருக்கிறதோ, |
| **கோ³சரம்** | | |
| **यत्** | = | எது, |
| **யத்** | | |
| **शुद्धचिद्घनं** | = | சுத்தமான அறிவு ஸ்வரூபமாயும், |
| **ஶுத்³த⁴சித்³க⁴னம்** | | |

**अनादि** = ஆதியற்றதாயும்,

**அநாதி³**

**वस्तु** = வாஸ்தவமாய் இருக்கிற வஸ்துவாயும்

**வஸ்து** இருக்கிறதோ,

**तत्** = அந்த,

**தத்**

**ब्रह्म** = பிரஹ்மமாகவே,

**ப்³ரஹ்ம**

**त्वं** = நீ,

**த்வம்**

**असि** = இருக்கிறய். (அப்படியே),

**அஸி**

**आत्मनि** = தன்னிடத்தில்,

**ஆத்மனி**

**भावय** = அனுஸந்தானம் செய்.

**பா⁴வய** **(256)**

**षड्भिरूर्मिभिरयोगि योगिहृद्भावितं न करणैर्विभावितम् ।**
**बुद्ध्यवेद्यमनवद्यभूति यद्ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५७ ॥**

**ஷட்³பி⁴ரூர்மிபி⁴ரயோகி³ யோகி³ஹ்ருத்³**
**பா⁴விதம் ந கரணைர்விபா⁴விதம் ।**
**பு³த்³த்⁴யவேத்³யமனவத்³யபூ⁴தி யத்³ப்³ரஹ்ம**
**தத்த்வமஸி பா⁴வயாத்மனி ॥ 257 ॥**

**षड्भिः** = (பசி, தாஹம், சோகம், மோஹம், ஜரை,

**ஷட்³பி⁴:** மரணம் ஆகிய) ஆறு,

**ऊर्मिभिं** = அலைகளுடன்,

**ஊர்மிபி⁴ம்**

**अयोगि** = ஸம்பந்தப்படாததாயும்,

**அயோகி³**

**योगिहृद्भावितं** = யோகிகளுடைய ஹ்ருதயத்தில் அனுஸந்தானம்

**யோகி³ஹ்ருத்³பா⁴விதம்** செய்யப்பட்டதாயும்,

**करणैः** = இந்திரியங்களினல்,

**கரணைः**

**न विभावितं** = அறியக்கூடாததாயும்,

**ந விபா⁴விதம்**

**बुद्ध्यवेद्यं** = (கூர்மையாயும் பரிசுத்தமாயுமில்லாத)
**பு$^{3}$த்$^{3}$த$^{4}$யவேத்$^{3}$யம்** புத்தியினுல் அறியத்தகாததாயும்,
**अनवद्यभूति** = எவ்வித தோஷமுமற்ற ஐசுவர்யத்தோடு
**அனவத்$^{3}$யபூ$^{4}$தி** கூடியதாயும்,
**यत्** = இருக்கிறதோ,
**யத்**
**तत्** = அந்த,
**தத்**
**ब्रह्म** = பிரஹ்மமாகவே,
**ப்$^{3}$ரஹ்ம**
**त्वं** = நீ,
**த்வம்**
**असि** = இருக்கிருய். (அப்படியே),
**அஸி**
**आत्मनि** = தன்னிடத்தில்,
**ஆத்மனி**
**भावय** = அனுஸந்தானம் செய்.
**பா$^{4}$வய** **(257)**

## भ्रान्तिकल्पितजगत्कलाश्रयं स्वाश्रयं च सदसद्विलक्षणम् ।
## निष्कलं निरुपमानमृद्धिमत् ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५८ ॥

**ப்$^{4}$ராந்திகல்பிதஜக$^{3}$த்கலாஶ்ரயம் ஸ்வாஶ்ரயம் ச ஸத$^{3}$ஸத்$^{3}$விலக்ஷணம் ।**
**நிஷ்கலம் நிருபமானம்ருத்$^{3}$தி$^{4}$மத் ப்$^{3}$ரஹ்ம தத்த்வமஸி பா$^{4}$வயாத்மனி ॥ 258 ॥**

**भ्रान्तिकल्पितजगत्कलाश्रयं** = பிராந்தியினுல் கல்பிக்கப்பட்டிருக்கிற ஜகத்தாகிற
**ப்$^{4}$ராந்திகல்பிதஜக$^{3}$த்கலாஶ்ரயம்** அம்சத்திற்கு ஆசிரயமாயும் அதிஷ்டானமாயும்),
**स्वाश्रयं च** = (தனக்கு வேறு ஆசிரயமில்லாமல்) தானே தனக்கு
**ஸ்வாஶ்ரயம் ச** ஆசிரயமாயிருப்பதாயும்,
**सदसद्विलक्षणं** = இருப்பதாய் தெரிகிற (பிருதிவீ, அப்பு, தேஜஸ்),
**ஸத$^{3}$ஸத்$^{3}$விலக்ஷணம்** இருப்பதாய் தெரியாமலிருக்கிற (வாயு, ஆகாசம்) பூதங்களுக்கு மாறுபட்டதாயும்,
**निष्कलं** = அவயவங்களற்றதாயும்,
**நிஷ்கலம்**
**निरुपमानं** = உபமானமற்றதாயும்,
**நிருபமானம்**

| | | |
|---|---|---|
| **मृद्धिमत्** ம்ருத்³தி⁴மத் | = | எல்லா ஐசுவரியமும் பொருந்தியதாயும் இருக்கிற, |
| **तत्** தத் | = | அந்த, |
| **ब्रह्म** ப்³ரஹ்ம | = | பிரஹ்மமாகவே, |
| **त्वं** த்வம் | = | நீ, |
| **असि** அஸி | = | இருக்கிறுய். (அப்படியே), |
| **आत्मनि** ஆத்மனி | = | தன்னிடத்தில், |
| **भावय** பா⁴வய | = | அனுஸந்தானம் செய். |

**(258)**

**जन्मवृद्धिपरिणत्यपक्षयव्याधिनाशनविहीनमव्ययम् ।**
**विश्वसृष्टयवनघातकारणं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५९ ॥**

**ஜன்மவ்ருத்³தி⁴பரிணத்யபக்ஷயவ்யாதி⁴நாஶனவிஹீனமவ்யயம் ।**
**விஶ்வஸ்ருஷ்டயவனகா⁴தகாரணம் ப்³ரஹ்ம தத்த்வமஸி பா⁴வயாத்மனி ॥259॥**

| | | |
|---|---|---|
| **जन्मवृद्धिपरिणत्यपक्षयव्याधिनाशनविहीनं** ஜன்மவ்ருத்³தி⁴பரிணத்யபக்ஷயவ்யாதி⁴நாஶனவிஹீனம் | = | பிறப்பு, வளர்ச்சி, மாறுதல், குறைவு, வியாதி, நாசம் இவைகள் அற்றதாயும், |
| **अव्ययं** அவ்யயம் | = | (தாஞகவேயோ வேறு எதிஞலேயோ) அழிக்க முடியாததாயும், |
| **विश्वसृष्टयवनघातकारणं** விஶ்வஸ்ருஷ்டயவனகா⁴தகாரணம் | = | ஜகத்தின் ஸ்ருஷ்டி, ரக்ஷணம், அழித்தல் இவைகளுக்கு காரணமாயும் இருக்கிற, |
| **तत्** தத் | = | அந்த, |
| **ब्रह्म** ப்³ரஹ்ம | = | பிரஹ்மமாகவே, |
| **त्वं** த்வம் | = | நீ, |
| **असि** அஸி | = | இருக்கிறுய். (அப்படியே), |

| | | |
|---|---|---|
| आत्मनि<br>ஆத்மனி | = | தன்னிடத்தில், |
| भावय<br>பா⁴வய | = | அனுஸந்தானம் செய். |

(259)

**अस्तभेदमनपास्तलक्षणं निस्तरङ्गजलराशिनिश्चलम् ।**
**नित्यमुक्तमविभक्तमूर्ति यद्ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २६० ॥**

**அஸ்தபே⁴த³மனபாஸ்தலக்ஷணம் நிஸ்தரங்க³ஜலராஶிநிஶ்சலம் ।**
**நித்யமுக்தமவிப⁴க்தமூர்தி யத்³ப்³ரஹ்ம தத்த்வமஸி பா⁴வயாத்மனி ॥ 260 ॥**

| | | |
|---|---|---|
| यत्<br>யத் | = | எது, |
| अस्तभेदं<br>அஸ்தபே⁴த³ம் | = | வேற்றுமையற்றதாயும், |
| अनपास्तलक्षणं<br>அனபாஸ்தலக்ஷணம் | = | (ஸத்சித் ஆனந்தமாகிய) லக்ஷணம் (எக்காலத்திலும்) விலகாததாயும், |
| निस्तरङ्गजलराशिनिश्चलं<br>நிஸ்தரங்க³ஜலராஶிநிஶ்சலம் | = | அலையில்லாத ஸமுத்திரம்போல் அசைவற்றதாயும், |
| नित्यमुक्तं<br>நித்யமுக்தம் | = | எப்பொழுதும் விடுபட்டதாயும் (ஒரு காலத்திலும் ஸம்ஸார பந்தத்திற்கு உள்படாததாயும்), |
| अविभक्तमूर्ति<br>அவிப⁴க்தமூர்தி | = | பிரிக்கப்படாத ஸ்வரூபமுள்ளதாயும் இருக்கிறதோ, |
| तत्<br>தத் | = | அந்த, |
| ब्रह्म<br>ப்³ரஹ்ம | = | பிரஹ்மமாகவே, |
| त्वं<br>த்வம் | = | நீ, |
| असि<br>அஸி | = | இருக்கிறாய். (அப்படியே), |
| आत्मनि<br>ஆத்மனி | = | தன்னிடத்தில், |
| भावय<br>பா⁴வய | = | அனுஸந்தானம் செய். |

(260)

**एकमेव सदनेककारणं कारणान्तरनिरासकारणम् ।**
**कार्यकारणविलक्षणं स्वयं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २६१ ॥**

**ஏகமேவ ஸத³னேககாரணம் காரணாந்தரநிராஸகாரணம் ।**
**கார்யகாரணவிலக்ஷணம் ஸ்வயம் ப்³ரஹ்ம தத்த்வமஸி பா⁴வயாத்மனி ॥ 261 ॥**

**एकं एव** = ஒன்ருகவே,
**ஏகம் ஏவ**

**सत्** = இருந்துகொண்டு (தன்னிடத்தில் கல்பிக்கப்படும்),
**ஸத்**

**अनेक कारणं** = அநேக பதார்த்தங்களுக்கு காரணமாயும் (அதிஷ்டானமாயும்),
**அனேக காரணம்**

**कारणान्तर निरास कारणं** = (தனக்கு) வேறு காரணத்தை அபேக்ஷிக்காத காரணமாயும் (அல்லது, காரணமென்று சொல்லப்படும் ஆகாசம் முதலான மற்ற காரணங்களை யெல்லாம் இல்லையென்று மறுப்பதற்கு காரணமாயும்),
**காரணாந்தர நிராஸ காரணம்**

**स्वयं** = (ஆனல்) தன் வாஸ்தவ நிலையில்,
**ஸ்வயம்**

**कार्य कारण विलक्षणं** = கார்யமென்பதற்கும் (ஜகத்திற்கும்) காரணமென்பதற்கும் (மாயைக்கும்) வேறுபட்டதாயும் இருக்கும்,
**கார்ய காரண விலக்ஷணம்**

**तत्** = அந்த,
**தத்**

**ब्रह्म** = பிரஹ்மமாகவே,
**ப்³ரஹ்ம**

**त्वं** = நீ,
**த்வம்**

**असि** = இருக்கிருய். (அப்படியே),
**அஸி**

**आत्मनि** = தன்னிடத்தில்,
**ஆத்மனி**

**भावय** = அனுஸந்தானம் செய்.
**பா⁴வய**

இங்கு முதலில் ப்ரஹ்மத்தைக் காரணம் என்று சொல்லி விட்டு பின்னல் அது காரணமல்ல என்று சொல்கிருர். இதன் கருத்து யாதெனில் பிரஹ்மத்தைத் தவிற வேறு காரண மில்லாததால் பிரபஞ்சத்திற்கு பிரஹ்மத்தைக் காரணமாகக்

கூறப்பட்டது. பிரபஞ்சம் பொய்யானதால் அதைக்குறித்து பிரஹ்மத்திற்கு காரணத் தன்மையும் பொய்தான். வாஸ்தவத்தில் பிரஹ்மம் காரணமல்ல. வாஸ்தவத்தில் எப்பொழுதும் பிரஹ்மத்திற்கு காரணத்தன்மை இல்லாமல் போனாலும் மற்றதை விலக்குகிறபடியால் தான் காரணத்தன்மை தடஸ்த லக்ஷணம் என்று கூறப்படு கிறது. வாஸ்தவத்தில் பிரபஞ்சம் இல்லை என்று பிரபஞ்சத்தின் இல்லாமையை நேரில் அறியும் ஸாக்ஷியாக பிரம்மம் இருப்பதால் ஆகாசம் முதலான வேறு காரணங்களை மறுப்பதற்கும் பிரம்மம் காரணம் என்று கூறப்பட்டது. **(261)**

## निर्विकल्पकमनल्पमक्षरं यत्क्षराक्षरविलक्षणं परम् ।
## नित्यमव्ययसुखं निरञ्जनं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २६२॥

**நிர்விகல்பகமனல்பமக்ஷரம் யத்க்ஷராக்ஷரவிலக்ஷணம் பரம் ।**
**நித்யமவ்யயஸுக²ம் நிரஞ்ஜனம் ப்³ரஹ்ம தத்த்வமஸி பா⁴வயாத்மனி ॥ 262॥**

**यत्** = எது,
**யத்**

**निर्विकल्पकं** = விகல்பம் அற்றதாய்,
**நிர்விகல்பகம்**

**अनल्पं** = சிறியதில்லாததாய்,
**அனல்பம்**

**अक्षरं** = நாசமற்றதாய்,
**அக்ஷரம்**

**क्षर अक्षरविलक्षणं** = (ஜகத்தாகிய) க்ஷரம், (மாயையாகிற) அக்ஷரம்,
**க்ஷர அக்ஷரவிலக்ஷணம்** இரண்டிற்கும் வேறுபட்டதாய்,

**परं** = எல்லாவற்றிற்கும் மேலானதாய்,
**பரம்**

**नित्यं** = சாசுவதமாய்,
**நித்யம்**

**अव्यय सुखं** = குறைவு இல்லாத ஸுகஸ்வரூபமாய்,
**அவ்யய ஸுக²ம்**

**निरञ्जनं** = தோஷமற்றதாய் இருக்கிறதோ,
**நிரஞ்ஜனம்**

**तत्** = அந்த,
**தத்**

**ब्रह्म** = பிரஹ்மமாகவே,
**ப்³ரஹ்ம**

**त्वं** = நீ,
**த்வம்**

| | | |
|---|---|---|
| असि<br>அஸி | = | இருக்கிறுய். (அப்படியே), |
| आत्मनि<br>ஆத்மனி | = | தன்னிடத்தில், |
| भावय<br>பா⁴வய | = | அனுஸந்தானம் செய். |

(262)

**यद्विभाति सदनेकधा भ्रमान्नामरूपगुणविक्रियात्मना ।**
**हेमवत्स्वयमविक्रियं सदा ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २६३ ॥**

**யத்³விபா⁴தி ஸத³னேகதா⁴ ப்⁴ரமாந்நாமரூபகு³ணவிக்ரியாத்மனா ।**
**ஹேமவத்ஸ்வயமவிக்ரியம் ஸதா³ ப்³ரஹ்ம தத்த்வமஸி பா⁴வயாத்மனி ॥ 263 ॥**

| | | |
|---|---|---|
| यत्<br>யத் | = | எது, |
| सत्<br>ஸத் | = | ஸத் பதார்த்தமாய், |
| हेभवत्<br>ஹேப⁴வத் | = | தங்கம் போல, |
| स्वयं<br>ஸ்வயம் | = | தன் நிஜலயில், |
| सदा<br>ஸதா³ | = | எப்பொழுதும், |
| अविक्रियं<br>அவிக்ரியம் | = | எவ்வித மாறுதலுமன்னியில் இருந்துகொண்டே, |
| भ्रमात्<br>ப்⁴ரமாத் | = | பிராந்தியிஞல், |
| नाम रूप गुण विक्रियात्मना<br>நாம ரூப கு³ண விக்ரியாத்மஞ | = | பெயர், உருவம், குணம், மாறுபடுதல் தன்மையுடன், |
| अनेकधा<br>அனேகதா⁴ | = | பலவிதமாக, |
| विभाति<br>விபா⁴தி | = | தோன்றுகிறதோ, |
| तत्<br>தத் | = | அந்த, |
| ब्रह्म<br>ப்³ரஹ்ம | = | பிரஹ்மமாகவே, |
| त्वं | = | நீ, |

த்வம்

| | | |
|---|---|---|
| असि | = | இருக்கிறாய். (அப்படியே), |
| அஸி | | |
| आत्मनि | = | தன்னிடத்தில், |
| ஆத்மனி | | |
| भावय | = | அனுஸந்தானம் செய். |
| பா⁴வய | | (263) |

यच्चकास्त्यनपरं परात्परं प्रत्यगेकरसमात्मलक्षणम् ।
सत्यचित्सुखमनन्तमव्ययं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २६४ ॥

யச்சகாஸ்த்யனபரம் பராத்பரம் ப்ரத்யகே³கரஸமாத்மலக்ஷணம் ।
ஸத்யசித்ஸுக²மனந்தமவ்யயம் ப்³ரஹ்ம தத்த்வமஸி பா⁴வயாத்மனி ॥ 264 ॥

| | | |
|---|---|---|
| यत् | = | எது, |
| யத் | | |
| अनपरं | = | தன்னைத் தவிர வேறில்லாததாய், |
| அனபரம் | | |
| परात् परं | = | மேலானதிற்கும் மேலாய், |
| பராத் பரம் | | |
| प्रत्यग एक रसं | = | உள்ளேயுள்ள ஆத்மாவுடன் ஒரே |
| ப்ரத்யக³ ஏக ரஸம் | | ஸ்வபாவத்தையுடையதாய், |
| आत्म लक्षणं | = | ஆத்மாவிற்குள்ள லக்ஷணங்களோடு கூடியதாய், |
| ஆத்ம லக்ஷணம் | | |
| सत्य चित् सुखं | = | ஸத்யமாய் ஞானஸ்வரூபமாய் ஆனந்த |
| ஸத்ய சித் ஸுக²ம் | | ஸ்வரூபமாய் இருப்பதாய், |
| अनन्तं | = | எல்லையற்றதாய், |
| அனந்தம் | | |
| अव्ययं | = | அழிவற்றதாய், |
| அவ்யயம் | | |
| चकास्ति | = | விளங்குகிறதோ, |
| சகாஸ்தி | | |
| तत् | = | அந்த, |
| தத் | | |
| ब्रह्म | = | பிரஹ்மமாகவே, |
| ப்³ரஹ்ம | | |

| | | |
|---|---|---|
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **असि**<br>**அஸி** | = | இருக்கிருய். (அப்படியே), |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | தன்னிடத்தில், |
| **भावय**<br>**பா⁴வய** | = | அனுஸந்தானம் செய். |

**(264)**

**(அவதாரிகை)** 255 முதல் 264 வரை சுலோகங்களில் சொல்லிய முறைப்படி நன்கு யுக்திகளைக்கொண்டு எவ்வித ஸம்சயமுமன்னியில் அனுஸந்தானம் செய்து வந்தால் ஆத்மதத்வம் வெகு தெளிவாகத் தெரியவரும் என்கிருர்: -

**उक्तमर्थमिममात्मनि स्वयं भावय प्रथितयुक्तिभिर्धिया ।**
**संशयादिरहितं कराम्बुवत्तेन तत्त्वनिगमो भविष्यति ॥ २६५ ॥**

**உக்தமர்த²மிமமாத்மனி ஸ்வயம் பா⁴வய ப்ரதி²தயுக்திபி⁴ர்தி⁴யா ।**
**ஸம்ஶயாதி³ரஹிதம் கராம்பு³வத்தேன தத்த்வநிக³மோ ப⁴விஷ்யதி ॥ 265 ॥**

| | | |
|---|---|---|
| **उक्तं**<br>**உக்தம்** | = | இதுவரை சொல்லப்பட்ட, |
| **इमं**<br>**இமம்** | = | இந்த விஷயத்தை, |
| **प्रथित युक्तिभिः**<br>**ப்ரதி²த யுக்திபி⁴:** | = | (உபநிஷத்துக்களை அனுஸரித்த) பிரஸித்தமான யுக்திகளைக் கொண்டு, |
| **धिया**<br>**தி⁴யா** | = | புத்தியினுல், |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தாஞகவே, |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | தன்னிடத்தில், |
| **भावय**<br>**பா⁴வய** | = | அனுஸந்தானம் செய், |
| **तेन**<br>**தேன** | = | அதினுல் (அவ்விதம் அனுஸந்தானம் செய்வதால்), |
| **संशय आदि रहितं**<br>**ஸம்ஶய ஆதி³ ரஹிதம்** | = | ஸந்தேஹம் (விபரீதக்ஞானம்) முதலானது இல்லாமல், |

| | | |
|---|---|---|
| **कर अम्बुवत्** | = | உள்ளங்கையிலுள்ள ஜலம்போல, |
| **கர அம்பு³வத்** | | (தெளிவாய் தெரியக்கூடியதாய்), |
| **तत्त्व निगमः** | = | ஆத்மாவின் வாஸ்தவத்தன்மை விஷயமான |
| **தத்த்வ நிக³மः** | | நிச்சயம், |
| **भविष्यति** | = | ஏற்பட்டுவிடும். |
| **ப⁴விஷ்யதி** | | **(265)** |

**(அவதாரிகை)** இவ்விதமாக சரீரம், இந்திரியம், புத்தி முதலியவைகளுடன் கலந்திருக்கும் ஆத்மதத்வத்தைத் தனித்துப் பிரித்துப்பார்க்கும் யோக்கியதை ஏற்பட்டுவிட்டால், அதிலேயே நிலைத்திருந்து ஆத்மாவல்லாததாகத் தோன்றும் எல்லா அம்சங்களையும் விசாரித்து அவைகள் பிரஹ்மத்தின் கார்யமாகவே இருப்ப தால் அவைகள் பிரஹ்மத்தைவிட வேறு பட்டதில்லையென்று உணரவேண்டும் என்கிறார்: -

**स्वं बोधमात्रं परिशुद्धतत्त्वं विज्ञाय सङ्घे नृपवच्च सैन्ये ।**
**तदात्मनैवात्मनि सर्वदा स्थितो विलापय ब्रह्मणि दृश्यजातम् ॥ २६६ ॥**

**ஸ்வம் போ³த⁴மாத்ரம் பரிஶுத்³த⁴தத்த்வம் விஜ்ஞாய**
**ஸங்கே⁴ ந்ருபவச்ச ஸைன்யே ।**
**ததா³த்மனைவாத்மனி ஸர்வதா³ ஸ்தி²தோ விலாபய**
**ப்³ரஹ்மணி த்³ருஶ்யஜாதம் ॥ 266 ॥**

| | | |
|---|---|---|
| **सैन्ये** | = | ஸைன்யத்தின் மத்தியிலுள்ள, |
| **ஸைன்யே** | | |
| **नृपवत्** | = | அரசனை (அரசனுக்குள்ள அடையாளங்களால் |
| | | பிரித்து அறிவதை) ப்போல, |
| **सङ्घे** | = | (சரீரம், இந்திரியம், பிராணன், அஹங்காரம் |
| **ஸங்கே⁴** | | முதலானவை சேர்ந்த) கூட்டத்தில், |
| **स्वं** | = | தன்னை (ஆத்ம ஸ்வரூபத்தை), |
| **ஸ்வம்** | | |
| **बोधमात्रं** | = | அறிவேயாகிற, |
| **போ³த⁴மாத்ரம்** | | |
| **परिशुद्धतत्त्वं** | = | வெகு சுத்தமான வாஸ்தவஸ்வரூபமாக, |
| **பரிஶுத்³த⁴தத்த்வம்** | | |
| **विज्ञाय** | = | நன்கு அறிந்துகொண்டு, |
| **விஜ்ஞாய** | | |
| **तदात्मनैव** | = | அந்த தத்வ ஸ்வரூபமாகவே, |
| **ததா³த்மனைவ** | | |

| | | |
|---|---|---|
| **आत्मनि** | = | தன்னிடத்தில், |
| **ஆத்மனி** | | |
| **सर्वदा** | = | எப்பொழுதும், |
| **ஸர்வதா³** | | |
| **स्थित:** | = | நிஜலத்தவஞுக, |
| **ஸ்தி²த:** | | |
| **दृश्यजातं** | = | தோன்றுவது எல்லாவற்றையும், |
| **த்³ருஶ்யஜாதம்** | | |
| **ब्रह्मणि** | = | பிரஹ்மத்திினிடத்திலேயே, |
| **ப்³ரஹ்மணி** | | |
| **विलापय** | = | நன்கு லயம் செய்துவிடு |
| **விலாபய** | | (266) |

(**அவதாரிகை**) இவ்விதம் ஜகத்தை லயம் செய்து தன்னிடத்தில் பிரஹ்மத் தையே பார்க்கும் நிஜல ஸித்தித்துவிட்டால், மறுபடியும் ஜனன, மரண ரூபமான, ஸம்ஸாரம் ஏற்படாது என்பதைக் குறிப்பிடுகிறுர்: -

**बुद्धौ गुहायां सदसद्विलक्षणं ब्रह्मास्ति सत्यं परमद्वितीयम् ।**
**तदात्मना योऽत्र वसेद्गुहायां पुनर्न तस्याङ्गगुहाप्रवेशः ॥ २६७ ॥**

**பு³த்³தௌ⁴ கு³ஹாயாம் ஸத³ஸத்³விலக்ஷணம்**
**ப்³ரஹ்மாஸ்தி ஸத்யம் பரமத்³விதீயம் ।**
**ததா³த்மனு யோ(அ)த்ர வஸேத்³கு³ஹாயாம்**
**புனர்ன தஸ்யாங்க³கு³ஹாப்ரவேஶ: ॥ 267 ॥**

| | | |
|---|---|---|
| **बुद्धौ** | = | புத்திரூபமான, |
| **பு³த்³தௌ⁴** | | |
| **गुहायां** | = | குஹைக்குள், |
| **கு³ஹாயாம்** | | |
| **सदसद्विलक्षणं** | = | கார்யத்திற்கும் காரணத்திற்கும் (அல்லது, |
| **ஸத³ஸத்³விலக்ஷணம்** | | பிருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் இவைகளுக்கு) வேறுபட்டதாய் |
| **सत्यं** | = | ஸத்யமாய் (எக்காலத்திலும் பாதிக்கப்படாமல் |
| **ஸத்யம்** | | இருக்கும் வஸ்துவாய்), |
| **परं** | = | (எல்லாவற்றிற்கும்) மேலானதாய், |
| **பரம்** | | |
| **अद्वितीय** | = | இரண்டாவது பதார்த்தமற்றதாய் உள்ள, |
| **அத்³விதீய** | | |

,

| | | |
|---|---|---|
| **ब्रह्म**<br>**ப்³ரஹ்ம** | = | பிரஹ்மம், |
| **अस्ति**<br>**அஸ்தி** | = | இருக்கிறது, |
| **तदात्मना**<br>**ததா³த்மநா** | = | அந்த பிரஹ்ம ஸ்வரூபமாகவே, |
| **यः**<br>**ய꞉** | = | எவன், |
| **अत्र**<br>**அத்ர** | = | இந்த, |
| **गुहायां**<br>**கு³ஹாயாம்** | = | ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரரூபமான குஹையில், |
| **वसेत्**<br>**வஸேத்** | = | வஸிப்பானோ, |
| **तस्य**<br>**தஸ்ய** | = | அவனுக்கு, |
| **पुनः**<br>**புந꞉** | = | மறுபடியும், |
| **अङ्गगुहाप्रवेशः**<br>**அங்க³கு³ஹாப்ரவேஶ꞉** | = | சரீரமாகிற குஹைக்குள் நுழைதல் (சரீரத்தில் நான் என்ற அபிமானம்), |
| **न**<br>**ந** | = | இருக்காது. |

ஐந்து கோசங்களுக்கும் 'குஹை' என்ற பெயர் உள்ள போதிலும் அன்னமயம், ப்ராணமயம், மனோமயம் என்னும் மூன்று குஹைகளுக்குப் புத்தி மூலமாகவே ஆத்மஸம்பந்தம் ஏற்படுவதாலும், ஸுஷுப்தியில் புத்தியில்லாததால் ஆத்ம ஸ்வரூபத்தை அறியமுடியாதபடியாலும், விக்ஞானமயகோசம் என்னும் புத்தி குஹையில் ஆத்மஸ்வரூபம் இருப்பதாகக் கூறப்பட்டது. ஆத்மா எங்கு உள்ளபோதிலும் மற்ற இடத்தில் ஆத்மாவை அறிய வழியில்லாததாலும் கண்ணாடி முகத்தைக் காட்டுவது போல் ஸத்வகுணப் பிரதானமான புத்தியின் வ்ருத்தியினால் மறைவு நீங்கியதும் ஆத்மஸ்வரூபம் விளங்குவதால் புத்தியில் ஆத்மா இருப்பதாகக் கூறப்பட்டது.

**(पाषाणे वृक्षः) பாஷாணே வ்ருக்ஷ꞉**

பாறையில் (அருகில்) மரம் இருக்கிறது என்பது போல

**बुद्धौ ब्रह्म अस्ति பு³த்³தௌ⁴ ப்³ரஹ்ம அஸ்தி**

புத்தியில் (அருகில்) ஆத்மா விளங்குகிறது என்று கருத்து. இந்த சுலோகத்தில் **अङ्ग अங்க³** என்ற பதத்தை ஸம்போதனமாகத் தனிப்பதமாக வைத்து 'அப்பா! குஹாப் பிரவேசம் கிடையாது' என்றும் பொருள் கூறலாம். பிரஹ்மத்தை ஆத்மாவாக அறிந்தவன் ஜீவன்முக்தி நிலையில் சரீரத்தில் வஸித்தாலும் அதை ஆத்மாவாக எண்ண மாட்டான். விதேஹமுக்தனுக்கு சரீரமே இருக்காது. **(267)**

## 27. வாஸனைகளைக் குறை

**(அவதாரிகை)** இதுவரை சொல்லிவந்த பிரகாரம் அனாத்மாவிலிருந்து ஆத்ம தத்வத்தை நன்கு பிரித்து அறிந்து அந்த பிரஹ்மத்தைத்தவிர வேறில்லையென்ற நிச்சயம் ஏற்பட்ட போதிலும், அனாதிகாலமாய் சரீராதிகளில் 'தான்' என்ற எண்ணம் இருந்துவந்திருப்பதால் அவ்வெண்ணத்தை நன்கு நிவ்ருத்தி செய்வதற்கு வேண்டிய பிரயத்னம் அவசியம் செய்யவேண்டும் என்பதை ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச் சொல் கிறார். இரண்டாவது சுலோகத்தில் கூறப்பட்ட

**आत्मानात्मविवेचनं स्वनुभवः**

**ஆத்மானாத்மவிவேசனம் ஸ்வனுபு⁴வ:**

என்ற பகுதி இதுவரை விவரிக்கப்பட்டது. இனி

**ब्रह्मात्मना संस्थितिः मुक्तिः**

**ப்³ரஹ்மாத்மனா ஸம்ஸ்தி²தி: முக்தி:**

என்ற பகுதி விவரிக்கப்படுகிறது: -

**ज्ञाते वस्तुन्यपि बलवती वासनाऽनादिरेषा**
**कर्ता भोक्ताऽप्यहमिति दृढा याऽस्य संसारहेतुः ।**
**प्रत्यग्दृष्ट्याऽऽत्मनि निवसता साऽपनेया प्रयत्ना-**
**न्मुक्तिं प्राहुस्तदिह मुनयो वासनातानवं यत् ॥ २६८ ॥**

**ஜ்ஞாதே வஸ்துன்யபி ப³லவதீ வாஸனா(அ)நாதி³ரேஷா**
**கர்தா போ⁴க்தா(அ)ப்யஹமிதி த்³ருடா⁴ யா(அ)ஸ்ய ஸம்ஸாரஹேது: ।**
**ப்ரத்யக்³த்³ருஷ்ட்யா(ஆ)த்மனி நிவஸதா ஸா(அ)பனேயா ப்ரயத்னா-**
**ந்முக்திம் ப்ராஹுஸ்ததி³ஹ முனயோ வாஸனாதானவம் யத் ॥ 268 ॥**

| | | |
|---|---|---|
| **वस्तुनि வஸ்துனி** | = | வாஸ்தவமாயுள்ள தத்வம், |
| **ज्ञाते अपि ஜ்ஞாதே அபி** | = | அறியப்பட்டுவிட்டபோதிலும், |

| | | |
|---|---|---|
| **या**<br>**யா** | = | எது, |
| **कर्ता**<br>**கர்தா** | = | கர்த்தா (புண்ணிய, பாபங்களை செய்கிறவன்), |
| **भोक्ता**<br>**போ⁴க்தா** | = | போக்தா (அவைகளின் பலனாகிய ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறவன்), |
| **अपि**<br>**அபி** | = | இரண்டும், |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **अनादिः**<br>**அநாதி³:** | = | அனாதிகாலம் தொட்டு இருப்பதாய், |
| **दृढा**<br>**த்³ருடா⁴** | = | மிகவும் திடமாய், |
| **अस्य**<br>**அஸ்ய** | = | இவனுக்கு (ஜீவனுக்கு), |
| **संसारहेतुः**<br>**ஸம்ஸாரஹேது:** | = | ஸம்ஸாரத்திற்கு காரணமாய் உள்ளதோ, |
| **एषा**<br>**ஏஷா** | = | இந்த, |
| **वासना**<br>**வாஸனா** | = | வாஸனை, |
| **बलवती**<br>**ப³லவதீ** | = | மிகவும் பலமுள்ளது, |
| **सा**<br>**ஸா** | = | அந்த வாஸனை, |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | ப்ரஹ்மத்தில், |
| **प्रत्यग्दृष्ट्या**<br>**ப்ரத்யக்³த்³ருஷ்ட்யா** | = | அந்தர்முகமாக ஆத்மாபேத ஞானத்துடன், |
| **निवसता**<br>**நிவஸதா** | = | நிலைத்திருக்கின்றவனால், |
| **प्रयत्नात्**<br>**ப்ரயத்னாத்** | = | வெகு பிரயாஸையுடன், |

| | | |
|---|---|---|
| **अपनेया** | = | விலக்க வேண்டியதாய் இருக்கிறது, |
| **அபனேயா** | | |
| **यत्** | = | எது, |
| **யத்** | | |
| **वासनातानवं** | = | வாஸனைகளை குறைப்பது என்பதோ, |
| **வாஸனாதானவம்** | | |
| **तत्** | = | அதையே, |
| **தத்** | | |
| **इह** | = | இங்கே (உலகத்தில்), |
| **இஹ** | | |
| **मुनयः** | = | (மனனம் செய்து தத்வ ஸாக்ஷாத்காரமடைந்த) |
| **முனய:** | | முனி சிரேஷ்டர்கள், |
| **मुक्तिं** | = | மோக்ஷமாக, |
| **முக்திம்** | | |
| **प्राहु** | = | சொல்கிறார்கள் |
| **ப்ராஹு** | | **(268)** |

**(அவதாரிகை)** ஆத்மாவிற்கு சரீராதிகளில் கர்த்தாவென்றும் போக்தாவென்றும் வாஸனை ஏற்படுவதற்குக்காரணம், எவ்வித கிரியா ஸம்பந்தமுமில்லாத தன்னை அவைகளுடன் பிராந்தியினால் ஒன்றாக நினைத்து, தானே கிரியை செய்வதாகவும் அந்தக் கிரியையின் பலனையனுபவிப்பதாகவும் நினைத்துக் கொள்வதுதான். இந்தத் தவறான நினைப்பே அத்யாஸம் எனப்படும். இவ்வெண்ணத்தை நன்கு போக்கினால்தான் ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வரூபம் தெளிவுபடும் என்கிறார்: -

**अहं ममेति यो भावो देहाक्षादावनात्मनि ।**
**अध्यासोऽयं निरस्तव्यो विदुषा स्वात्मनिष्ठया ॥ २६९ ॥**

**அஹம் மமேதி யோ பா⁴வோ தே³ஹாக்ஷாதா³வனாத்மனி ।**
**அத்⁴யாஸோ(அ)யம் நிரஸ்தவ்யோ விது³ஷா ஸ்வாத்மநிஷ்ட²யா ॥ 269 ॥**

| | | |
|---|---|---|
| **अनात्मनि** | = | ஆத்மாவல்லாத, |
| **அனாத்மனி** | | |
| **देहाक्षादौ** | = | சரீரம் இந்திரியம் முதலியதில், |
| **தே³ஹாக்ஷாதௌ³** | | |
| **अहं** | = | 'நான்' |
| **அஹம்** | | |
| **मम** | = | 'என்னுடையது' |
| **மம** | | |

| | | |
|---|---|---|
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **यः**<br>**யः** | = | எந்த, |
| **भावः**<br>**பா⁴வः** | = | எண்ணம் உண்டோ, |
| **अयं**<br>**அயம்** | = | இந்த, |
| **अध्यासः**<br>**அத்⁴யாஸः** | = | அத்யாஸமானது, |
| **विदुषा**<br>**விது³ஷா** | = | அறிவாளியால், |
| **स्वात्मनिष्ठया**<br>**ஸ்வாத்மநிஷ்ட²யா** | = | தன் ஆத்மாவில் நன்கு நிலைத்திருப்பது மூலமாய், |
| **निरस्तव्यः**<br>**நிரஸ்தவ்யः** | = | விலக்கப்படவேண்டும். |

**(269)**

**ज्ञात्वा स्वं प्रत्यगात्मानं बुद्धितद्वृत्तिसाक्षिणम् ।**
**सोऽहमित्येव सद्वृच्याऽनात्मन्यात्ममतिं जहि ॥ २७० ॥**

**ஜ்ஞாத்வா ஸ்வம் ப்ரத்யகா³த்மானம் பு³த்³தி⁴தத்³வ்ருத்திஸாக்ஷிணம் ।**
**ஸோ(அ)ஹமித்யேவ ஸத்³வ்ருச்யா(அ)னாத்மன்யாத்மமதிம் ஜஹி ॥ 270 ॥**

| | | |
|---|---|---|
| **बुद्धितद्वृत्तिसाक्षिणं**<br>**பு³த்³தி⁴தத்³வ்ருத்திஸாக்ஷிணம்** | = | புத்திக்கும் அதன் விருத்திகளுக்கும் ஸாக்ஷியாக விருக்கும், |
| **प्रत्यगात्मानं**<br>**ப்ரத்யகா³த்மானம்** | = | உள்ளேயுள்ள ஆத்மாவாக, |
| **स्वं**<br>**ஸ்வம்** | = | தன்னை, |
| **ज्ञात्वा**<br>**ஜ்ஞாத்வா** | = | அறிந்துகொண்டு, |
| **सः**<br>**ஸः** | = | அவர் தான், |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **इत्येव**<br>**இத்யேவ** | = | என்றே (எப்பொழுதும் எவ்விதமாயும் பாதிக்கப்படாமல்) இருந்து வருகிற பிரஹ்மா பேத விஷயமான விருத்தியினால், |

| | | |
|---|---|---|
| **अनात्मनि**<br>**அனுத்மனி** | = | ஆத்மாவல்லாததில் வைத்திருக்கும், |
| **आत्ममतिं**<br>**ஆத்மமதிம்** | = | 'நான்' என்கிற எண்ணத்தை, |
| **जहि**<br>**ஜஹி** | = | விட்டுவிடு. |

**(அவதாரிகை)** ஸம்ஸாரத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட வாஸனை மூன்றுவிதம் என்று எடுத்துக்காட்டுகிறார்: -

**लोकानुवर्तनं त्यक्त्वा त्यक्त्वा देहानुवर्तनम् ।**
**शास्त्रानुवर्तनं त्यक्त्वा स्वाध्यासापनयं कुरु ॥ २७१ ॥**

**லோகானுவர்தனம் த்யக்த்வா த்யக்த்வா தே³ஹானுவர்தனம் ।**
**ஶாஸ்த்ரானுவர்தனம் த்யக்த்வா ஸ்வாத்⁴யாஸாபனயம் குரு ॥ 271 ॥**

| | | |
|---|---|---|
| **लोकानुवर्तनं**<br>**லோகானுவர்தனம்** | = | உலகப்போக்கை அனுஸரித்து நடப்பது என்பதை, |
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | விட்டுவிட்டு, |
| **देहानुवर्तनं**<br>**தே³ஹானுவர்தனம்** | = | சரீரத்தின் போக்கை அனுஸரித்து நடப்பது என்பதையும், |
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | விட்டுவிட்டு, |
| **शास्त्रानुवर्तनं**<br>**ஶாஸ்த்ரானுவர்தனம்** | = | (ஆத்மக்ஞானத்திற்குப் பிரயோஜனப்படாத) சாஸ்திரத்தை அனுஸரித்து நடப்பது என்பதையும், |
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | விட்டுவிட்டு, |
| **स्वाध्यासापनयं**<br>**ஸ்வாத்⁴யாஸாபனயம்** | = | தன்னிடத்திலுள்ள (தன் விஷயமாயுள்ள) அத்யாஸத்தின் விலக்குதல் என்பதை, |
| **कुरु**<br>**குரு** | = | செய். **(271)** |

**(அவதாரிகை)** இந்த மூன்றுவித வாஸனைகளை அனுபவித்துக் சரியானபடி ஞானம் ஏற்படாது கொண்டேயிருந்தால் என்பதைச் சொல்கிறார்: -

**लोकवासनया जन्तोः शास्त्रवासनयापि च ।**
**देहवासनया ज्ञानं यथावन्नैव जायते ॥ २७२ ॥**

**லோகவாஸனயா ஜந்தோঃ ஶாஸ்த்ரவாஸனயாபி ச ।**
**தே³ஹவாஸனயா ஜ்ஞானம் யதா²வன்னைவ ஜாயதே ॥ 272 ॥**

| | | |
|---|---|---|
| **लोकवासनया** **லோகவாஸனயா** | = | உலகத்தார் ஒப்புக்கொள்ளும்படி நடந்துகொள்ள வேண்டுமென்கிற வாஸனையிருந்தாலும், |
| **शास्त्रवासनयापि च** **ஶாஸ்த்ரவாஸனயாபி ச** | = | பலவித சாஸ்திரங்களை வாசித்துத் தெரிந்து அவைகளின்படி நடக்கவேண்டு மென்கிற வாஸனையிருந்தாலும், |
| **देहवासनया** **தே³ஹவாஸனயா** | = | சரீரம் அபேக்ஷிக்கிற படியே நடக்கவேண்டு மென்கிற வாஸனையிருந்தாலும், |
| **जन्तोः** **ஜந்தோঃ** | = | ஜீவனுக்கு, |
| **ज्ञानं** **ஜ்ஞானம்** | = | ஆத்மக்ஞானமானது, |
| **यथावत्** **யதா²வத்** | = | உள்ளபடி, |
| **नैव जायते** **நைவ ஜாயதே** | = | ஏற்படவே ஏற்படாது. |

"உலகில் யாரும் என்னைக் குறை கூற முடியாமல் எல்லோரும் என்னைப் போற்றும்படி நடந்துகொள்வேன்" என்ற அபிமானம் லோகவாஸனை. இது ஞான வழியில் செல்வதற்குப் பெரிய இடையூறு. ஏனெனில் இம்மாதிரி உலகில் யாரும் வாழமுடியாது. எவன்தான் உலகைத் திருப்திப்படுத்த முடியும்? எல்லா ஜனங்களுக்கும் திருப்தியை உண்டுபண்ணும்படியான உபாயம் ஒன்றுமில்லை. நமக்கு நன்மை தரும் காரியத்தைத்தான் நாம் செய்யவேண்டும். இதுபற்றி உலகில் பலர் பலவாறு பேசுவதால் நமக்கு லாபமும் இல்லை; நஷ்டமுமில்லை.

**को लोकमाराधयितुं समर्थः**
**विद्यते न खलु कश्चिदुपायः सर्वलोकपरितोषकरो यः ।**
**सर्वया स्वहितमा चरणीयं किं करिष्यति जनो बहुजरूपः ॥**

**கோ லோகமாராத⁴யிதும் ஸமர்த²ঃ**
**வித்³யதே ந க²லு கஶ்சிது³பாயঃ ஸர்வலோகபரிதோஷகரோ யঃ ।**
**ஸர்வயா ஸ்வஹிதமா சரணீயம் கிம் கரிஷ்யதி ஜனோ ப³ஹுஜரூபঃ ॥**

"உலகம் போற்றினாலும் தூற்றினாலும் ஸமமாக எண்ண வேண்டும். **'तुल्यनिन्दास्तुतिः'** **'துல்யநிந்தா³ஸ்துதிঃ'** என்று கீதையில் பகவான் சொல்கிறார்.

எப்பொழுதும் படித்துக்கொண்டே இருப்பது, எல்லா சாஸ்திரங்களையும் அறிந்துகொள்வதில் ஈடுபடுவது, அனுஷ்டானத்திலேயே ஈடுபட்டிருப்பது இவை சாஸ்திர வாஸனையாகும். தேஹத்தில் தான் என்ற எண்ணம் வேரூன்றியிருப்பது, தேஹ தோஷங்களை மூடி மறைப்பது, பிராந்தி இவை தேஹ வாஸனையாகும். இவைபற்றி விரிவாக ஜீவன்முக்தி விவேகத்தில் காணலாம். **(272)**

## संसारकारागृहमोक्षमिच्छोरयोमयं पादनिबद्धमृङ्खलम् ।
## वदन्ति तज्ज्ञाः पटुवासनात्रयं योऽस्माद्विमुक्तः समुपैति मुक्तिम् ॥ २७३ ॥

**ஸம்ஸாரகாராக்³ருஹமோக்ஷமிச்சோ²ரயோமயம்**
**பாத³நிப³த்³த⁴ம்ருங்க²லம் ।**
**வத³ந்தி தஜ்ஜ்ஞா: படுவாஸனாத்ரயம் யோ(அ)ஸ்மாத்³விமுக்த:**
**ஸமுபைதி முக்திம் ॥ 273 ॥**

**पटुवासनात्रयं** = திடமாயிருக்கும் வாஸனைகள் மூன்றையும்,
**படுவாஸனாத்ரயம்**
**संसारकारागृहमोक्षं** = ஸம்ஸாரமாகிற காராக்கிருஹத்திலிருந்து
**ஸம்ஸாரகாராக்³ருஹமோக்ஷம்** விடுதலையடைவதை,
**इच्छोः** = விரும்புபவனுக்கு,
**இச்சோ²:**
**अयोमयं** = இரும்பினால் செய்திருக்கும்,
**அயோமயம்**
**पादनिबद्धमृङ्खलं** = கால்களில் நன்கு பூட்டப்பட்டிருக்கும்
**பாத³நிப³த்³த⁴ம்ருங்க²லம்** விலங்கு என்று,
**तज्ज्ञाः** = அதன் தன்மையை அறிந்தவர்கள்,
**தஜ்ஜ்ஞா:**
**वदन्ति** = சொல்கிறார்கள்,
**வத³ந்தி**
**यः** = எவன்,
**ய:**
**अस्मात्** = இதிலிருந்து,
**அஸ்மாத்**
**विमुक्तः** = விடுபட்டவனே (அவன் தான்),
**விமுக்த:**
**मुक्तिं** = மோக்ஷத்தை,
**முக்திம்**
**समुपैति** = நன்கு அடைவான்.
**ஸமுபைதி** **(273)**

**(அவதாரிகை)** இந்த ஞான ப்ரதிபந்தக வாஸனை விலகி ஆத்ம வாஸனை எழுச்சி பெற உபாயத்தை திருஷ்டாந்த புரஸ்ஸரமாக விளக்கிச் சொல்கிறார்: -

**जलादिसंपर्कवशात्प्रभूत दुर्गन्धधूता गरुदिव्यवासना ।**
**संघर्षणेनैव विभाति सम्यग्विधूयमाने सति बाह्यगन्धे ॥ २७४ ॥**

**ஜலாதி³ஸம்பர்கவஶாத்ப்ரப்⁴ருத து³ர்க³ந்த⁴தூ⁴தா**
**க³ருதி³வ்யவாஸனா ।**
**ஸங்க⁴ர்ஷணேனைவ விபா⁴தி ஸம்யக்³விதூ⁴யமானே**
**ஸதி பா³ஹ்யக³ந்தே⁴ ॥ 274 ॥**

| | | |
|---|---|---|
| **जलादिसंपर्कवशात्** ஜலாதி³ஸம்பர்கவஶாத் | = | ஜலம் முதலானவைகளின் சேர்க்கை (காரணமாய்) ஏற்பட்டிருக்கும், |
| **प्रभूतदुर्गन्धधूता गरुदिव्यवासना** ப்ரபூ⁴தது³ர்க³ந்த⁴தூ⁴தா க³ருதி³வ்யவாஸனா | = | ஏராளமான துர்நாற்றத்தினால் விரட்டப்பட்டிருக்கிற அகில் கட்டையின் மனோஹரமான வாஸனையானது, |
| **संघर्षणेन** ஸங்க⁴ர்ஷணேன | = | (அக்கட்டையை) நன்கு அறைத்துத் தேய்ப்பதினால், |
| **बाह्यगन्धे** பா³ஹ்யக³ந்தே⁴ | = | மேலுள்ள நாற்றம், |
| **विधूयमाने सति** விதூ⁴யமானே ஸதி | = | நன்கு விலக்கப்பட்டால், |
| **एव** ஏவ | = | தான், |
| **सम्यक्** ஸம்யக் | = | நன்றாக, |
| **विभाति** விபா⁴தி | = | விளங்கும். |

(274)

**अन्तःश्रितानन्तदुरन्तवासना धूलीविलिप्ता परमात्मवासना ।**
**प्रज्ञातिसंघर्षणतो विशुद्धा प्रतीयते चन्दनगन्धवत्स्फुटा ॥ २७५ ॥**

**அந்த:ஶ்ரிதானந்தது³ரந்தவாஸனா தூ⁴லீவிலிப்தா**
**பரமாத்மவாஸனா ।**
**ப்ரஜ்ஞாதிஸங்க⁴ர்ஷணதோ விஶுத்³தா⁴ ப்ரதீயதே**
**சந்த³னக³ந்த⁴வத்ஸ்பு²டா ॥ 275 ॥**

| | | |
|---|---|---|
| **अन्तःश्रितानन्तदुरन्तवासना धूलीविलिप्ता** அந்த:ஶ்ரிதானந்தது³ரந்தவாஸனா தூ⁴லீவிலிப்தா | = | (மனஸிற்கு) உள்ளே ஒட்டிக் கொண்டிருக்கும் |

கணக்கில்லாத ஸூலபமாய் போக்க முடியாத வாஸனைகளாகிற அழுக்கினுல் நன்கு பூசப்பட்டதாயிருக்கும்,

| | | |
|---|---|---|
| **परमात्मवासना** பரமாத்மவாஸனு | = | பரமாத்மாவின் வாஸனை, |
| **प्रज्ञातिसंघर्षणत:** ப்ரஜ்ஞாதிஸங்க⁴ர்ஷணத: | = | நல்ல அறிவினுல் நன்ருக உறைத்துத் தேய்ப்பதினுல், |
| **विशुद्धा** விஶுத்³தா⁴ | = | நன்கு சுத்தமாகி, |
| **चन्दनगन्धवत्** சந்த³னக³ந்த⁴வத் | = | சந்தனத்தின் கந்தம்போல, |
| **स्फुटा** ஸ்பு²டா | = | தெளிவாக, |
| **प्रतीयते** ப்ரதீயதே | = | அறியப்படும். |

(275)

**अनात्मवासना जालैस्तिरोभूतात्मवासना ।**
**नित्यात्मनिष्ठया तेषां नाशे भाति स्वयं स्फुटा ॥ २७६ ॥**

**அனுத்மவாஸனு ஜாலைஸ்திரோபூ⁴தாத்மவாஸனு ।**
**நித்யாத்மநிஷ்ட²யா தேஷாம் நாஶே பா⁴தி ஸ்வயம் ஸ்பு²டா ॥ 276 ॥**

| | | |
|---|---|---|
| **अनात्म-वासना-जालै:** அனுத்ம-வாஸனா-ஜாலை: | = | அநாத்ம விஷயமான வாஸனைகளின் கூட்டங்களால், |
| **तिरोभूत-आत्म-वासना** திரோபூ⁴த-ஆத்ம-வாஸனு | = | மறைக்கப்பட்டிருக்கிற ஆத்ம விஷயமான வாஸனையானது, |
| **तेषां** தேஷாம் | = | அந்த அநாத்ம வாஸனைகளுக்கு, |
| **नित्य-आत्म निष्ठया** நித்ய-ஆத்ம நிஷ்ட²யா | = | எப்பொழுதும் - ஆத்மாவிலேயே - நிலைத்திருப்பதினுல், |
| **नाशे** நாஶே | = | நாசமேற்பட்டுவிட்டால், |
| **स्वयं** ஸ்வயம் | = | தானே, |
| **स्फुटा** ஸ்பு²டா | = | தெளிவாக, |
| **भाति** பா⁴தி | = | விளங்கும். |

லோகவாஸனை, தேஹவாஸனை, சாஸ்த்ரவாஸனை, கீதையில் தம்பம், தர்ப்பம் என்று சொல்லப்பட்டுள்ள ஆஸுர ஸம்பத் இவை அநாத்ம வாஸனைகளாகும். **(276)**

**(அவதாரிகை)** ஆத்ம வாஸனை அதிகமாக அதிகமாக அநாத்ம வாஸனை குறைந்து வரும்; அநாத்ம வாஸனை பூராவும் விலகி- விட்டால் எவ்வித இடஞ்சலுமன்னியில் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்கிறுர்: -

**यथा यथा प्रत्यगवस्थितं मनस्तथा तथा मुञ्चति बाह्यवासनाः ।**
**निःशेषमोक्षे सति वासनानामात्मानुभूतिः प्रतिबन्धशून्या ॥ २७७ ॥**

**யதா² யதா² ப்ரத்யக³வஸ்தி²தம் மனஸ்ததா² ததா²**
**முஞ்சதி பா³ஹ்யவாஸனா: ।**
**நிःஶேஷமோக்ஷே ஸதி வாஸனாநாமாத்மானுபூ⁴திः**
**ப்ரதிப³ந்த⁴ஶூன்யா ॥ 277 ॥**

| | | |
|---|---|---|
| **मनः** மனः | = | மனஸானது, |
| **यथा यथा** யதா² யதா² | = | எவ்வளவுக்கெவ்வளவு, |
| **प्रत्यक्-अवस्थितं** ப்ரத்யக்-அவஸ்தி²தம் | = | உள்ளேயுள்ள ஆத்ம தத்வத்தில் நிலைத்திருக்கிறதோ, |
| **तथा तथा** ததா² ததா² | = | அவ்வளவுக்கவ்வளவு, |
| **बाह्यवासनाः** பா³ஹ்யவாஸனா: | = | வெளி வாஸனைகளை, |
| **मुञ्चति** முஞ்சதி | = | விட்டுவிடுகிறுன், |
| **वासनानां** வாஸனைனும் | = | அந்த வெளி வாஸனைகளுக்கு, |
| **निःशेष-मोक्षे** நிःஶேஷ-மோக்ஷே | = | பாக்கியன்னியில் விலக்குதல், |
| **सति** ஸதி | = | ஏற்பட்டுவிட்டதேயானுல், |
| **आत्म-अनुभूतिः** ஆத்ம-அனுபூ⁴திः | = | ஆத்ம தத்வத்தின் அனுபவம், |
| **प्रतिबन्ध शून्या** ப்ரதிப³ந்த⁴ ஶூன்யா | = | எவ்வித தடையும் அற்றதாக (இருக்கும்). **(277)** |

## 28. அத்யாஸத்தைப்போக்கு

**(அவதாரிகை)** வெளி வாஸனைகளை எப்படி குறைத்துக்கொண்டு வந்து இல்லாமலே செய்து விடுகிறது என்பதை 9 சுலோகங்களில் எடுத்துச்சொல்கிறுர். காரியத்தையழிப்பதன் மூலம் காரணத்தையழிக்கமுடியும் என்ற நியாயப்படி, வாஸனாகாரிய மான பிராந்தியின் நாசத்தை வாஸனாக்ஷயத்திற்குக் காரண மாகக் கூறுகிறார்: -

**स्वात्मन्येव सदा स्थित्या मनो नश्यति योगिनः ।**
**वासनानां क्षयश्चातः स्वाध्यासापनयं कुरु ॥ २७८ ॥**

**ஸ்வாத்மன்யேவ ஸதா³ ஸ்தி²த்யா மனோ நஶ்யதி யோகி³ன: ।**
**வாஸனானாம் க்ஷயஶ்சாத: ஸ்வாத்⁴யாஸாபனயம் குரு ॥ 278 ॥**

| | | |
|---|---|---|
| **स्व-आत्मनि एव**<br>**ஸ்வ-ஆத்மனி ஏவ** | = | தன் ஆத்மஸ்வரூபத்திலேயே, |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **स्थित्या**<br>**ஸ்தி²த்யா** | = | நிலைப்பதால், |
| **योगिनः**<br>**யோகி³ன:** | = | யோகியினுடைய, |
| **मनः**<br>**மன:** | = | மனஸானது, |
| **नश्यति**<br>**நஶ்யதி** | = | அடங்கிவிடுகிறது. (வெளியில் கிளம்பாமல் இருந்துவிடுகிறது), |
| **अतः**<br>**அத:** | = | அதனுல் (மனஸ் அடங்குவதினுல்), |
| **वासनानां च**<br>**வாஸனானாம் ச** | = | வெளி வாஸனைகளுக்கும், |
| **क्षय**<br>**க்ஷய** | = | (இடமில்லாததினுல்) ஓய்வு (ஏற்பட்டு விடுகிறது), |
| **अतः**<br>**அத:** | = | ஆகையால், (இந்த விதமாய்), |
| **स्व-अध्यास-उपनयं**<br>**ஸ்வ-அத்⁴யாஸ-உபனயம்** | = | தன்னிடத்திலுள்ள அத்யாஸத்தின் - விலக்குதலை, |
| **कुरु**<br>**குரு** | = | செய். |

ரஜஸ் தமோ விருத்திகள் அடங்கி ஸத்வகுணம் மேலிட்டு ப்ரஹ்மத்யானம் செய்பவனுக்கு மனம் வேகமிழந்து கட்டுப்படுகிறது. அவனுக்கு சுத்தவாஸனைகள் உறுதிப்பட்டிருப்பதால் முன்பின் ஆலோசியாமல் திடீரென கோபம் முதலியவை ஏற்படுவதற்கு காரணமான மனதிலுள்ள வாஸனை அழிந்து, போவதால் வெளிப்படை யான காரணம் இருந்தபோதிலும், கோபம் முதலியவை ஏற்படுவதில்லை. இதுதான் வாஸனாக்ஷயம் என்பது. **(278)**

(**அவதாரிகை**) ராஜஸ தாமஸ வ்ருத்திகளை யடக்குவதற்கு உபாயம் சொல்கிறார்: -

**तमो द्वाभ्यां रजः सत्त्वात्सत्त्वं शुद्धेन नश्यति ।**
**तस्मात्सत्त्वमवष्टभ्य स्वाध्यासापनयं कुरु ॥ २७९ ॥**

**தமோ த்³வாப்⁴யாம் ரஜ: ஸத்த்வாத்ஸத்த்வம் ஶுத்³தே⁴ன நஶ்யதி ।**
**தஸ்மாத்ஸத்த்வமவஷ்டப்⁴ய ஸ்வாத்⁴யாஸாபனயம் குரு ॥ 279 ॥**

**तमः** = தமஸ் (தமோகுணம் மேலிடுவதினால்
**தம:** ஒற்படக் கூடிய மனோவிருத்திகள்),
**द्वाभ्यां** = (ஸத்வம், ரஜஸ் ஆகிய) இரண்டினாலும்,
**த்³வாப்⁴யாம்**
**रजः** = ரஜஸ் (ரஜோகுணம் மேலிடும்போதுள்ள
**ரஜ:** விருத்திகள்),
**सत्त्वात्** = ஸத்வத்தினாலும்,
**ஸத்த்வாத்**
**सत्त्वं** = ஸத்வம் (ஸத்வகுணம் மேலிடுவதினால்
**ஸத்த்வம்** ஏற்படும் விருத்திகள்கூட),
**शुद्धेन** = சுத்தத்தினால், (குணமற்ற மேலான
**ஶுத்³தே⁴ன** நிலையடைவதினால்),
**नश्यति** = அடங்கிவிடும்,
**நஶ்யதி**
**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**
**सत्त्वं** = (அப்பியாஸ காலத்தில்) ஸத்வத்தை,
**ஸத்த்வம்**
**अवष्टभ्य** = நன்றாக கைக்கொண்டு,
**அவஷ்டப்⁴ய**
**स्व-अध्यास अपनयं** = தன்னிடமுள்ள அத்யாஸத்தின் விலக்குதலை,
**ஸ்வ-அத்⁴யாஸ அபனயம்**

**कुरु** = செய்.
**குரு**

தேஹப்பயிற்சியாலும், காவ்யசாஸ்திரங்களை வாசிப்பதாலும் சோம்பல் தூக்கம் முதலான தமோகுண காரியம் நீங்குகிறது. மனதை ஒருநிலைப்படுத்துவது என்ற ஸத்வ காரியத்தால் கர்மாவைச் செய்வது என்ற ரஜோகுண காரியம் நீங்கி விடுகிறது. நிர்குண த்யானத்தால் ஸத்வகுண காரியமான ஞானமும் ஏற்படுவதில்லை. ஆதவே தமோகுணத்தால் ஆவரணம் ஏற்பட்டு ரஜோகுணத்தால் ஏற்படும் விக்ஷேப ரூபமான பிரமங்களை, ஸத்வகுணத்தைக் கைக்கொண்டு நீக்க வேண்டும். **(279)**

**(அவதாரிகை)** இவ்வித அப்யாஸத்திலேயே ஈடுபட்டுவிட்டால் அப்பியாஸம், செய்வதற்குக்கூட அவசியமாயிருக்கும் இந்த சரீரத்தை காப்பாற்றிக்கொள்வதற்குப் பிரயத்தினம் செய்ய வேண்டாமா என்றல் இந்த சரீரத்தை உண்டுபண்ணின முன் செய்த கர்மாவே இது இருக்கும் வரை போஷணம் செய்யும் என்று நன்றுக நம்பி தைர்யமாக இருக்கலாம் என்கிறுர்: -

**प्रारब्धं पुष्यति वपुरिति निश्चित्य निश्चलः ।**
**धैर्यमालम्ब्य यत्नेन स्वाध्यासापनयं कुरु ॥ २८० ॥**

**ப்ராரப்³த⁴ம் புஷ்யதி வபுரிதி நிஶ்சித்ய நிஶ்சல: ।**
**தை⁴ர்யமாலம்ப்³ய யத்தேன ஸ்வாத்⁴யாஸாபனயம் குரு ॥ 280 ॥**

**प्रारब्धं** = (முன்செய்திருக்கும் கர்மாக்களில் இப்பொழுது
**ப்ராரப்³த⁴ம்** இந்த சரீரத்தில் பலன் கொடுக்க) ஆரம்பித்திருக்கும் கர்மாவே,
**वपुः** = சரீரத்தை,
**வபு:**
**पुष्यति** = போஷணம் செய்கிறது,
**புஷ்யதி**
**इति** = என்று,
**இதி**
**निश्चित्य** = தீர்மானமாய் அறிந்து கொண்டு,
**நிஶ்சித்ய**
**निश्चलः** = (அதற்காகவென்று எவ்வித) கார்யமும்
**நிஶ்சல:** செய்யாமல்,
**धैर्य** = தைர்யத்தை,
**தை⁴ர்ய**

**आलम्ब्य** = நன்கு பிடித்துக்கொண்டு,

**ஆலம்ப்³ய**

**यत्तेन** = பிரயாஸையோடு,

**யத்தேன**

**स्व-अध्यास-अपनयं** = தன்னிடம் உள்ள அத்யாஸத்தின் விலக்குதலை,

**ஸ்வ-அத்⁴யாஸ-அபனயம்**

**कुरु** = செய்.

**குரு** **(280)**

**(அவதாரிகை)** அந்த பிரயாஸை எவ்விதமிருக்கவேண்டுமென்பதையும் காட்டுகிறார்: -

**नाहं जीवः परं ब्रह्मेत्यतद्व्यावृत्तिपूर्वकम् ।**
**वासनावेगतः प्राप्तस्वाध्यासापनयं कुरु ॥ २८१ ॥**

**நாஹம் ஜீவः பரம் ப்³ரஹ்மேத்யதத்³வ்யாவ்ருத்திபூர்வகம் ।**
**வாஸனாவேக³தः ப்ராப்தஸ்வாத்⁴யாஸாபனயம் குரு ॥ 281 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**जीवः** = ஜீவன்,

**ஜீவः**

**न** = இல்லை,

**ந**

**परं ब्रह्म** = மேலான பிரஹ்மமே,

**பரம் ப்³ரஹ்ம**

**इति** = என்று,

**இதி**

**अतत्-द्व्यावृत्ति पूर्वकं** = அது அல்லாத (பிரஹ்மமல்லாத) அம்சத்தை

**அதத்-த்³வ்யாவ்ருத்தி பூர்வகம்** - விலக்கிவிடுவதை முன்னிட்டுக் கொண்டு,

**वासना वेगतः** = (அனாத்ம ஸம்பந்தத்தினால் ஏற்பட்டிருக்கும்)

**வாஸனா வேக³தः** வாஸனைகளின் வேகத்தினால்,

**प्राप्त-स्व-अध्यास-अपनयं** = வந்திருக்கிற தன்னிடமுள்ள அத்யாஸத்தின்

**ப்ராப்த-ஸ்வ-அத்⁴யாஸ-அபனயம்** விலக்குதலை,

**कुरु** = செய்.

**குரு** **(281)**

**(அவதாரிகை)** எந்த பலத்தைக்கொண்டு அநாத்மாவை விலக்க முடியும், எந்த பலத்தைக்கொண்டு ப்ரஹ்மமே நான் என்று பாவிக்கமுடியும் என்றல், வேதம், யுக்தி, அநுபவம் மூன்றுமே பலம் கொடுக்கும். அந்த பலத்தைக்கொண்டு, சில ஸமயம் தோன்றக்கூடிய அத்யாஸத்தை விலக்கிவிடலாம் என்கிறர்: -

**श्रुत्या युक्त्या स्वानुभूत्या ज्ञात्वा सार्वात्म्यमात्मनः ।**
**क्वचिदाभासतः प्राप्तस्वाध्यासापनयं कुरु ॥ २८२ ॥**

**ஶ்ருத்யா யுக்த்யா ஸ்வானுபூ⁴த்யா ஜ்ஞாத்வா ஸார்வாத்ம்யமாத்மனः ।**
**க்வசிதா³பா⁴ஸதः ப்ராப்தஸ்வாத்⁴யாஸாபனயம் குரு ॥ 282 ॥**

**श्रुत्या** / **ஶ்ருத்யா** = வேதத்திஞலும் (உபநிஷத் வாக்யங்களாலும்),
**युक्त्या** / **யுக்த்யா** = (வேதத்தையனுஸரித்த) யுக்தியிஞலும்,
**स्व-अनु-भूत्या** / **ஸ்வ-அனு-பூ⁴த்யா** = (அவ்விரண்டையும் அனுஸரித்த) தன்னுடைய அனுபவத்திஞலும்,
**आत्मनः** / **ஆத்மனः** = ஆத்மாவின்,
**सार्वात्म्यं** / **ஸார்வாத்ம்யம்** = (கல்பிதமாயிருக்கும்) எல்லா பதார்த்தங்களுடையவும் வாஸ்தவமான ஸ்வரூபமாயிருக்கும் தன்மையை,
**ज्ञात्वा** / **ஜ்ஞாத்வா** = அறிந்து கொண்டு,
**क्वचित्** / **க்வசித்** = எப்பொழுதாவது (வாஸனைகளின் வேகத்திஞல்),
**आभासतः** / **ஆபா⁴ஸதः** = தோன்றுவது காரணமாக,
**प्राप्तस्व-अध्यास-अपनयं** / **ப்ராப்தஸ்வ-அத்⁴யாஸ-அபனயம்** = வந்திருக்கிற தன்னிடமுள்ள அத்யாஸத்தின் - விலக்குதஃல,
**कुरु** / **குரு** = செய்.

**'आत्मैवेदं सर्वम्'** **'ஆத்மைவேத³ம் ஸர்வம்'** (இது எல்லாம் ஆத்மஸ்வரூபம் தான்) என்பது ச்ருதி ஆத்மப்ரகாசத்தாலேயே எல்லாம் விளங்குகிறபடியாலும் ஆத்மப்ரகாசமில்லாமல் விளங்காத படியாலும், ஆத்மாவைக்காட்டிலும் ப்ரபஞ்சம் வேறு அல்ல. மேலும் எல்லாவற்றிற்கும்'ஆத்மா அதிஷ்டானமானதாலும் இதைக் காட்டிலும் ஆரோபிதமான ப்ரபஞ்சம் வேறு அல்ல என்பது யுக்தி. இவைகஃள யொட்டிய அனுபவம் இவை மூலம் உண்மையான ஆத்மஸ்வரூபத்தை அறிந்து,

ஆத்மச் சாயையைக்கொண்டு கோசங்களையும் ஆத்மாவென எண்ணி அத்யாஸத்தால் ஏற்படும் நான் என்ற நினைப்பை விட்டுவிட வேண்டும். **(282)**

**अन्नादानविसर्गाभ्यामीषन्नास्ति क्रिया मुनेः ।**
**तदेकनिष्ठया नित्यं स्वाध्यासापनयं कुरु ॥ २८३ ॥**

**அந்நாதா3னவிஸர்கா3ப்4யாமீஷன்னாஸ்தி க்ரியா முனே: ।**
**ததே3கநிஷ்ட2யா நித்யம் ஸ்வாத்4யாஸாபனயம் குரு ॥ 283 ॥**

| | | |
|---|---|---|
| **अन्न-आदान-विसर्गाभ्यां** **அன்ன-ஆதா3ன-விஸர்கா3ப்4யாம்** | = | (பிராரப்த கர்மாவினாலேயே ஏற்படும்) அன்னம் எடுத்துக் கொள்ளல் மலவிஸர்ஜனம் இவைகளைத்தவிர, |
| **मुनेः** **முனே:** | = | எப்பொழுதும் மனனம் செய்து கொண்டிருப்பவருக்கு, |
| **ईषत्** **ஈஷத்** | = | கொஞ்சம்கூட, |
| **क्रिया** **க்ரியா** | = | கார்யம், |
| **न अस्ति** **ந அஸ்தி** | = | கிடையாது, |
| **तत्-एक-निष्ठया** **தத்-ஏக-நிஷ்ட2யா** | = | அது (பிரஹ்மம்) ஒன்றிலேயேநிலையுடன், |
| **नित्यं** **நித்யம்** | = | எப்பொழுதும், |
| **स्व-अध्यास-अपनयं** **ஸ்வ-அத்4யாஸ-அபனயம்** | = | தன்னிடமுள்ள அத்யாஸத்தின் விலக்குதலை, |
| **कुरु** **குரு** | = | செய். |

**(283)**

**(அவதாரிகை)** அத்யாஸத்தைப் போக்குவதற்கு வேதத்தின் பலத்தினால், ஸாத்யமென்று முந்தின சுலோகத்தில் சொன்னதையனுசரித்து அவ்வேத வாக்கியங்கள் “தத்த்வம் அஸி” முதலான மஹாவாக்கியங்கள் என்கிறார்: -

**तत्वमस्यादिवाक्योत्थब्रह्मात्मैकत्वबोधतः ।**
**ब्रह्मण्यात्मत्वदार्ढ्याय स्वाध्यासापनयं कुरु ॥ २८४ ॥**

**தத்வமஸ்யாதி3வாக்யோத்த2ப்3ரஹ்மாத்மைகத்வபோ3த4த: ।**
**ப்3ரஹ்மண்யாத்மத்வதா3ர்ட்4யாய ஸ்வாத்4யாஸாபனயம் குரு ॥ 284 ॥**

| | | |
|---|---|---|
| मृत्युः<br>ம்ருத்யு: | = | மிருத்யு (நாசத்திற்குக் கரணம்), |
| इति<br>இதி | = | என்று (திருதராஷ்டிரருக்கு உபதேசிக்கும்போது), |
| आह<br>ஆஹ | = | சொல்லியிருக்கிறுர். (322) |

**न प्रमादादनर्थोऽन्यो ज्ञानिनः स्वस्वरूपतः ।**
**ततो मोहस्ततोऽहंधीस्ततो बन्धस्ततो व्यथा ॥ ३२३ ॥**

**ந ப்ரமாதா³த³னர்தோ²(அ)ன்யோ ஜ்ஞானினः ஸ்வஸ்வரூபதः ।**
**ததோ மோஹஸ்ததோ(அ)ஹந்தீ⁴ஸ்ததோ ப³ந்த⁴ஸ்ததோ வ்யதா² ॥ 323 ॥**

| | | |
|---|---|---|
| ज्ञानिनः<br>ஜ்ஞானினः | = | ஞானிக்கு, |
| स्वस्वरूपतः<br>ஸ்வஸ்வரூபதः | = | தன் ஸ்வரூபத்திலிருந்து, |
| प्रमादात्<br>ப்ரமாதா³த் | = | நழுவுதலைவிட, |
| अन्यः<br>அன்யः | = | வேறு, |
| अनर्थः<br>அனர்த²ः | = | கெடுதலானது, |
| न<br>ந | = | கிடையாது. (ஏனென்றுல்), |
| ततः<br>ததः | = | அதிஞல் (ஸ்வரூபத்திலிருந்து நழுவுவதால்), |
| मोहः<br>மோஹः | = | மோஹம் (ஸ்வரூபத்தை மறந்துவிடுதல்) ஏற்படும், |
| ततः<br>ததः | = | அதிலிருந்து (ஸ்வரூபமறதியிஞல்), |
| अहंधी<br>அஹந்தீ⁴ | = | ('நான்' அல்லாத தேஹம் முதலான அஞத்மாக்களில்) 'நான்' என்ற எண்ணம் ஏற்படும். |
| ततः<br>ததः | = | அதிலிருந்து (அஞத்மாவில் ஆத்மபுத்தியிஞல்), |
| बन्धः<br>ப³ந்த⁴ः | = | ஸம்ஸாரபந்தம் ஏற்படும், |

| | | |
|---|---|---|
| **ततः** | = | அதினுல் (பந்தம் ஏற்படுவதினுல் அதன் |
| **ததঃ** | | கார்யமான), |
| **व्यथा** | = | துக்கம் ஏற்படும். |
| **வ்யதா²** | | **(323)** |

**विषयाभिमुखं दृष्ट्वा विद्वांसमपि विस्मृतिः ।**
**विक्षेपयति धीदोषैर्योषा जारमिव प्रियम् ॥ ३२४ ॥**

**விஷயாபி⁴முக²ம் த்³ருஷ்ட்வா வித்³வாம்ஸமபி விஸ்ம்ருதிঃ ।**
**விக்ஷேபயதி தீ⁴தோ³ஷைர்யோஷா ஜாரமிவ ப்ரியம் ॥ 324 ॥**

| | | |
|---|---|---|
| **विद्वांसं** | = | வித்வானுய் (விவேகமுள்ளவனுய்) |
| **வித்³வாம்ஸம்** | | |
| **अपि** | = | இருந்தும்கூட, |
| **அபி** | | |
| **विषय अभिमुखं** | = | வெளிவிஷயங்களில் நோக்கமுள்ளவனுயிருக்கிறு |
| **விஷய அபி⁴முக²ம்** | | னென்று, |
| **दृष्ट्वा** | = | தெரிந்து கொண்டு, |
| **த்³ருஷ்ட்வா** | | |
| **विस्मृतिः** | = | மறதியானது (அவனை), |
| **விஸ்ம்ருதிঃ** | | |
| **जारं** | = | ஜாரனுயும், |
| **ஜாரம்** | | |
| **प्रियं** | = | பிரியனுயும் இருக்கும் அன்ய புருஷனை, |
| **ப்ரியம்** | | |
| **योषा** | = | ஒரு ஸ்திரீ (எப்படிக் கலங்கச் செய்வாளோ), |
| **யோஷா** | | |
| **इव** | = | அதைப் போலவே, |
| **இவ** | | |
| **धीदोषैः** | = | புத்தியின் தோஷங்களைக் கொண்டு, |
| **தீ⁴தோ³ஷைঃ** | | |
| **विक्षेपयति** | = | பலவிதமாக ஆட்டிவைக்கும். |
| **விக்ஷேபயதி** | | |

**जारं** - **ஜாரம்** வேறு ஸ்திரீயினிடத்தில் ஆஸக்தியுள்ள **प्रियं** - **ப்ரியம்** பர்த்தாவை அந்த ஆஸக்தியினுல் ஏற்படக்கூடிய தோஷங்களை எடுத்துக் காட்டி எப்படி **योषा** - **யோஷா** பத்னியானவள் அந்த ஆஸக்தியிலிருந்து அவனைக் கலைத்து

விடுவாளோ அவ்விதம் - என்றும் பொருள் கொள்ளலாமென்பது ஸ்ரீமத் ஜகத்குரு ஆசார்யாரவர்களின் அபிப்பிராயம். **(324)**

(**அவதாரிகை**) முன் 151,152 சுலோகங்களில் சொன்ன பாசி திருஷ்டாந்தத்தை இவ்விஷயத்திலும் உதாஹரிக்கிறுர்: -

**यथाऽपकृष्टं शैवालं क्षणमात्रं न तिष्ठति ।**
**आवृणोति तथा माया प्राज्ञं वापि पराङ्मुखम् ॥ ३२५ ॥**

**யதா²(அ)பக்ருஷ்டம் ஶைவாலம் க்ஷணமாத்ரம் ந திஷ்ட²தி ।**
**ஆவ்ருணோதி ததா² மாயா ப்ராஜ்ஞம் வாபி பராங்முக²ம் ॥ 325 ॥**

**यथा** = எவ்விதம்,
**யதா²**
**अपकृष्टं** = ஒதுக்கப்பட்ட,
**அபக்ருஷ்டம்**
**शैवालं** = பாசியானது,
**ஶைவாலம்**
**क्षणमात्रं** = ஒரு க்ஷணம்கூட,
**க்ஷணமாத்ரம்**
**न तिष्ठति** = ஒதுங்கி நிற்பதில்லையோ (மறுபடியும்
**ந திஷ்ட²தி** பரவிக்கொண்டு மூடி விடுகிறதோ),
**तथा** = அவ்விதமே,
**ததா²**
**माया** = மாயையானது,
**மாயா**
**पराङ्मुखम्** = வெளிப்பார்வை யுள்ளவனை,
**பராங்முக²ம்**
**प्राज्ञं वा अपि** = அறிவாளியாக விருந்தாலும் கூட,
**ப்ராஜ்ஞம் வா அபி**
**आवृणोति** = மூடிக்கொள்கிறது. (ஆத்மஸ்வரூபம்
**ஆவ்ருணோதி** தெரியவொட்டாமல் மறைத்து விடுகிறது.) **(325)**

(**அவதாரிகை**) மறைப்பது மாத்திரமில்லை, மேலால் ஸம்ஸாரத்தில் இழுத்து விட்டு துக்கத்தை அனுபவிக்கும்படிச் செய்கிறது என்பதை படிக்கட்டில் மேல்படியில் நிற்கும்போது கைதவறி விழுந்த பந்து, தனக்கு விருப்பமில்லாவிட்டாலும் எப்படி ஒவ்வொரு படியாய் தட்டித் தட்டி கீழே அடித்தலத்துக்குப் போய் எடுக்கமுடியாமல் போய்விடுமோ அதைப்போல என்று திருஷ்டாந்தத்தினுல் விளக்குகிறுர்: -

**लक्ष्यच्युतं चेद्यदि चित्तमीषद् बहिर्मुखं सन्निपतेत्ततस्ततः ।**
**प्रमादतः प्रच्युतकेलिकन्दुकः सोपानपङ्क्तौ पतितो यथा तथा ॥ ३२६ ॥**

**லக்ஷ்யச்யுதம் சேத்³யதி³ சித்தமீஷத்³**
**ப³ஹிர்முக²ம் ஸன்னிபதேத்ததஸ்ததः ।**
**ப்ரமாத³தः ப்ரச்யுதகேலிகந்து³கः ஸோபானபங்க்தௌ**
**பதிதோ யதா² ததா² ॥ 326 ॥**

**प्रमादतः** = அஜாக்கிரதையினுல்,
**ப்ரமாத³தः**
**प्रच्युतकेलिकन्दुकः** = நழுவி விழுந்த விளையாட்டுப் பந்து,
**ப்ரச்யுதகேலிகந்து³கः**
**सोपानपङ्क्तौ** = படிக்கட்டு வரிசையில்,
**ஸோபானபங்க்தௌ**
**पतितः** = விழுந்தது,
**பதிதः**
**यथा** = எப்படியோ (படிப்படியாய் கீழேயே போய்விடுமோ),
**யதா²**
**तथा** = அப்படியே,
**ததா²**
**चित्तं** = மனஸானது,
**சித்தம்**
**ईषत्** = கொஞ்சமேனும்,
**ஈஷத்**
**लक्ष्यच्युतं चेत् यदि** = (பிரஹ்மமாகிற) குறி தவறிவிட்டதே யாஞல்,
**லக்ஷ்யச்யுதம் சேத் யதி³**
**बहिर्मुखं** = வெளியில் நோக்கமுள்ளதாக,
**ப³ஹிர்முக²ம்**
**सत्** = ஏற்பட்டு,
**ஸத்**
**ततः ततः** = ஒன்றிலிருந்து மற்றென்று, அதிலிருந்து
**ததः ததः** மற்றென்று என்று (படிப்படியாய்),
**निपतेत्** = (அஹங்காரம், புத்தி, மனஸ், பிராணன், தேஹம்,
**நிபதேத்** விஷயங்கள் இவைகளில்) இறங்கி விழுந்துவிடும்.

**(326)**

**(அவதாரிகை)** சித்தமானது கீழே இறங்கி விழும் கிரமத்தை எடுத்துக் காட்டுகிருர்: -

**विषयेष्वाविशच्चेतः सङ्कल्पयति तद्गुणान् ।**
**सम्यक्सङ्कल्पनात्कामः कामात्पुंसः प्रवर्तनम् ॥ ३२७ ॥**

**விஷயேஷ்வாவிஶச்சேதः ஸங்கல்பயதி தத்³கு³ணான் ।**
**ஸம்யக்ஸங்கல்பனாத்காமः காமாத்பும்ஸः ப்ரவர்தனம் ॥ 327 ॥**

**ततः स्वरूपविभ्रंशो विभ्रष्टस्तु पतत्यधः ।**
**पतितस्य विना नाशं पुनर्नारोह ईक्ष्यते ॥ ३२८ ॥**

**ததः ஸ்வரூபவிப்⁴ரம்ஶோ விப்⁴ரஷ்டஸ்து பதத்யத⁴ः ।**
**பதிதஸ்ய வினா நாஶம் புனர்னாரோஹ ஈக்ஷ்யதே ॥ 328 ॥**

**विषयेषु** **விஷயேஷு** = (சப்தம் ஸ்பர்சம் முதலான) விஷயங்களில்,

**आविशत्** **ஆவிஶத்** = ஆஸக்தியை வைக்கும்,

**चेतः** **சேதः** = மனஸானது,

**तद्गुणान्** **தத்³கு³ணான்** = அந்த விஷயங்களிலுள்ள குணங்களை,

**संङ्कल्पयति** **ஸம்ங்கல்பயதி** = நன்கு நினைத்துப் பார்க்கிறது.

**सम्यक् संकल्पनात्** **ஸம்யக் ஸங்கல்பனாத்** = வெகுவாக நன்கு நினைத்துப் பார்ப்பதினால்,

**कामः** **காமः** = ஆசை (ஏற்படுகிறது),

**कामात्** **காமாத்** = ஆசையிலிருந்து,

**पुंसः** **பும்ஸः** = புருஷனுக்கு,

**प्रवर्तनं** **ப்ரவர்தனம்** = (ஆசைக்கு விஷயமான பதார்த்தத்தை ஸம்பாதிப்பதற்காக) பிரவிருத்தி ஏற்படுகிறது.

**(327)**

**ततः** **ததः** = அதினால் (பிரவிருத்தியில் ஈடுபடுவதால்)

**स्वरूप विभ्रंशः** **ஸ்வரூப விப்⁴ரம்ஶः** = ஆத்ம ஸ்வரூபத்திலிருந்து நழுவுதல் (ஆத்மஸ்வரூபத்தை விட்டு அநாத்ம பதார்த்தங்களில் ஆத்மாவென்ற எண்ணம் ஏற்படுகிறது).

| | | |
|---|---|---|
| **विभ्रष्टः तु**<br>**விப்⁴ரஷ்ட: து** | = | அவ்விதம் நழுவி விட்டவனோ, |
| **अधः**<br>**அத⁴:** | = | கீழேயே (ஸம்ஸாரத்தில்), |
| **पतति**<br>**பததி** | = | விழுந்து விடுகிறான், |
| **पतितस्य**<br>**பதிதஸ்ய** | = | அவ்விதம் கீழே விழுந்தவனுக்கு, |
| **नाशं विना**<br>**நாஶம் வினா** | = | நாசத்தை (எப்பொழுதும் ஸம்ஸாரத்தில் உழன்றுகொண்டிருப்பதை) தவிர, |
| **पुनः**<br>**புன:** | = | மறுபடியும், |
| **आरोहः**<br>**ஆரோஹ:** | = | ஏறுவது (ஆத்ம ஸாக்ஷாத்காரம் கிடைப்பது), |
| **न ईक्ष्यते**<br>**ந ஈக்ஷ்யதே** | = | எதிர்பார்க்கமுடியாது. |

**संकल्पं वर्जयेत्तस्मात्सर्वानर्थस्य कारणम् ।**
**[1] अपथ्यानि हि वस्तूनि व्याधिग्रस्तो यथोत्सृजे ॥ ३२९ ॥**

**ஸங்கல்பம் வர்ஜயேத்தஸ்மாத்ஸர்வானர்த²ஸ்ய காரணம் ।**
**அபத்²யானி ஹி வஸ்தூனி வ்யாதி⁴க்³ரஸ்தோ யதோ²த்ஸ்ருஜே ॥ 329 ॥**

---

[1] இந்தப் பாதி சுலோகம் ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸ் பதிப்பில் காணப்படவில்லை.

---

| | | |
|---|---|---|
| **व्याधि ग्रस्तः**<br>**வ்யாதி⁴ க்³ரஸ்த:** | = | வியாதியினால் பீடிக்கப்பட்டிருப்பவன், |
| **यथा**<br>**யதா²** | = | எப்படி, |
| **अपथ्यानि**<br>**அபத்²யானி** | = | அபத்தியமான, |
| **वस्तूनि**<br>**வஸ்தூனி** | = | வஸ்துக்களை |
| **उत्सृजेत्**<br>**உத்ஸ்ருஜேத்** | = | விலக்கிவிடுவான், |
| **हि**<br>**ஹி** | = | என்பது பிரஸித்தமோ (அப்படியே), |

| | | |
|---|---|---|
| **तस्मात्** <br> **தஸ்மாத்** | = | ஆகையால் (முன் சொன்ன காரணங்களினுல்), |
| **सर्व अनर्थस्य** <br> **ஸர்வ அனர்த²ஸ்ய** | = | எல்லா அனர்த்தத்திற்கும், |
| **कारणं** <br> **காரணம்** | = | காரணமாயிருக்கிற, |
| **संकल्पं** <br> **ஸங்கல்பம்** | = | விஷயங்களைப் பற்றி நினைப்பதென்பதை, |
| **वर्जयेत्** <br> **வர்ஜயேத்** | = | விலக்கிவிட வேண்டும். **(329)** |

## अतः प्रमादान्न परोऽस्ति मृत्युर्विवेकिनो ब्रह्मविदः समाधौ ।
## समाहितः सिद्धिमुपैति सम्यक्समाहितात्मा भव सावधानः ॥ ३३० ॥

**அத: ப்ரமாதா³ன்ன பரோ(அ)ஸ்தி ம்ருத்யுர்விவேகினோ**
**ப்³ரஹ்மவித³: ஸமாதௌ⁴ ।**
**ஸமாஹித: ஸித்³தி⁴முபைதி ஸம்யக்ஸமாஹிதாத்மா**
**ப⁴வ ஸாவதா⁴ன: ॥ 330 ॥**

| | | |
|---|---|---|
| **अतः** <br> **அத:** | = | ஆகையினுல், |
| **विवेकिनः** <br> **விவேகின:** | = | விவேகமுள்ளவனுய், |
| **ब्रह्मविदः** <br> **ப்³ரஹ்மவித³:** | = | பிரஹ்மத்தை அறிந்தவராய் உள்ளவருக்கு, |
| **समाधौ** <br> **ஸமாதௌ⁴** | = | ஸமாதி விஷயத்தில் (பிரஹ்மத்தினிடத்திலேயே நிலைத்திருப்பதில்), |
| **प्रमादात्** <br> **ப்ரமாதா³த்** | = | நழுவுதல் ஏற்படுவதைக் காட்டிலும், |
| **परः** <br> **பர:** | = | வேறு, |
| **मृत्युः** <br> **ம்ருத்யு:** | = | மிருத்யு, |
| **न अस्ति** <br> **ந அஸ்தி** | = | கிடையாது, |
| **समाहितः** <br> **ஸமாஹித:** | = | ஸமாதியில் நிலைத்திருப்பவர், |

| | | |
|---|---|---|
| **सिद्धिं**<br>**ஸித்³தி⁴ம்** | = | ஸித்தியை (மோக்ஷத்தை), |
| **उपैति**<br>**உபைதி** | = | அடைவார். (ஆகையால் நீயும்), |
| **सम्यक्**<br>**ஸம்யக்** | = | உறுதியாக, |
| **समाहित आत्मा**<br>**ஸமாஹித ஆத்மா** | = | பிரஹ்மத்தில் நிலைத்த மனஸுள்ளவனாக, |
| **सावधानः**<br>**ஸாவதா⁴ன:** | = | வெகு ஜாக்கிரதையுடன் (நழுவுவதற்கிடமில்லாமல்), |
| **भव**<br>**ப⁴வ** | = | இருந்து வா. |

**(330)**

**जीवतो यस्य कैवल्यं विदेहे च स केवलः ।**
**यत्किञ्चित् पश्यतो भेदं भयं ब्रूते यजुः श्रुतिः ॥ ३३१ ॥**

**ஜீவதோ யஸ்ய கைவல்யம் விதே³ஹே ச ஸ கேவல: ।**
**யத்கிஞ்சித் பஶ்யதோ பே⁴த³ம் ப⁴யம் ப்³ரூதே யஜு: ஶ்ருதி: ॥ 331 ॥**

| | | |
|---|---|---|
| **यस्य**<br>**யஸ்ய** | = | எவருக்கு, |
| **जीवतः**<br>**ஜீவத:** | = | உயிருடனிருக்கும்போதே, |
| **कैवल्यं**<br>**கைவல்யம்** | = | (தேஹம் முதலான எல்லா உபாதிகளின் ஸம்பந்த மில்லாமல்) தனித்திருக்கும் தன்மை உள்ளதோ, |
| **सः**<br>**ஸ:** | = | அவர், |
| **विदेहे च**<br>**விதே³ஹே ச** | = | சரீரம் விலகின பிறகும், |
| **केवलः**<br>**கேவல:** | = | தனித்தவரே, |
| **यत्किञ्चित्**<br>**யத்கிஞ்சித்** | = | ஏதேனும் சிறிதளவு, |
| **भेदं**<br>**பே⁴த³ம்** | = | வேற்றுமையை, |
| **पश्यतः**<br>**பஶ்யத:** | = | பார்ப்பவனுக்கு, |

**भयं** = பயம் உண்டென்று,

**ப⁴யம்**

**यजुः श्रुतिः** = யஜுர்வேதம் (தைத்திரீய உபநிஷத்து),

**யஜு³: ஶ்ருதி:**

**ब्रूते** = சொல்கிறது.

**ப்³ரூதே** **(331)**

**(அவதாரிகை)** அந்த உபநிஷத் வாக்கியத்தின் தாத்பர்யத்தை எடுத்துச் சொல்கிறார்: -

**यदाकदा वापि विपश्चिदेष ब्रह्मण्यनन्तेऽप्यणुमात्र भेदम् ।**
**पश्यत्ययामुष्य भयं तदैव यद्वीक्षितं भिन्नतया प्रमादात् ॥ ३३२ ॥**

**யதா³கதா³ வாபி விபஶ்சிதே³ஷ**
**ப்³ரஹ்மண்யனந்தே(அ)ப்யணுமாத்ர பே⁴த³ம் ।**
**பஶ்யத்யயாமுஷ்ய ப⁴யம் ததை³வ**
**யத்³வீக்ஷிதம் பி⁴ன்னதயா ப்ரமாதா³த் ॥ 332 ॥**

**एषः** = இந்த,

**ஏஷ:**

**विपश्चित्** = வித்வான்,

**விபஶ்சித்**

**कदा वा अपि** = ஏதேனும் ஒரு ஸமயத்தில்,

**கதா³ வா அபி**

**अनन्ते** = எல்லை யற்றதாகிய,

**அனந்தே**

**ब्रह्मणि** = பிரஹ்மத்தினிடத்தில்,

**ப்³ரஹ்மணி**

**अणुमात्र भेदं अपि** = அணுமாத்திரம் வேற்றுமையையேனும்,

**அணுமாத்ர பே⁴த³ம் அபி**

**पश्यति यदा** = பார்க்கிறானுனால்,

**பஶ்யதி யதா³**

**अथ** = அப்பொழுது,

**அத²**

**प्रदादात्** = தவறுதலாக,

**ப்ரதா³தா³த்**

**भिन्नतया** = பிரஹ்மத்தை விட்டு வேறுபட்டதாக,

**பி⁴ன்னதயா**

| | | |
|---|---|---|
| **यत्** | = | எது, |
| **யத்** | | |
| **क्षितं** | = | பார்க்கப்பட்டதோ, |
| **க்ஷிதம்** | | |
| **तत् एव** | = | அதுவே, |
| **தத் ஏவ** | | |
| **अमुष्य** | = | அவனுக்கு, |
| **அமுஷ்ய** | | |
| **भयं** | = | பயம் (பயத்தை உண்டுபண்ணும்) |
| **ப⁴யம்** | | **(332)** |

## श्रुतिस्मृतिन्यायशतैर्निषिद्धे दृश्येऽत्र यः स्वात्ममतिं करोति । उपैति दुःखोपरि दुःखजातं निषिद्धकर्ता स मलिम्लुचो यथा ॥ ३३३ ॥

**ஶ்ருதிஸ்ம்ருதிந்யாயஶதைர்நிஷித்³தே⁴ த்³ருஶ்யே(அ)த்ர**
**யஃ ஸ்வாத்மமதிம் கரோதி ।**
**உபைதி து³꞉கோ²பரி து³꞉க²ஜாதம் நிஷித்³த⁴கர்தா**
**ஸ மலிம்லுசோ யதா² ॥ 333 ॥**

| | | |
|---|---|---|
| **श्रुति स्मृति न्याय शतैः** | = | நூற்றுக் கணக்கான வேத வாக்கியங்களாலும் |
| **ஶ்ருதி ஸ்ம்ருதி ந்யாய ஶதைஃ** | | ஸ்மிருதி வாக்கியங்களாலும் யுக்திகளாலும், |
| **निषिद्धे** | = | (ஆத்மாவல்ல, ஆத்மாவல்லவென்று) |
| **நிஷித்³தே⁴** | | மறுக்கப்பட்டிருக்கிற, |
| **अत्र** | = | இந்த, |
| அத்ர | | |
| **दृश्ये** | = | (தேஹம் முதலான) பார்க்கப்படும் பதார்த்தங்க |
| **த்³ருஶ்யே** | | ளில், |
| **यः** | = | எவன், |
| **யஃ** | | |
| **स्व आत्म मतिं** | = | தன் ஆத்மா வென்ற எண்ணத்தை, |
| **ஸ்வ ஆத்ம மதிம்** | | |
| **करोति** | = | கொள்ளுகிறுனே, |
| **கரோதி** | | |
| **सः** | = | அவன், |
| **ஸஃ** | | |
| **मलिम्लुचः** | = | திருடன், |
| **மலிம்லுசஃ** | | |

| | | |
|---|---|---|
| **यथा** | = | எப்படியோ (அப்படியே), |
| **யதா²** | | |
| **निषिद्धकर्ता** | = | தடுக்கப்பட்டிருப்பதை செய்கிறவனுதலால், |
| **நிஷித்³த⁴கர்தா** | | |
| **दुःख उपरि** | = | துக்கத்திற்கு மேல், |
| **து³ːக² உபரி** | | |
| **दुःखजातं** | = | துக்கக் கூட்டத்தை, |
| **து³ːக²ஜாதம்** | | |
| **उपैति** | = | அடைவான். |
| **உபைதி** | | **(333)** |

'திருடன் போல' என்று சொன்னதற்கு சாந்தோக்ய உபநிஷத்தில் உள்ள பிரமாண வாக்கியத்தின் தாத்பர்யத்தை ஆதாரமாக உதாஹரிக்கிறார் -'பழுக்கப் பழுக்க இரும்பைக் காய்ச்சி கையால் பிடிக்கும்படிக் கொடுத்தால் 'நான் திருடன் இல்லை' என்று ஸத்யமாய் சொல்பவனை சுடாது, பொய்யாக சொன்னுல் சுட்டுவிடும்.'

**सत्याभिसंधानरतो विमुक्तो महत्वमात्मीयमुपैति नित्यम् ।**
**मिथ्याभिसंधानरतस्तु नश्येद्दृष्टं तदेतद्यदचोरचोरयोः ॥ ३३४ ॥**

**ஸத்யாபி⁴ஸந்தா⁴னரதோ விமுக்தோ**
**மஹத்வமாத்மீயமுபைதி நித்யம் ।**
**மித்²யாபி⁴ஸந்தா⁴னரதஸ்து நஶ்யேத்³ருஷ்டம்**
**ததே³தத்³யத³சோரசோரயோː ॥ 334 ॥**

| | | |
|---|---|---|
| **सत्य अभिसंधान रतः** | = | ஸத்யத்திலேயே பிடிமானம் உள்ளவன், |
| **ஸத்ய அபி⁴ஸந்தா⁴ன ரதː** | | |
| **विमुक्तः** | = | (தீயினுல் சுடப்படாமல் குற்றவாளியல்லவென்று,) |
| **விமுக்தː** | | விடுபட்டவன், |
| **आत्मीयं** | = | தனக்கு ஸ்வபாவமான, |
| **ஆத்மீயம்** | | |
| **महत्वं** | = | பெருமையை, |
| **மஹத்வம்** | | |
| **नित्यं** | = | எப்பொழுதும், |
| **நித்யம்** | | |
| **उपैति** | = | அடைவான், |
| **உபைதி** | | |
| **मिथ्या अभिसंधान रतः तु** | = | பொய்யில் பிடிமானம் உள்ளவனே, |
| **மித்²யா அபி⁴ஸந்தா⁴ன ரதː து** | | |

| | | |
|---|---|---|
| **नश्येत्** | = | (தீயினுல் சுடப்பட்டவனுக குற்றவாளியென்று |
| **நஶ்யேத்** | | அகப்பட்டுக் கொண்டு) நாசத்தை அடைவான், |
| **अचोर चोरयो:** | = | திருடனல்லாதவன் விஷயத்திலும் திருடன் |
| **அசோர சோரயோः** | | விஷயத்திலும், |
| **यत्** | = | எந்த நியாயமிருக்கிறதோ, |
| **யத்** | | |
| **तत् एतत्** | = | அதே இந்த நியாயம், |
| **தத் ஏதத்** | | |
| **दृष्टं** | = | நன்கு தெரிந்ததே. |
| **த்³ருஷ்டம்** | | **(334)** |

(**அவதாரிகை**) ஆகையால் ஆத்மாவல்லாததில் உள்ள பிடிமானத்தை நன்கு விலக்கிவிட்டு வாஸ்தவமாயுள்ள ஆத்மதத்வத்திலேயே நிஜலத்திருக்க வேண்டுமென்று வற்புறுத்துகிருர்: -

**यतिरसदनुसंधि बन्धहेतुं विहाय स्वयमय महमस्मीत्यात्मदृष्टयैव तिष्ठेत् ।**
**सुखयति ननु निष्ठा ब्रह्मणि स्वानुभूत्या हरति परमविद्याकार्यदुःखं प्रतीतम् ॥ ३३५ ॥**

**யதிரஸத³னுஸந்தி⁴ ப³ந்த⁴ஹேதும் விஹாய ஸ்வயமய**
**மஹமஸ்மீத்யாத்மத்³ருஷ்டயைவ திஷ்டே²த் ।**
**ஸுக²யதி நனு நிஷ்டா² ப்³ரஹ்மணி ஸ்வானுபூ⁴த்யா**
**ஹரதி பரமவித்³யாகார்யது³ःக²ம் ப்ரதீதம் ॥ 335 ॥**

| | | |
|---|---|---|
| **यति:** | = | ஸன்னியாஸியாயிருப்பவர், |
| **யதி**ः | | |
| **बन्ध हेतुं** | = | ஸம்ஸார பந்தத்திற்கு காரணமாயிருக்கும், |
| **ப³ந்த⁴ ஹேதும்** | | |
| **असद् अनुसंधि** | = | (ஆத்மா வல்லாத தேஹாதிகளாகிற) அஸத் |
| **அஸத்³ அனுஸந்தி⁴** | | பதார்த்தங்களில் பிடிமானத்தை (நான் என்கிற எண்ணத்தை), |
| **विहाय** | = | விட்டு விட்டு, |
| **விஹாய** | | |
| **स्वयं** | = | தான், |
| **ஸ்வயம்** | | |
| **अयं** | = | இதாக, |
| **அயம்** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |

| | | |
|---|---|---|
| **अस्मि** | = | இருக்கிறேன், |
| **அஸ்மி** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **आत्म दृष्टया एव** | = | ஆத்மாவை பார்ப்பதிலேயே, |
| **ஆத்ம த்³ருஷ்டயா ஏவ** | | |
| **तिष्ठेत्** | = | நிலைத்து நிற்கவேண்டும், |
| **திஷ்டே²த்** | | |
| **ब्रह्मणि** | = | பிரஹ்மத்தினிடத்தில், |
| **ப்³ரஹ்மணி** | | |
| **स्व अनुभूत्या** | = | "தான்" என்ற அனுபவத்துடன், |
| **ஸ்வ அனுபூ⁴த்யா** | | |
| **निष्ठा** | = | நிலைத்திருப்பது, |
| **நிஷ்டா²** | | |
| **सुखयति** | = | ஆனந்தத்தைக் கொடுக்கும், |
| **ஸுக²யதி** | | |
| **ननु** | = | ஸந்தேஹமன்னியில். (மேலும்), |
| **நனு** | | |
| **अविद्या कार्य दुःखं** | = | அவித்யையினால் ஏற்பட்டிருக்கும் துக்கம் அல்லது |
| **அவித்³யா கார்ய து³꞉க²ம்** | | அவித்யை, அதன் காரியங்கள் இவைகளால் ஏற்பட்டிருக்கும் துக்கம், |
| **प्रतीतं** | = | தோன்றிக் கொண்டிருப்பதை, |
| **ப்ரதீதம்** | | |
| **परं** | = | நன்றாக, |
| **பரம்** | | |
| **हरति** | = | விலக்கிவிடும். |
| **ஹரதி** | | **(335)** |

**बाह्याभिसंधिः परिवर्धयेत्फलं दुर्वासनामेव ततस्ततोऽधिकाम् ।**
**ज्ञात्वा विवेकैः परिहृत्य बाह्यं स्वात्मानुसंधिं विदधीत नित्यम् ॥ ३३६ ॥**

**பா³ஹ்யாபி⁴ஸந்தி⁴꞉ பரிவர்த⁴யேத்ப²லம் து³ர்வாஸநாமேவ**
**ததஸ்ததோ(அ)தி⁴காம் ।**
**ஜ்ஞாத்வா விவேகை꞉ பரிஹ்ருத்ய பா³ஹ்யம்**
**ஸ்வாத்மானுஸந்தி⁴ம் வித³தீ⁴த நித்யம் ॥ 336 ॥**

| | | |
|---|---|---|
| बाह्याभिसंधिः<br>பா³ஹ்யாபி⁴ஸந்தி⁴: | = | வெளி விஷயங்களில் பற்றுவைப்பது, |
| फलं<br>ப²லம் | = | அதன் பலனாகிய, |
| दुर्वासनां एव<br>து³ர்வாஸனாம் ஏவ | = | (பிறவிக்குக் காரணமான) கெட்ட வாஸனையையே, |
| ततः ततः<br>தத: தத: | = | அதைவிட, அதைவிட, |
| अधिकां<br>அதி⁴காம் | = | மேலுக்கு மேலாக, |
| परिवर्धयेत्<br>பரிவர்த⁴யேத் | = | நன்கு வளரச் செய்யும். (ஆகையால் அதற்கு இடம் கொடுக்காமல்) |
| ज्ञात्वा<br>ஜ்ஞாத்வா | = | (வாஸனை வளருமென்பதை) அறிந்து கொண்டு, |
| विवेकैः<br>விவேகை: | = | திரும்பத் திரும்ப விவேசனம் செய்வதினால், |
| बाह्यं<br>பா³ஹ்யம் | = | வெளிப் பதார்த்தங்களை (எண்ணிக் கொண்டிருப்பதை), |
| परिहृत्य<br>பரிஹ்ருத்ய | = | தள்ளிவிட்டு, |
| नित्यं<br>நித்யம் | = | எப்பொழுதும், |
| स्व आत्म अनुसंधिं<br>ஸ்வ ஆத்ம அனுஸந்தி⁴ம் | = | தன்னுடைய ஆத்ம தத்வத்தின் அனுஸந்தானத்தை, |
| विदधीत<br>வித³தீ⁴த | = | செய்ய வேண்டும். (336) |

**बाह्ये निरुद्धे मनसः प्रसन्नता मनःप्रसादे परमात्मदर्शनम् ।**
**तस्मिन्सुदृष्टे भवबन्धनाशो बहिर्निरोधः पदवी विमुक्तेः ॥ ३३७ ॥**

**பா³ஹ்யே நிருத்³தே⁴ மனஸ: ப்ரஸன்னதா**
**மன:ப்ரஸாதே³ பரமாத்மத³ர்ஶனம் ।**
**தஸ்மின்ஸுத்³ருஷ்டே ப⁴வப³ந்த⁴நாஶோ**
**ப³ஹிர்நிரோத⁴: பத³வீ விமுக்தே: ॥ 337 ॥**

| | | |
|---|---|---|
| बाह्ये<br>பா³ஹ்யே | = | வெளி வியாபாரங்கள், |

निरुद्धे = தடுக்கப்பட்டு விட்டால்,
நிருத்³தே⁴
मनसः = மனஸிற்கு,
மனஸ:
प्रसन्नता = தெளிவு (ஏற்படும்),
ப்ரஸன்னதா
मनःप्रसादे = மனஸ் தெளிவடைந்தால்,
மன:ப்ரஸாதே³
परमात्मदर्शनं = பரமாத்மாவின் தர்சனம் (ஏற்படும்),
பரமாத்மத³ர்ஶனம்
तस्मिन् = பரமாத்மா,
தஸ்மின்
सुदृष्टे = நன்கு பார்க்கப்பட்டால்,
ஸுத்³ருஷ்டே
भव बन्ध नाशः = ஸம்ஸார பந்தத்திற்கு நாசம் (ஏற்படும்),
ப⁴வ ப³ந்த⁴ நாஶ: (ஆகையால் இவ்விதமாக),
बहिः र्निरोधः = வெளி வியாபாரங்களை தடுப்பதே,
ப³ஹிர்நிரோத⁴:
विमुक्तेः = (ஸம்ஸாரபந்தத்திலிருந்து) விடுதலையடைவதற்கு,
விமுக்தே:
पदवी = வழி.
பத³வீ

உலக வியவஹாரங்களில் அதிகமாக ஈடுபட்டவனுக்குக்கூட தூங்கிவிழித்ததும் மனம் தெளிந்து இருக்கும். ஏனெனில் தூக்கத்தில் வெளிப் பதார்த்தங்களின் எண்ணமில்லை. அதனால் தான் தூக்கத்திற்கு '**ஸம்ப்ரஸாதம்**' என்று பெயர். நம் முயற்சியில்லாமலேயே தூக்கத்தில் தானாகவே வெளிப் பொருள்களின் எண்ணம் நீங்கியபொழுது மனம் ப்ரஸன்ன மாக இருக்குமானால் மிகுந்த முயற்சியுடன் வெளி எண்ணங்களை அடியோடு விலக்கியபொழுது மனம் ப்ரஸன்னமாக இருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? மனம் பிரஸன்னமாக ஆனால்தான். ஐகாக்ர்யம் (ஒன்றிலேயே நிலைத்திருக்கும் தன்மை) ஏற்பட்டு ஆத்மதர்சனம் பெறத் தகுதியுள்ள தாக ஆகும். **(337)**

**कः पण्डितः सन्सदसद्विवेकी श्रुतिप्रमाणः परमार्थदर्शी ।**
**जानन्हि कुर्यादसतोऽवलम्बं स्वपातहेतोः शिशुवन्मुमुक्षुः ॥ ३३८ ॥**

**க: பண்டி³த: ஸன்ஸத³ஸத்³விவேகீ ஶ்ருதிப்ரமாண:**
**பரமார்த²த³ர்ஶீ ।**
**ஜானன்ஹி குர்யாத³ஸதோ(அ)வலம்ப³ம் ஸ்வபாதஹேதோ ।**
**ஶிஶுவன்முமுக்ஷு: ॥ 338 ॥**

**श्रुति प्रमाणः** = வேகத்தை பிரமாணமாகக் கொண்டவனும்,
**ஶ்ருதி ப்ரமாணঃ**
**परमार्थ दर्शी** = மேலான புருஷார்த்தம் (மோக்ஷம் என்று)
**பரமார்த² த³ர்ஶீ** அறிந்தவனாய்,
**सत् असत् विवेकी** = எது எப்பொழுதும் இருக்கிற ஸத் பதார்த்தம்,
**ஸத் அஸத் விவேகீ** எது ஸ்த் அல்லாதது என்ற பகுத்தறிவு உடையவனாய்,
**मुमुक्षुः** = (ஸம்ஸார பந்தத்திலிருந்து) விடுதலையடைய
**முமுக்ஷுঃ** ஆவல் உள்ளவனாய்,
**पण्डितः** = (பிரஹ்மமே ஸத்யம், ஜகத் மித்யை, என்று)
**பண்டி³தঃ** அறிவுள்ளவனாய்,
**सन्** = இருந்து கொண்டு,
**ஸன்**
**जानन्** = (ஸத் அல்லாததை ஆசிரயித்தால் கெடுதல்
**ஜானன்** என்பதை) அறிந்திருக்கும்,
**कः** = எவன்,
**கঃ**
**शिशुवत्** = (ஒன்றும் தெரியாத) சிறு குழந்தையைப் போல்,
**ஶிஶுவத்**
**स्वपातहेतोः** = தான் கீழே விழுவதற்கு காரணமாயிருக்கும்,
**ஸ்வபாதஹேதோ**
**असतः** = ஸ்த் அல்லாததின்,
**அஸதঃ**
**अवलम्बं** = அவலம்பத்தை (பிடித்துக் கொள்வதை),
**அவலம்ப³ம்**
**कुर्यात्** = செய்வான்?
**குர்யாத்**

சிறு குழந்தை அறியாமையால் மேலேயிருந்து கீழே விழுந்துவிடும் தனக்குத் துன்பம் ஏற்படுமென்பதை அறியாமல் கையால் பாம்பைப் பிடிக்கும். நெருப்பைக் கையால் தொடும். இதுபோல் அறிவாளியாயிருந்த போதிலும் ஆத்மாவல்லாததை ஆத்மாவென எண்ணி அதற்காக தன்னை ஸம்ஸாரத்தில் உழலும்படிச் செய்யும் காரியங்களைச் செய்வானேயானால் அவன் சிறு குழந்தைதான். **(338)**

**(அவதாரிகை)** முமுக்ஷுவுக்கு தேஹாதி அஸத் வஸ்துக்களின் பிடிமானம் கூடாது சொன்னதுடன் அப்பிடிமானம் இருக்கும் வரை முக்தி ஏற்படாதென்றும் முக்தியேற்பட்டால் அப்பிடிமானம் இருக்காது என்றும் சொல்லி, முக்திதசை எப்படியிருக்குமென்று வர்ணிக்கிறார்: -

**देहादिसंसक्तिमतो न मुक्तिःमुक्तस्य देहाद्यभिमत्यभावः ।**
**सुप्तस्य नो जागरणं न जाग्रतःस्वप्नस्तयोर्भिन्नगुणाश्रयत्वात् ॥ ३३९ ॥**

**தே³ஹாதி³ஸம்ஸக்திமதோ ந முக்தி:**
**முக்தஸ்ய தே³ஹாத்³யபி⁴மத்யபா⁴வ: ।**
**ஸுப்தஸ்ய நோ ஜாக³ரணம் ந ஜாக்³ரத:**
**ஸ்வப்னஸ்தயோர்பி⁴ன்னகு³ணாஶ்ரயத்வாத் ॥ 339 ॥**

**सुप्तस्य** = தூங்கிக்கொண்டிருப்பவனுக்கு,
**ஸுப்தஸ்ய**
**जागरणं** = விழிப்பு,
**ஜாக³ரணம்**
**नो** = இருக்காது,
**நோ**
**जाग्रतः** = விழித்துக்கொண்டிருப்பவனுக்கு,
**ஜாக்³ரத:**
**स्वप्नः** = தூக்கம்,
**ஸ்வப்ன:**
**न** = இருக்காது,
**ந**
**तयोः** = (விழிப்பு, தூக்கம் ஆகிய) இரண்டும்,
**தயோ:**
**भिन्न गुण आश्रयत्वात्** = மாறுபட்ட ஸ்வபாவங்களுக்கு ஆசிரயமாயிருப்
**பி⁴ன்ன கு³ண ஆஶ்ரயத்வாத்** பதால். (அதேவிதமாக)
**देहादि संसक्तिमतः** = தேஹம் முதலானதில் அபிமானமுள்ளவனுக்கு,
**தே³ஹாதி³ ஸம்ஸக்திமத:**
**मुक्तिः** = முக்தி,
**முக்தி:**
**न** = கிடையாது,
**ந**
**मुक्तस्य** = முக்தனுக்கு,
**முக்தஸ்ய**
**देहादि अभिमति अभावः** = தேஹம் முதலானதில் அபிமானம் இராது.
**தே³ஹாதி³ அபி⁴மதி அபா⁴வ:** (339)

**अन्तर्बहिः स्वं स्थिरजङ्गमेषु ज्ञानात्मनाधारतया विलोक्य ।**
**त्यक्ताखिलोपाधिरखण्डरूपः पूर्णात्मना यः स्थित एष मुक्तः ॥ ३४० ॥**

**அந்தர்ப³ஹிः ஸ்வம் ஸ்தி²ரஜங்க³மேஷு ஜ்ஞாநாத்மநாதா⁴ரதயா விலோக்ய ।**
**த்யக்தாகி²லோபாதி⁴ரக²ண்ட³ரூபः பூர்ணாத்மநா யः ஸ்தி²த ஏஷ முக்தः ॥ 340 ॥**

| | | |
|---|---|---|
| **स्थिर जङ्गमेषु**<br>**ஸ்தி²ர ஜங்க³மேஷு** | = | அசையாப் பொருள் அசையும் பொருள் எல்லாவற்றிலும், |
| **अन्तः**<br>**அந்தः** | = | உள்ளேயும், |
| **बहिः**<br>**ப³ஹிः** | = | வெளியிலும், |
| **स्वं**<br>**ஸ்வம்** | = | தன்னையே, |
| **ज्ञान आत्मना**<br>**ஜ்ஞான ஆத்மனா** | = | ஞான ஸ்வரூபத்துடன், |
| **आधारतया**<br>**ஆதா⁴ரதயா** | = | ஆதாரமாயிருப்பதாக, |
| **विलोक्य**<br>**விலோக்ய** | = | பார்த்துக் கொண்டு, |
| **त्यक्त अखिल उपाधिः**<br>**த்யக்த அகி²ல உபாதி⁴ः** | = | எல்லா உபாதிகளையும் (நான் அல்லவென்று) விலக்கிவிட்டவராய், |
| **अखण्डरूपः**<br>**அக²ண்ட³ரூபः** | = | எவ்விதத்திலும் துண்டுபடாத ஸ்வரூபமுள்ளவராய், |
| **यः**<br>**யः** | = | எவர், |
| **पूर्ण आत्मना**<br>**பூர்ண ஆத்மனா** | = | எங்கும் நிறைந்த ஆத்மஸ்வரூபமாகவே |
| **स्थित**<br>**ஸ்தி²த** | = | இருக்கிறாரோ, |
| **एष**<br>**ஏஷ** | = | இவர், |
| **मुक्तः**<br>**முக்தः** | = | முக்தர் ஆவார். |

**(340)**

**(அவதாரிகை)** தன்னைவிட வேறு பதார்த்தம் கிடையாது, வேறாகத்தோன்றுவதெல்லாம் வாஸ்தவத்தில் தன்னைத் தவிர வேறில்லை, என்று எல்லாவற்றையும் தானாகவே அனுபவிக்கும் நிலையேற்பட்டால்தான் முக்தி என்பதை தெளிவுபடுத்துகிறார்.

**सर्वात्मना बन्धविमुक्तिहेतुः सर्वात्मभावान्न परोऽस्ति कश्चित् ।**
**दृश्याग्रहे सत्युपपद्यतेऽसौ सर्वात्मभावोऽस्य सदात्मनिष्ठया ॥ ३४१ ॥**

**ஸர்வாத்மனா ப³ந்த⁴விமுக்திஹேது: ஸர்வாத்மபா⁴வான்ன**
**பரோ(அ)ஸ்தி கஶ்சித் ।**
**த்³ருஶ்யாக்³ரஹே ஸத்யுபபத்³யதே(அ)ஸௌ**
**ஸர்வாத்மபா⁴வோ(அ)ஸ்ய ஸதா³த்மநிஷ்டா²யா ॥ 341 ॥**

| | | |
|---|---|---|
| **बन्ध विमुक्ति हेतुः** / **ப³ந்த⁴ விமுக்தி ஹேது:** | = | ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலை யடைவதற்கு காரணமாயிருப்பது, |
| **सर्वात्मभावात्** / **ஸர்வாத்மபா⁴வாத்** | = | எல்லாம் தானே (ஆத்மாவே) என்கிற நிலையைத் தவிர, |
| **परः** / **பர:** | = | வேறு, |
| **कश्चित्** / **கஶ்சித்** | = | எதுவும், |
| **सर्वात्मना** / **ஸர்வாத்மனா** | = | எவ்வித முறையிலும், |
| **न अस्ति** / **ந அஸ்தி** | = | கிடையாது, |
| **अस्य** / **அஸ்ய** | = | இந்த ஜீவனுக்கு, |
| **असौ** / **அஸௌ** | = | அந்த, |
| **सर्वात्मभावः** / **ஸர்வாத்மபா⁴வ:** | = | எல்லாமாக இருக்கும் நிலை, |
| **सदा** / **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **आत्मनिष्ठया** / **ஆத்மநிஷ்டா²யா** | = | ஆத்ம ஸ்வரூபத்திலேயே நிலைத்திருப்பதினால், |
| **दृश्य अग्रहे** / **த்³ருஶ்ய அக்³ரஹே** | = | (இரண்டாவதான பார்க்கப்படுவதெல்லாம் தோன்றாமல், |
| **सति** / **ஸதி** | = | இருக்கும்போது, |
| **उपपद्यते** / **உபபத்³யதே** | = | ஏற்படும். |

**(341)**

விஷயங்களை தன்னைக் காட்டிலும் வேறாக பார்ப்பவனுக்குத் அவை பந்தத்தைக் கொடுக்கும். தானே தனக்கு பந்தத்தைக் கொடுக்கமுடியாது. நெருப்பு தன்னைப் பொசுக்குவதில்லை. நடனத்தில் நன்கு கற்றுத் தேர்ந்த போதிலும் தன் தோளில் தான் ஏறமுடியாது. ஆனால் விஷயம் முதல் எல்லாவற்றையும் தனது ஆத்மஸ்வரூபமாகப் பார்க்கும் ஞானிக்கு விஷயம் வேறாகத் தோன்றாததால் அவனுக்கு பந்தத்தைக் கொடுக்க முடியாது. **(341)**

(**அவதாரிகை**) ஆத்ம நிஷ்டையில் இருந்தாலொழிய இரண்டாவது பதார்த்தம் தோன்றாமலிராது, ஆகையால் ஸமாதி மூலமாய் பிரயத்தினம் செய்து அந்த நிஷ்டையை ஸம்பாதித்து ஆகவேண்டுமென்கிறார்: -

**दृश्यस्याग्रहणं कथं नु घटते देहात्मनातिष्ठतो**
**बाह्यार्थानुभवप्रसक्तमनसस्त त्तत्क्रियां कुर्वतः ।**
**संन्यस्ता खिलधर्म कर्म विषयैर्नित्यात्मनिष्ठापरैः**
**तत्त्वज्ञैः करणीयमात्मनि सदानन्देच्छुभिर्यत्नतः ॥ ३४२ ॥**

**த்³ருஶ்யஸ்யாக்³ரஹணம் கத²ம் நு க⁴டதே தே³ஹாத்மனாதிஷ்ட²தோ**
**பா³ஹ்யார்தா²னுப⁴வப்ரஸக்தமனஸஸ்த த்தத்க்ரியாம் குர்வத: ।**
**ஸம்ந்யஸ்தா கி²லத⁴ர்ம கர்ம விஷயைர்நித்யாத்மநிஷ்டா²பரை:**
**தத்த்வஜ்ஞை: கரணீயமாத்மனி ஸதா³னந்தே³ச்சு²பி⁴ர்யத்னத: ॥ 342 ॥**

| | | |
|---|---|---|
| **देह आत्मना** **தே³ஹ ஆத்மனா** | = | தேஹமே ஆத்மாவென்று, |
| **तिष्ठतः** **திஷ்ட²த:** | = | இருந்து கொண்டு, |
| **बाह्य अर्थ अनुभव प्रसक्त मनसः** **பா³ஹ்ய அர்த² அனுப⁴வ ப்ரஸக்த மனஸ:** | = | வெளியிலுள்ள விஷயங்களை அனுபவிப்பதில் ஈடுபட்ட மனஸுள்ளவனாய், |
| **तत् तत् कियां** **தத் தத் கியாம்** | = | அததற்குரிய கார்யங்களை, |
| **कुर्वतः** **குர்வத:** | = | செய்து கொண்டிருப்பவனுக்கு, |
| **दृश्यस्य** **த்³ருஶ்யஸ்ய** | = | பார்க்கப்படும் பதார்த்தத்தினுடைய, |
| **अग्रहणं** **அக்³ரஹணம்** | = | தோன்றாதிருத்தல், |
| **कथं नु** **கத²ம் நு** | = | எப்படித்தான், |

घटते = ஏற்படமுடியும்? (ஆகையால்),

க⁴டதே

तत्त्वज्ञैः = தத்வம் அறிந்தவர்களாய்,

தத்த்வஜ்ஞை:

सदा = எப்பொழுதும்,

ஸதா³

आनन्द इच्छुभिः = ஆனந்தத்தை விரும்புகிறவர்களாயிருப்பவர்களால்,

ஆனந்த³ இச்சு²பி⁴:

संन्यस्त अखिल धर्म कर्म विषयैः = எல்லா வைதிக தர்மானுஷ்டானங்களேயும்

ஸம்ந்யஸ்த அகி²ல த⁴ர்ம கர்ம விஷயை: வெளிக் கார்யங்களேயும் (சப்தம் ஸ்பர்சம் முதலான) விஷயங்களேயும் நன்கு விட்டு விட்டவர்களாக இருந்து கொண்டு,

नित्य आत्म निष्ठा परैः = எப்பொழுதும் ஆத்ம நிஷ்டையில் ஈடுபட்டவர்களாக,

நித்ய ஆத்ம நிஷ்டா² பரை:

यत्नतः = மிகவும் பிரயாஸை எடுத்துக்கொண்டு,

யத்னத:

आत्मनि = தன்னிடத்தில் (வெளி பதார்த்தங்களின் தோற்றம் ஏற்படாமல்),

ஆத்மனி

करणीयं = செய்துகொள்ள வேண்டியது அவசியம்.

கரணீயம் (342)

## 32. நிர்விகல்ப ஸ்மாதி

**(அவதாரிகை)** இந்த ஆத்ம நிஷ்டைதான் ஸமாதி என்பது. அதுதான் ஸர்வாத்ம பாவநிலேக்கு ஸாதனம். அந்த ஸமாதியும் இரண்டுவிதம். ஒன்றில் அறிகிற நான், அறியப்படும் பிரஹ்மம், இரண்டையும் ஒன்ருக அறியும் அறிவு, ஆகிய மூன்று அம்சங்களும் இருக்கும். அப்பொழுது அதை “ஸவிகல்பக ஸமாதி" என்பார்கள். இந்த வேற்றுமையும் அற்று பிரஹ்மாகாரமாக மாத்திரம் விருத்தியிருக்கும்போது “நிர்விகல்பக ஸமாதி” என்பார்கள். மண்ணுல் செய்யப்பட்டிருக்கும் யானே உருவத்தைப் பார்க்கும்பொழுது இது மண்தான் என்று தெரிந்தபோதிலும் யானே உருவமும் தோன்றிக் கொண்டுதானிருக்கும். இதுபோல ஸவிகல்ப ஸமாதியில் எல்லாம் ஸத்ரூபமாகத் தோன்றியபோதிலும் த்ரிபுடியும் தோன்றிக் கொண்டுதானிருக்கும். ஆனுல் தண்ணீரில் உப்பைக் கரைத்துவிட்டால் அங்கு தண்ணீர் தான் தெரியுமே தவிற தனியாக உப்பு தோன்ருது. அது போல நிர்விகல்ப ஸமாதியில் ஸத்ரூபம்தான் தெரியுமே தவிற த்ரிபுடி தோன்ருது. இவ்விரண்டில் அந்த நிர்விகல்பக ஸமாதிதான் அஹங்காரத்தை பூராவும் நாசம் செய்யும். இந்த நிர்விகல்ப ஸமாதியின் அவசியத்தைப் பற்றி 343 முதல் 368 முடிய விஸ்தாரமாக எடுத்துச் சொல்கிருர்: -

**सार्वात्म्यसिद्धये भिक्षोः कृतश्रवणकर्मणः I**
**समाधिं विदधात्येषा शान्तो दान्त इतिः श्रुतिः ॥ ३४३ ॥**

**ஸார்வாத்ம்யஸித்³த⁴யே பி⁴க்ஷோः க்ருதஶ்ரவணகர்மணः**
**ஸமாதி⁴ம் வித³தா⁴த்யேஷா ஶாந்தோ தா³ந்த இதிः ஶ்ருதிः ॥ 343 ॥**

**कृत श्रवण कर्मणः** = (குருமுகமாய் வேதாந்த வாக்கியத்தை)
**க்ருத ஶ்ரவண கர்மணः** கேட்டறிவதாகிய கார்யத்தை செய்தவராகிய
**भिक्षोः** = ஸன்னியாஸிக்கு,
**பி⁴க்ஷோः**
**सार्वात्म्य सिद्धये** = ஸர்வாத்ம பாவம் ஸித்திப்பதற்காக,
**ஸார்வாத்ம்ய ஸித்³த⁴யே**
**'शान्तो दान्त उपरतः तितिश्रुः समाहित'**
**'ஶாந்தோ தா³ந்த உபரதः திதிஶ்ருः ஸமாஹித'**
**इतिः** = என்ற,
**இதிः**
**एषा** = இந்த,
**ஏஷா**
**श्रुतिः** = (பிருஹதாரண்யக) உபநிஷத்தானது,
**ஶ்ருதிः**
**समाधिं** = ஸமாதியை,
**ஸமாதி⁴ம்**
**विदधाति** = விதிக்கிறது.
**வித³தா⁴தி** (343)

**आरूढशक्तेरहमो विनाशः कर्तुं न शक्यः सहसापि पण्डितैः**
**ये निर्विकल्पाख्यसमाधिनिश्चलाः तानन्तराऽनन्तभवा हि वासनाः ॥ ३४४ ॥**

**ஆரூட⁴ஶக்தேரஹமோ விநாஶः கர்தும் ந**
**ஶக்யः ஸஹஸாபி பண்டி³தைः**
**யே நிர்விகல்பாக்²யஸமாதி⁴நிஶ்சலாः**
**தானந்தரா(அ)னந்தப⁴வா ஹி வாஸனाः ॥ 344 ॥**

**ये** = எவர்கள்,
**யே**
**निर्विकल्प आख्य समाधि निश्चलाः** = நிர்விகல்பம் என்று பெயருள்ள ஸமாதி
**நிர்விகல்ப ஆக்²ய ஸமாதி⁴ நிஶ்சலாः** யில் அசைவற்றிருக்கிறுர்களோ,

| | | |
|---|---|---|
| तान्<br>தான் | = | அவர்களை, |
| अन्तरा<br>அந்தரா | = | தவிர, |
| पण्डितैः<br>பண்டி³தை: | = | (வேதாந்தம் கேட்டறிந்த) பண்டிதர்களால், |
| अपि<br>அபி | = | கூட, |
| आरूढ शक्तेः<br>ஆரூட⁴ ஶக்தே: | = | நன்கு வலுத்த சக்தியுடைய, |
| अहमः<br>அஹம: | = | அஹங்காரத்தை, |
| विनाशः<br>விநாஶ: | = | நாசம், |
| कर्तुं<br>கர்தும் | = | செய்வதற்கு, |
| सहसा<br>ஸஹஸா | = | திடீரென, |
| न शक्यः<br>ந ஶக்ய: | = | ஸாத்யப்படாது, |
| वासनाः<br>வாஸனா: | = | வாஸனைகள், |
| अनन्तभवाः<br>அனந்தப⁴வா: | = | எல்லையற்றதாய் ஏற்படுபவை, |
| हि<br>ஹி | = | அல்லவா? |

(344)

**(அவதாரிகை)** முன்னால் 142 முதல் 146 வரை அவித்யையானது ஆவரண சக்தியினால் ஆத்மதத்வம் தெரியவொட்டாமல் செய்து விக்ஷேப சக்தியினால் ஸம்ஸார துக்கத்தை ஏற்படுத்தி விடுகிறது என்று சொன்னதை இந்த ஸந்தர்பத்தில் ஞாபகப்படுத்துகிறார்: -

**अहम्बुद्ध्यैव मोहिन्या योजयित्वाऽऽवृतेर्बलात् ।**
**विक्षेपशक्तिः पुरुषं विक्षेपयति तद्गुणैः ॥ ३४५ ॥**

**அஹம்பு³த்³த்⁴யைவ மோஹின்யா யோஜயித்வா(ஆ)வ்ருதேர்ப³லாத் ।**
**விக்ஷேபஶக்தி: புருஷம் விக்ஷேபயதி தத்³கு³ணை: ॥ 345 ॥**

**आवृतेः** = (ஆத்மஸ்வரூபத்தை மறைக்கும்) ஆவரண
**ஆவ்ருதேः** சக்தியின்,
**बलात्** = பலத்தைக் கொண்டு,
**ப³லாத்**
**विक्षेपशक्तिः** = விக்ஷேப சக்தியானது,
**விக்ஷேபஶக்திः**
**मोहिन्या** = மோஹத்தை யுண்டு பண்ணக்கூடிய,
**மோஹின்யா**
**अहं बुद्ध्या एव** = 'நான்' என்கிற எண்ணத்துடனேயே,
**அஹம் பு³த்³த்⁴யா ஏவ**
**पुरुषं** = புருஷனை,
**புருஷம்**
**योजयित्वा** = சேர்த்து விட்டு,
**யோஜயித்வா**
**तद्गुणैः** = அதினுடைய (ஸங்கல்பம், காமம், பிரவிருத்தி
**தத்³கு³ணைः** முதலான) குணங்களால்,
**विक्षेपयति** = பலவிதமாய் அலைக்கிறது.
**விக்ஷேபயதி** **(345)**

**विक्षेपशक्तिविजयो विषमो विधातुं**
**निःशेषमावरणशक्ति निवृत्यभावे ।**
**दृग्दृश्ययोः स्फुटपयोजलवद्विभागे**
**नश्येत्तदावरणमात्मनि च स्वभावात् ।**

**निःसंशयेन भवति प्रतिबन्धशून्यो**
**निक्षेपणं न हि तदा यदि चेन्मृषार्थे ॥ ३४६ ॥**

**விக்ஷேபஶக்திவிஜயோ விஷமோ விதா⁴தும்**
**நிःஶேஷமாவரணஶக்தி நிவ்ருத்யபா⁴வே ।**
**த்³ருக்³த்³ருஶ்யயோः ஸ்பு²டபயோஜலவத்³விபா⁴கே³**
**நஶ்யேத்ததா³வரணமாத்மனி ச ஸ்வபா⁴வாத் ।**

**நிःஸம்ஶயேன ப⁴வதி ப்ரதிப³ந்த⁴ஶூன்யோ**
**நிக்ஷேபணம் ந ஹி ததா³ யதி³ சேன்ம்ருஷார்தே² ॥ 346 ॥**

**निःशेषं** = பாக்கியன்னியில்,
**நிःஶேஷம்**

| | | |
|---|---|---|
| **आवरणशक्ति निवृत्यभावे** | = | ஆவரணசக்தி நிவிருத்தியாகாமலிருந்தால், |
| **ஆவரணஶக்தி நிவ்ருத்யபா⁴வே** | | |
| **विक्षेपशक्तिविजय:** | = | விக்ஷேப சக்தியின் ஜயம், |
| **விக்ஷேபஶக்திவிஜய꞉** | | |
| **विधातुं विषम:** | = | செய்வதற்கு மிகவும் சிரமம், |
| **விதா⁴தும் விஷம꞉** | | |
| **स्फुटपयोजलवत्** | = | நன்கு பாலையும் ஜலத்தையும் (ஹம்ஸபக்ஷி |
| **ஸ்பு²டபயோஜலவத்** | | பிரித்துவிடுவது) போல, |
| **दृक् दृश्ययो:** | = | பார்க்கும் ஆத்மாவையும் பார்க்கப்படும் |
| **த்³ருக் த்³ருஶ்யயோ꞉** | | அநாத்மாவையும், |
| **विभागे** | = | நன்கு பிரித்துவிட்டால், |
| **விபா⁴கே³** | | |
| **तदा** | = | அப்பொழுது, |
| **ததா³** | | |
| **आवरणं** | = | ஆவரணமானது, |
| **ஆவரணம்** | | |
| **स्वभावात्** | = | தானாகவே, |
| **ஸ்வபா⁴வாத்** | | |
| **आत्मनि** | = | ஆத்மாவிடத்தில், |
| **ஆத்மனி** | | |
| **नश्येत् च** | = | நாசத்தை யடைந்துவிடும், |
| **நஶ்யேத் ச** | | |
| **मृषार्थे** | = | பொய்யான (அனாத்ம) பதார்த்தத்தில், |
| **ம்ருஷார்தே²** | | |
| **निक्षेपणं** | = | மனஸை வைப்பது, |
| **நிக்ஷேபணம்** | | |
| **यदि चेत् न** | = | இல்லையானால், |
| **யதி³ சேத் ந** | | |
| **तदा हि** | = | அப்பொழுதே (விக்ஷேப சக்தியை ஜயிப்பதானது), |
| **ததா³ ஹி** | | |
| **नि:संशयेन** | = | ஸந்தேஹமன்னியில், |
| **நி꞉ஸம்ஶயேன** | | |
| **प्रतिबन्धशून्य:** | = | தடங்கலில்லாமல், |
| **ப்ரதிப³ந்த⁴ஶூன்ய꞉** | | |
| **भवति** | = | ஏற்பட்டுவிடும். |
| **ப⁴வதி** | | **(346)** |

**सम्यग्विवेकः स्फुटबोधजन्यो विभज्य दृग्दृश्य पदार्थतत्वम् ।**
**छिनत्ति मायाकृतमोहबन्धं यस्माद्विमुक्तस्य पुनर्न संसृतिः ॥ ३४७ ॥**

**ஸம்யக்³விவேக꞉ ஸ்பு²டபோ³த⁴ஜன்யோ விப⁴ஜ்ய**
**த்³ருக்³த்³ருஶ்ய பதா³ர்த²தத்வம் ।**
**சி²னத்தி மாயாக்ருதமோஹப³ந்த⁴ம் யஸ்மாத்³விமுக்தஸ்ய**
**புனர்ன ஸம்ஸ்ருதி꞉ ॥ 347 ॥**

| | | |
|---|---|---|
| **स्फुटबोधजन्यः** ஸ்பு²டபோ³த⁴ஜன்ய꞉ | = | தெளிவான (ஸந்தேஹம் விபரீதமில்லாத உபநிஷத்தாலும் குருவின் அநுக்ரஹத்தாலும் ஏற்பட்ட) அறிவினுல் ஏற்படும், |
| **सम्यग्विवेकः** ஸம்யக்³விவேக꞉ | = | திடமான பகுத்தறிவு, |
| **दृग्दृश्य पदार्थतत्वं** த்³ருக்³த்³ருஶ்ய பதா³ர்த²தத்வம் | = | ஆத்மா அனுத்மாவாகிற பதார்த்தங்களுடைய வாஸ்தவமான் தன்மையை (ஆத்மா ஸத்யம், அனுத்மா மிதயை என்பதை), |
| **विभज्य** விப⁴ஜ்ய | = | நன்கு பிரித்துக் காட்டி, |
| **यस्मात्** யஸ்மாத் | = | எதிலிருந்து, |
| **विमुक्तस्य** விமுக்தஸ்ய | = | விடுபட்டவனுக்கு, |
| **पुनः** புன꞉ | = | மறுபடியும், |
| **संसृतिः** ஸம்ஸ்ருதி꞉ | = | ஸம்ஸாரம், |
| **न** ந | = | கிடையாதோ (அந்த), |
| **मायाकृतमोहबन्धं** மாயாக்ருதமோஹப³ந்த⁴ம் | = | மாயையினுல் செய்யப்பட்டிருக்கும் மோஹமாகிற கட்டை, |
| **छिनत्ति** சி²னத்தி | = | அறுத்துவிடும். |

பால் தயிருகி, வெண்ணெயாகி, நெய்யாக ஆன பிறகு மறுபடியும் நெய் பாலாக ஆவதில்லை. அதுபோல் ஸ்வப்ரகாச ஆநந்த ஸ்வரூபமாக ஆன மனம் அநாத்ம விஷயங்களில் ஒட்டுவதில்லை. **(347)**

**(அவதாரிகை)** இதே விஷயத்தை வேறு திருஷ்டாந்தத்தினுல் மேலும் தெளிவுபடுத்துகிறுர்: -

**परावरैकत्वविवेकवह्निर्दहत्य विद्यागहनं ह्यशेषम् ।**
**किं स्यात्पुनः संसरणस्य बीजमद्वैतभावं समुपेयुषोऽस्य ॥ ३४८ ॥**

**பராவரைகத்வவிவேகவஹ்நிர்த³ஹத்ய**
**வித்³யாக³ஹனம் ஹ்யஶேஷம் ।**
**கிம் ஸ்யாத்புன: ஸம்ஸரணஸ்ய பீ³ஜமத்³வைதபா⁴வம்**
**ஸமுபேயுஷோ(அ)ஸ்ய ॥ 348 ॥**

**पर अवर एकत्व विवेक वह्निः** = மேலான ஈசுவரன் கீழ்பட்ட ஜீவன்
**பர அவர ஏகத்வ விவேக வஹ்னி:** இருவருக்குமுள்ள ஒன்றுயிருக்கும் தன்மை விஷயமான அறிவாகிய நெருப்பு,
**अविद्या गहनं** = அவித்யையாகிற காட்டை,
**அவித்³யா க³ஹனம்**
**अशेषं** = பாக்கியன்னியில்,
**அஶேஷம்**
**दहति हि** = எரித்துவிடுமல்லவா?,
**த³ஹதி ஹி**
**अद्वैत भावं** = இரண்டற்ற தன்மையை,
**அத்³வைத பா⁴வம்**
**समुपेयुषः** = மறுபடியும்,
**ஸமுபேயுஷ:**
**संसरणस्य** = ஸம்ஸாரத்தில் ஈடுபடுவதற்கு,
**ஸம்ஸரணஸ்ய**
**बीजं** = விதை,
**பீ³ஜம்**
**किं** = எது,
**கிம்**
**स्यात्** = இருக்க முடியும்?
**ஸ்யாத்** **(348)**

**(அவதாரிகை)** ஆத்மஞானம் திடமாயேற்பட்டால், ஆவரணம், வீக்ஷேபம், அதினுல் ஏற்படும் துக்கம், ஆகிய மூன்றுமே விலகிவிடும் என்று திருஷ்டாந்தம் மூலமாய் காண்பிக்கிறுர்: -

**आवरणस्य निवृत्तिर्भवति च सम्यक पदार्थदर्शनतः ।**
**मिथ्याज्ञानविनाशस्तद्वद्विक्षेपजनितदुःखनिवृत्तिः ॥ ३४९ ॥**

**एतत्त्रितयं दृष्टं सम्यग्रज्जुस्वरूपविज्ञानात ।**

**ஆவரணஸ்ய நிவ்ருத்திர்ப⁴வதி ச ஸம்யக பதா³ர்த²த³ர்ஶனதঃ ।**
**மித்²யாஜ்ஞானவிநாஶஸ்தத்³வத்³விக்ஷேபஜனிதது³ঃக²நிவ்ருத்திঃ ॥ 349 ॥**

**ஏதத்த்ரிதயம் த்³ருஷ்டம் ஸம்யக்³ரஜ்ஜுஸ்வரூபவிஜ்ஞானாத**

| | | |
|---|---|---|
| **सम्यक पदार्थ दर्शनतः** **ஸம்யக பதா³ர்த²த³ர்ஶனதঃ** | = | நன்கு பதார்த்தத்தை அறிவதினுல், |
| **आवरणस्य** **ஆவரணஸ்ய** | = | ஆவரணத்தினுடைய (மறைவினுடைய) |
| **निवृत्तिः** **நிவ்ருத்திঃ** | = | நிவிருத்தி, |
| **भवति** **ப⁴வதி** | = | ஏற்படுகிறது, |
| **मिथ्या अज्ञानविनाशः** **மித்²யா அஜ்ஞானவிநாஶঃ** | = | பொய்யான அக்ஞானம் (வேறுவிதமாய் தோன்றும் விக்ஷேபம்) இதன் நாசம், |
| **च** **ச** | = | கூட ஏற்படுகிறது, |
| **तद्वत्** **தத்³வத்** | = | அப்படியே, |
| **विक्षेपजनितदुःखनिवृत्तिः** **விக்ஷேபஜனிதது³ঃக²நிவ்ருத்திঃ** | = | விக்ஷேபத்தினால் ஏற்பட்டிருக்கும் துக்கத்தின் நிவிருத்தியும் (ஏற்படுகிறது), |
| **एतत्** **ஏதத்** | = | இந்த, |
| **त्रितयं** **த்ரிதயம்** | = | மூன்றும், |
| **सम्यक् रज्जु स्वरूपविज्ञानात्** **ஸம்யக் ரஜ்ஜு ஸ்வரூபவிஜ்ஞானுத்** | = | நன்ருக கயிற்றின் ஸ்வரூபத்தை அறிந்து விடுவதால் (ஏற்படுகிறதென்பது), |
| **दृष्टं** **த்³ருஷ்டம்** | = | (எல்லோராலேயும்) அனுபவித்து அறியப்பட்டிருக்கிறது. |

இது கயிறுதான் என்று உண்மையான கயிறை நன்கு அறிந்தவுடன், கயிறைத் தெரியவொட்டாமல் அதை மறைத்திருந்த ஆவரணம் விலகி, அதன்மூலம் இது பாம்பு என்ற எண்ணத்தைக் கொடுத்த ஸர்பபிராந்தியும் விலகி, பாம்பாகப் பார்த்ததால் ஏற்பட்ட பயமும் உடல் நடுக்கமும் நீங்கி விடுகிறது.

**तस्माद्वस्तुसतत्त्वं ज्ञातव्यं बन्धमुक्तये विदुषा ॥ ३५० ॥**

**தஸ்மாத்³வஸ்துஸதத்த்வம் ஜ்ஞாதவ்யம் ப³ந்த⁴முக்தயே விது³ஷா ॥ 350 ॥**

| | | |
|---|---|---|
| **तस्मात्** தஸ்மாத் | = | ஆகையால், |
| **विदुषा** விது³ஷா | = | அறிவுள்ளவனால், |
| **बन्धमुक्तये** ப³ந்த⁴முக்தயே | = | ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடவேண்டியதற்காக, |
| **वस्तुसतत्त्वं** வஸ்துஸதத்த்வம் | = | வஸ்துவினுடைய ஆத்மாவினுடைய வாஸ்தவமான ஸ்வரூபம், |
| **ज्ञातव्यं** ஜ்ஞாதவ்யம் | = | அறியப்படவேண்டியது. |

(350)

**अयोऽग्नियोगादिव सत्समन्वयान् मात्रादिरूपेण विजृम्भते धीः ।**
**तत्कार्यमेतद्द्वितयं यतो मृषा दृष्टं भ्रमस्वप्नमनोरथेषु ॥ ३५१ ॥**

**அயோ(அ)க்³நியோகா³தி³வ ஸத்ஸமன்வயான்**
**மாத்ராதி³ரூபேண விஜ்ரும்ப⁴தே தீ⁴ஃ ।**
**தத்கார்யமேதத்³த்³விதயம் யதோ ம்ருஷா த்³ருஷ்டம்**
**ப்⁴ரமஸ்வப்னமனோரதே²ஷு ॥ 351 ॥**

| | | |
|---|---|---|
| **अग्नि योगात्** அக்³னி யோகா³த் | = | அக்னியின் சேர்க்கையினால், |
| **अयः** அயஃ | = | இரும்பு (எப்படிப் பொய்யாக சுடுவதாகத் தோன்றுகிறதோ அதை), |
| **इव** இவ | = | போல, |
| **सत् समन्वयात्** ஸத் ஸமன்வயாத் | = | ஸத்தான ஆத்மாவின் சேர்க்கையினால், |
| **धीः** தீ⁴ஃ | = | புத்தியானது, |
| **मात्रादि रूपेण** மாத்ராதி³ ரூபேண | = | அறிகிறவன் (அறிவு, அறியப்படும் வஸ்து) முதலான ரூபத்துடன், |
| **विजृम्भते** விஜ்ரும்ப⁴தே | = | பலவிதமாகத் தோன்றுகிறது, |
| **तत् कार्यं** தத் கார்யம் | = | அதினால் ஏற்பட்ட, |

**एतत् त्रितयं** = இம்மூன்றும் (பார்க்கிறவன், பார்வை,
**ஏதத் த்ரிதயம்** பார்க்கப்படுவது ஆகிய மூன்றும்),
**भ्रम स्वप्नमनोरथेषु** = பிராந்தி ஸ்தலத்திலும், ஸ்வப்னம் காண்பதிலும்,
**ப்4ரம ஸ்வப்னமனோரதே2ஷு** மனக்கோட்டை கட்டுவதிலும்,
**मृषा** = பொய்தான் என்று,
**ம்ருஷா**
**यत:** = எதினால்,
**யத:**
**दृष्टं** = அறியப்பட்டிருக்கிறதோ (அதேகாரணத்தினால்
**த்3ருஷ்டம்** புத்தியின் ஸ்ருஷ்டியான ஜாக்கிரத்தும்
பொய்யே) **(351)**

## ततो विकारा: प्रकृतेरहम्मुखा देहावसाना विषयाश्च सर्वे ।
## क्षणेऽन्यथाभाविन एष आत्मा नोदेति नाप्येति कदापि नान्यथा ॥ ३५२ ॥

**ததோ விகாரா: ப்ரக்ருதேரஹம்முகா2 தே3ஹாவஸானா**
**விஷயாஶ்ச ஸர்வே ।**
**க்ஷணே(அ)ன்யதா2பா4வி ஏஷ ஆத்மா நோதே3தி நாப்யேதி**
**கதா3பி நான்யதா2 ॥ 352 ॥**

**तत:** = ஆகையால்,
**தத:**
**प्रकृते:** = மூலகாரணமான அவித்யையினுடைய,
**ப்ரக்ருதே:**
**विकारा:** = மாறுதல்கள் (கார்யங்கள்) ஆகிய,
**விகாரா:**
**अहम्मुखा** = அஹங்காரம் முதல்,
**அஹம்முகா2**
**देहावसाना:** = சரீரம் முடிய உள்ளவைகளும்,
**தே3ஹாவஸானா:**
**विषया: च** = (சப்தம் முதலிய) விஷயங்களும்,
**விஷயா: ச**
**सर्वे** = எல்லாமே,
**ஸர்வே**
**क्षणे** = ஒரு க்ஷணத்தில்,
**க்ஷணே**
**अन्यथाभाविन:** = வேறு படக்கூடிய தன்மையுடையவைகள்,
**அன்யதா2பா4வின:**

**एषः** = இந்த,
**ஏஷ:**
**आत्मा** = ஆத்மா,
**ஆத்மா**
**कदा अपि** = ஒரு பொழுதும்,
**கதா³ அபி**
**न उदेति** = உண்டாவதில்லை,
**ந உதே³தி**
**न अप्येति** = நாசமடைவதுமில்லை,
**ந அப்யேதி**
**न अन्यथा** = வேறுவிதமாக மாறுவதுமில்லை.
**ந அன்யதா²** (352)

**नित्याद्वयाखण्ड चिदेकरूपो बुद्ध्यादिसाक्षी सदसद्विलक्षणः ।**
**अहम्पदप्रत्ययलक्षितार्थः प्रत्यक्सदानन्दघनः परात्मा ॥ ३५३ ॥**

**நித்யாத்³வயாக²ண்ட³ சிதே³கரூபோ பு³த்³த⁴யாதி³ஸாக்ஷீ**
**ஸத³ஸத்³விலக்ஷண: ।**
**அஹம்பத³ப்ரத்யயலக்ஷிதார்த²: ப்ரத்யக்ஸதா³னந்த³க⁴ன:**
**பராத்மா ॥ 353 ॥**

**नित्याद्वयाखण्ड चिदेकरूपः** = நித்யமாய் (உத்பத்தி விநாசமில்லாததாய்)
**நித்யாத்³வயாக²ண்ட³ சிதே³கரூப:** இரண்டற்றதாய் (தன்னைக்காட்டிலும் வேறான உண்மையான வஸ்து இல்லாதகாய்) துண்டுபடாததாய் (தேச கால வஸ்துக்களின் எல்லைக்கு உட்படாததாய்) சைதன்யம் ஒன்றையே ஸ்வரூபமா யுடையதாயும்,
**बुद्धि आदि साक्षी** = புத்தி முதலானவைகளுக்கு ஸாக்ஷியாயும்,
**பு³த்³தி⁴ ஆதி³ ஸாக்ஷீ**
**सत् असत् द्विलक्षणः** = ஸத் (கார்யம், அல்லது பிருதிவீ அப்பு, தேஜஸ்)
**ஸத் அஸத்³ விலக்ஷண:** அஸத் (காரணம், அல்லது வாயு ஆகாசம்) இவைகளுக்கு வேறுபட்டதாயும்,
**अहं पदप्रत्यय लक्षितार्थः** = 'நான்' என்ற பதத்தினாலும் பாவனையாலும்
**அஹம் பத³ப்ரத்யய லக்ஷிதார்த²:** லக்ஷணையால் குறிக்கப்படும் பொருளாகவும் உள்ள,
**प्रत्यक्** = உள்ளேயுள்ள வஸ்து,
**ப்ரத்யக்**
**सदानन्द घनः** = (எங்கும் எப்பொழுதும்) இருப்புள்ள ஆனந்தக்
**ஸதா³னந்த³ க⁴ன:** கட்டியாகிய,

| | | |
|---|---|---|
| **परात्मा**<br>**பராத்மா** | = | (எல்லாவற்றிற்கும்) மேலாலுள்ள ஆத்மா (பிரபிரஹ்மமே). **(353)** |

**इत्थं विपश्चित्सदसद्विभज्य निश्चित्य तत्त्वं निजबोधदृष्टया ।**
**ज्ञात्वा स्वमात्मानमखण्डबोधं तेभ्यो विमुक्तः स्वयमेव शाम्पति ॥ ३५४ ॥**

**இத்த²ம் விபஶ்சித்ஸத³ஸத்³விப⁴ஜ்ய நிஶ்சித்ய தத்த்வம்**
**நிஜபோ³த⁴த்³ருஷ்டயா ।**
**ஜ்ஞாத்வா ஸ்வமாத்மானமக²ண்ட³போ³த⁴ம் தேப்⁴யோ**
**விமுக்த: ஸ்வயமேவ ஶாம்பதி ॥ 354॥**

| | | |
|---|---|---|
| **इत्थं**<br>**இத்த²ம்** | = | இவ்விதமாக, |
| **विपश्चित्**<br>**விபஶ்சித்** | = | அறிவுள்ளவன், |
| **सत्**<br>**ஸத்** | = | ஸத்தாகிய ஆத்மாவையும், |
| **असत्**<br>**அஸத்** | = | அஸத்தாகிய அனாத்மாவையும், |
| **विभज्य**<br>**விப⁴ஜ்ய** | = | நன்கு வேறுபடுத்தி, |
| **निजबोधदृष्टया**<br>**நிஜபோ³த⁴த்³ருஷ்டயா** | = | தன்னுடைய ஞானமாகிற கண்ணினால், |
| **तत्त्वं**<br>**தத்த்வம்** | = | வாஸ்தவத்தன்மையை, |
| **निश्चित्य**<br>**நிஶ்சித்ய** | = | தீர்மானித்துக் கொண்டு, |
| **स्वं**<br>**ஸ்வம்** | = | தன்னுடைய, |
| **आत्मानं**<br>**ஆத்மானம்** | = | ஆத்மாவை, |
| **अखण्डबोधं**<br>**அக²ண்ட³போ³த⁴ம்** | = | துண்டுபடாத அறிவு ஸ்வரூபமென்று, |
| **ज्ञात्वा**<br>**ஜ்ஞாத்வா** | = | அறிந்து, |
| **तेभ्यः**<br>**தேப்⁴ய:** | = | அனாத்ம பதார்த்தங்களிலிருந்து, |

| | | |
|---|---|---|
| विमुक्तः<br>விமுக்த: | = | நன்கு விடுபட்டவனாய், |
| स्वयं एव<br>ஸ்வயம் ஏவ | = | தானாகவே, |
| शाम्पति<br>ஶாம்பதி | = | அடங்கிவிடுகிறான். |

(354)

अज्ञानहृदयग्रन्थेर्निःशेषविलयस्तदा ।
समाधिनाऽविकल्पेन यदाऽद्वैतात्मदर्शनम् ॥ ३५५ ॥

அஜ்ஞானஹ்ருத³யக்³ரந்தே²ர்நி:ஶேஷவிலயஸ்ததா³ ।
ஸமாதி⁴னா(அ)விகல்பேன யதா³(அ)த்³வைதாத்மத³ர்ஶனம் ॥ 355 ॥

| | | |
|---|---|---|
| यदा<br>யதா³ | = | எப்பொழுது, |
| अविकल्पेन<br>அவிகல்பேன | = | நிர்விகல்பமான, |
| समाधिना<br>ஸமாதி⁴னா | = | ஸமாதியினால், |
| अद्वैतात्मदर्शनं<br>அத்³வைதாத்மத³ர்ஶனம் | = | இரண்டற்ற ஆத்மஸ்வரூபத்தின் ஸாக்ஷாத்காரம் (ஏற்படுகிறதோ), |
| तदा<br>ததா³ | = | அப்பொழுதுதான், |
| अज्ञान हृदय ग्रन्थेः<br>அஜ்ஞான ஹ்ருத³ய க்³ரந்தே²: | = | அக்ஞானத்தினால் ஏற்பட்ட ஹ்ருதயத்தில் உள்ள (ஆத்மாவையும் அனாத்மாவையும் சேர்த்து வைத்திருக்கும்) முடிச்சுக்கு, |
| निश्शेषविलयः<br>நிஶ்ஶேஷவிலய: | = | பாக்கியன்னியில் நிவிருத்தி (ஏற்படும்.) |

(355)

त्वमहमिदमितीयं कल्पना बुद्धिदोषात्
प्रभवति परमात्मन्यद्वये निर्विशेषे ।
प्रविलसति समाधावस्य सर्वो विकल्पो
विलयनमुपगच्छेद्वस्तुतच्चावधृत्या ॥ ३५६ ॥

த்வமஹமித³மிதீயம் கல்பனா பு³த்³தி⁴தோ³ஷாத்
ப்ரப⁴வதி பரமாத்மன்யத்³வயே நிர்விஶேஷே ।
ப்ரவிலஸதி ஸமாதா⁴வஸ்ய ஸர்வோ விகல்போ
விலயனமுபக³ச்சே²த்³வஸ்துதச்சாவத்⁴ருத்யா ॥ 356 ॥

त्वं = 'நீ' 'நான்' 'இது',
த்வம்
इदं = என்ற,
இத³ம்
इयं = இந்த,
இயம்
कल्पना = கல்பனையானது,
கல்பனா
अद्वये = இரண்டற்றதாய்,
அத்³வயே
निर्विशेषे = எவ்வித விசேஷமுமில்லாத,
நிர்விஶேஷே
परमात्मनि = பரமாத்மாவினிடத்தில்,
பரமாத்மனி
बुद्धि दोषात् = புத்தியின் தோஷத்தினால்,
பு³த்³தி⁴ தோ³ஷாத்
प्रभवति = ஏற்படுகிறது,
ப்ரப⁴வதி
समाधौ = ஸமாதி நிலையானது,
ஸமாதௌ⁴
प्रविलसति = நன்கு பிரகாசிக்கும்போது,
ப்ரவிலஸதி
वस्तु-तच्च-अवधृत्या = வஸ்துவின் (ஆத்மாவின்) வாஸ்தவத்தன்மை
வஸ்து-தச்ச-அவத்⁴ருத்யா விஷயமாயுள்ள நிச்சய ஞானத்தினால்,
सर्व: = எல்லா,
ஸர்வ:
विकल्प: = விகல்பங்களும்,
விகல்ப:
विलयनं = நாசத்தை,
விலயனம்
उपगच्छेत् = அடைந்து விடும்.
உபக³ச்சே²த் (356)

(**அவதாரிகை**) இதுவரை சொல்லிக்கொண்டு வந்ததையெல்லாம் சேர்த்து ஸமாதியின் பூர்வாங்கங்கள் ஸமாதி நிலையின் தன்மை, ஸமாதி நிலையின் பலன் எல்லாவற்றையும் ஒரே சுலோகத்தில் ஸங்கிரஹித்துச் சொல்கிறார்: -

शान्तो दान्तः परमुपरतः क्षान्तियुक्तः समाधिं
कुर्वन्नित्यं कलयति यतिः स्वस्य सर्वात्मभावम्।
तेनाविद्यातिमिरजनितान्साधु दग्ध्वा विकल्पान्
ब्रह्माकृत्या निवसति सुखं निष्क्रियो निर्विकल्पः ॥ ३५७ ॥

ஶாந்தோ தா³ந்த: பரமுபரத: க்ஷாந்தியுக்த: ஸமாதி⁴ம்
குர்வந்நித்யம் கலயதி யதி: ஸ்வஸ்ய ஸர்வாத்மபா⁴வம் ।
தேநாவித்³யாதிமிரஜனிதான்ஸாது⁴ த³க்³த்⁴வா விகல்பான்
ப்³ரஹ்மாக்ருத்யா நிவஸதி ஸுக²ம் நிஷ்க்ரியோ நிர்விகல்ப: ॥ 357 ॥

| | | |
|---|---|---|
| शान्तः<br>ஶாந்த: | = | மனஸை அடக்கினவராய், |
| दान्तः<br>தா³ந்த: | = | இந்திரியங்களை அடக்கினவராய், |
| परं<br>பரம் | = | நன்றாக, |
| उपरतः<br>உபரத: | = | வெளிபிரவிருத்திகளிலிருந்து விலகினவராய், |
| क्षान्ति युक्तः<br>க்ஷாந்தி யுக்த: | = | (சீதோஷ்ணாதிகளை) பொறுத்துக்கொள்ளும் தன்மை உடையவராய் இருந்துகொண்டு, |
| समाधिं<br>ஸமாதி⁴ம் | = | ஸமாதியை, |
| नित्यं<br>நித்யம் | = | எப்பொழுதும், |
| कुर्वन्<br>குர்வன் | = | செய்துகொண்டிருக்கும், |
| यतिः<br>யதி: | = | ஸன்னியாஸியானவர், |
| स्वस्य<br>ஸ்வஸ்ய | = | தன்னுடைய, |
| सर्वात्मभावं<br>ஸர்வாத்மபா⁴வம் | = | எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருக்கும் தன்மையை (எல்லாவற்றையும் தன்னிடத்திலேயே லயம் செய்து தனித்திருக்கும் நிலையை), |
| कलयति<br>கலயதி | = | அனுபவிக்கிறார், |
| तेन<br>தேன | = | அதினால் (அவ்விதம் ஸமாதி நிலையிலிருப்பதினால்) |

| | | |
|---|---|---|
| **अविद्या तिमिर जनितान्** **அவித்³யா திமிர ஜனிதான்** | = | அவித்யையாகிற இருட்டினுல் ஏற்படும், |
| **विकल्पान्** **விகல்பான்** | = | பலவித கல்பனைகளையெல்லாம், |
| **साधु** **ஸாது⁴** | = | நன்ருக, |
| **दग्ध्वा** **த³க்³த்⁴வா** | = | எரித்துவிட்டு, |
| **निष्क्रिय:** **நிஷ்க்ரிய꞉** | = | எவ்வித வியாபாரமுமன்னியிலும், |
| **निर्विकल्प:** **நிர்விகல்ப꞉** | = | எவ்வித விகல்பமன்னியிலும், |
| **ब्रह्माकृत्या** **ப்³ரஹ்மாக்ருத்யா** | = | பிரஹ்மஸ்வரூபமாகவே, |
| **सुखं** **ஸுக²ம்** | = | ஆனந்தமாக, |
| **निवसति** **நிவஸதி** | = | இருந்துவிடுகிருர். **(357)** |

(**அவதாரிகை**) இவ்வித அனுபவம் ஏற்பட்டால்தான் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடமுடியும், அனுபவமில்லாத வெறும் ஞானம் போதாது என்பதைத் துலக்குகிருர்: -

**समाहिता ये प्रविलाप्य बाह्यं श्रोत्रादि चेत: स्वमहं चिदात्मनि ।**
**त एव मुक्ता भवपाशबन्धै: नान्ये तु पारोक्ष्यकथाभिधायिन: ॥ ३५८ ॥**

**ஸமாஹிதா யே ப்ரவிலாப்ய பா³ஹ்யம் ஶ்ரோத்ராதி³**
**சேத꞉ ஸ்வமஹம் சிதா³த்மனி ।**
**த ஏவ முக்தா ப⁴வபாஶப³ந்தை⁴꞉ நான்யே து**
**பாரோக்ஷ்யகதா²பி⁴தா⁴யின꞉ ॥ 358 ॥**

| | | |
|---|---|---|
| **ये** **யே** | = | எவர்கள், |
| **स्वं** **ஸ்வம்** | = | தன்னுடைய, |
| **बाह्यं** **பா³ஹ்யம்** | = | வெளியிலுள்ள, |

**श्रोत्रादि** = சுரோத்திரம் முதலிய இந்திரியங்களையும்

**ஶ்ரோத்ராதி³** (ஐந்து பூதங்களையும்) (உள்ளேயுள்ள),

**चेत:** = மனஸ்,

**சேத:**

**अहं** = அஹங்காரம் இவைகளையும்,

**அஹம்**

**चिदात्मनि** = ஞானஸ்வரூபமாயுள்ள ஆத்மாவினிடத்தில்,

**சிதா³த்மனி**

**प्रविलाप्य** = நன்கு லயம் செய்து,

**ப்ரவிலாப்ய**

**समाहिता** = ஸமாதி நிலையிலிருக்கிறார்களோ,

**ஸமாஹிதா**

**ते एव** = அவர்கள் தான்,

**தே ஏவ**

**भव पाश बन्धै:** = ஸம்ஸாரமாகிற கயிற்றினால்

**ப⁴வ பாஶ ப³ந்தை⁴:** கட்டப்பட்டிருப்பதிலிருந்து,

**मुक्ता:** = விடுபட்டவர்களாவார்கள்,

**முக்தா:**

**पारोक्ष्य कथा अभिधायिव:** = (நானே பிரஹ்மம் என்று) வெளிப்பேச்சு

**பாரோக்ஷ்ய கதா² அபி⁴தா⁴யிவ:** சொல்லிக்கொண்டிருக்கும்,

**अन्ये तु** = மற்றவர்களோ,

**அன்யே து**

**न** = விடுபட்டவர்களாக மாட்டார்கள்.

**ந**

## उपाधियोगात्स्वयमेव भिद्यते चोपाध्यपोहे स्वयमेव केवल: ।
## तस्मादुपाधेर्विलयाय विद्वान् वसेत्सदाऽकल्पसमाधिनिष्ठया ॥ ३५९ ॥

**உபாதி⁴யோகா³த்ஸ்வயமேவ பி⁴த்³யதே சோபாத்⁴யபோஹே**
**ஸ்வயமேவ கேவல: ।**
**தஸ்மாது³பாதே⁴ர்விலயாய வித்³வான் வஸேத்ஸதா³**
**(அ)கல்பஸமாதி⁴நிஷ்ட²யா ॥ 359 ॥**

(ஆத்மா),

**उपाधि योगादेव** = (மாயை, அவித்யை, பஞ்சகோசங்கள் ஆகிய)

**உபாதி⁴ யோகா³தே³வ** உபாதிகளின் சேர்க்கையால் தான்,

**स्वयं** = தானும்,

**ஸ்வயம்**

**भिद्यते** = வேற்றுமையடைகிறர்,
**பி4த்3யதே**
**उपाधि अपोहे** = அவ்வுபாதி விலகிவிட்டாலோ,
**உபாதி4 அபோஹே**
**स्वयं** = தானே,
**ஸ்வயம்**
**केवलः एव** = தனித்திருப்பவரேயாவார்,
**கேவலঃ ஏவ**
**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**
**विद्वान्** = அறிவுள்ளவர்,
**வித்3வான்**
**उपाधेः** = உபாதியினுடைய (முக்யமாக அஹங்காரத்தின்),
**உபாதே4ঃ**
**विलयाय** = நன்கு லயத்தை யுத்தேசித்து,
**விலயாய**
**सदा** = எப்பொழுதும்,
**ஸதா3**
**अकल्प समाधि निष्ठया** = நிர்விகல்ப ஸமாதியில் நிலைத்திருப்பதுடன்,
**அகல்ப ஸமாதி4 நிஷ்ட2யா**
**वसेत्** = இருந்துவர் வேண்டியது.
**வஸேத்** (359)

## सति शक्तो नरो याति सद्भावं ह्येकनिष्ठया ।
## कीटको भ्रमरं ध्यायन्भ्रमरत्वाय कल्पते ॥ ३६० ॥

**ஸதி ஶக்தோ நரோ யாதி ஸத்3பா4வம் ஹ்யேகநிஷ்ட2யா ।**
**கீடகோ ப்4ரமரம் த்4யாயன்ப்4ரமரத்வாய கல்பதே ॥ 360 ॥**

**कीटकः** = ஒரு சிறு புழு,
**கீடகঃ**
**भ्रमरं** = வண்டை,
**ப்4ரமரம்**
**ध्यायन्** = நினைத்துக் கொண்டிருந்து,
**த்4யாயன்**
**भ्रमरत्वाय** = வண்டின் தன்மையை அடைய,
**ப்4ரமரத்வாய**

| | | |
|---|---|---|
| **कल्पते** | = | முடிகிறது, (அதைப் போலவே), |
| **கல்பதே** | | |
| **सति** | = | பிரஹ்மத்தில், |
| **ஸதி** | | |
| **सक्तः** | = | ஈடுபட்டிருக்கும், |
| **ஸக்த:** | | |
| **नरः** | = | மனுஷ்யன், |
| **நர:** | | |
| **एकनिष्ठया** | = | அது ஒன்றிலேயே நிலைத்திருப்பதினால், |
| **ஏகநிஷ்ட²யா** | | |
| **सद्भावं** | = | பிரஹ்மத் தன்மையை, |
| **ஸத்³பா⁴வம்** | | |
| **याति हि** | = | அடையவே அடைவான். |
| **யாதி ஹி** | | **(360)** |

**(அவதாரிகை)** தியானம் செய்யும் புழு தியானம் செய்யப்பட்ட வண்டாக ஆகிறதில்லை, வேறு வண்டாகவல்லவா ஆகிறது? அதுபோல் இங்கேயும் ஸமாதியில் ஈடுபடும் ஜீவன் வேறொரு பிரஹ்மமாக ஆகலாமே தவிர அதே பிரஹ்மமாக ஆக முடியாதே? என்று தோன்றலாம். வண்டுகள் பல உள்ளதால் வேறு வண்டாக புழு ஆகிறது. பிரஹ்மம் ஒன்றேதான் உள்ளது, அதில் ஏதேனும் வேற்றுமை தோன்றினாலும் அது அறியாமையினாலேயே தோன்றுவதால் வாஸ்தவமில்லை. ஆகையால் வேறு பிரஹ்மமாவதற்கு இங்கே இடமில்லை, அதே பிரஹ்மமாகத்தான் ஆகமுடியும் என்பதையும் வண்டாக இல்லாத, வண்டைக் காட்டிலும் வேறான புழு வண்டை தியானம் செய்து வண்டாக ஆகலாமானால், பிரஹ்மமாகவேயிருக்கும் ஜீவன் பிரஹ்மத்தைத் தியானம் செய்து பிரஹ்மமாக ஆவதில் என்ன சிரமம் என்பதையும் காட்டுகிறார்: -

**क्रियान्तरासक्तिमपास्य कीटको ध्यायन्यथालिं ह्यलिभावमृच्छति ।**
**तथैव योगी परमात्मतत्त्वं ध्यात्वा समायाति तदेकनिष्ठया ॥ ३६१ ॥**

**க்ரியாந்தராஸக்திமபாஸ்ய கீடகோ த்⁴யாயன்யதா²லிம் ஹாலிபா⁴வம்ருச்ச²தி ।**
**ததை²வ யோகீ³ பரமாத்மதத்த்வம் த்⁴யாத்வா ஸமாயாதி ததே³கநிஷ்ட²யா ॥361॥**

| | | |
|---|---|---|
| **कीटकः** | = | சிறு புழுவானது, |
| **கீடக:** | | |
| **क्रियान्तरासक्तिं** | = | வேறு எவ்வித கார்யத்தில் ஈடுபடுவதையும், |
| **க்ரியாந்தராஸக்திம்** | | |
| **अपास्य** | = | விட்டு விட்டு (தன்னைக் கொட்டிவிடுமே |
| **அபாஸ்ய** | | என்ற பயத்தினாலே) |

**अलिं** = வண்டையே,
**அலிம்**

**ध्यायन्** = எண்ணிக் கொண்டிருந்து,
**த்4யாயன்**

**अलिभावं** = வண்டின் தன்மையை,
**அலிபா4வம்**

**यथा** = எப்படி,
**யதா2**

**त्रच्छति हि** = அடைகிறது என்பது பிரஸித்தமோ,
**த்ர்ருச்ச2தி ஹி**

**तथा एव** = அப்படிப் போலவே,
**ததா2 ஏவ**

**योगी** = யோகியானவர்,
**யோகீ3**

**तदेकनिष्ठया** = (பரமாத்ம தத்வமாகிற) அதில் ஒன்றிலேயே
**ததே3கநிஷ்ட2யா** நிலைத்திருப்பதுடன்,

**ध्यात्वा** = தியானம் செய்து,
**த்4யாத்வா**

**परमात्मतत्त्वं** = பரமாத்மாவின் வாஸ்தவ ஸ்வருபத்தை,
**பரமாத்மதத்த்வம்**

**समायाति** = நன்கு (எவ்வித வேற்றுமையுமன்னியில்)
**ஸமாயாதி** அடைந்து விடுகிறுர். **(361)**

**अतीव सूक्ष्मं परमात्मतत्त्वं न स्थूलदृष्ट्या प्रतिपत्तुमर्हति ।**
**समाधिनात्यन्त सुसूक्ष्मवृत्त्या ज्ञातव्यमार्यैरतिशुद्धबुद्धिभिः ॥ ३६२ ॥**

**அதீவ ஸூக்ஷ்மம் பரமாத்மதத்த்வம் ந ஸ்தூ2லத்3ருஷ்ட்யா**
**ப்ரதிபத்துமர்ஹதி ।**
**ஸமாதி4நாத்யந்த ஸுஸூக்ஷ்மவ்ருத்த்யா**
**ஜ்ஞாதவ்யமார்யைரதிஶுத்3த4பு3த்3தி4பி4ః ॥ 362 ॥**

**परं** = மேலான (பஞ்சகோச விலக்ஷணமான),
**பரம்**

**आत्मतत्त्वं** = (ஸச்சிதானந்தரூபமான) ஆத்மாவின் வாஸ்தவ
**ஆத்மதத்த்வம்** ஸ்வரூபம் (குணங்களில்லாததால்),

**अतीव** = மிகவும்,
**அதீவ**

| | | |
|---|---|---|
| **सूक्ष्मं**<br>**ஸூக்ஷ்மம்** | = | ஸூக்ஷ்மமானது, |
| **स्थूलदृष्ट्या**<br>**ஸ்தூ²லத்³ருஷ்ட்யா** | = | ஸ்தூல பதார்த்தங்களிலேயே பழகியுள்ள மனோவிருத்தியினுல், |
| **प्रतिपत्तु**<br>**ப்ரதிபத்து** | = | அறிவதற்கு, |
| **न अर्हति**<br>**ந அர்ஹதி** | = | ஸாத்தியப்படாதது. (ஆகையால்), |
| **अतिशुद्धबुद्धिभिः**<br>**அதிஶுத்³த⁴பு³த்³தி⁴பி⁴:** | = | வெகு நிர்மலமான புத்தியையுடைய, |
| **आर्यैः**<br>**ஆர்யை:** | = | ஆர்யர்களினுல் (சுருதி, ஸ்மிருதிகளில் குறிப்பிட்டிருக்கும் ஸாதனங்களை அனுஷ்டிப்பவர்களால்), |
| **अत्यन्तसुसूक्ष्मवृत्त्या**<br>**அத்யந்தஸுஸூக்ஷ்மவ்ருத்த்யா** | = | வெகு நன்ருகவும் ஸக்ஷ்யமாகவுமிருக்கிற மனோவிருத்தியாகிற, |
| **समाधिना**<br>**ஸமாதி⁴னு** | = | ஸமாதியினுல் (தான்), |
| **ज्ञातव्यं**<br>**ஜ்ஞாதவ்யம்** | = | அறியத்தக்கது. |

**(362)**

(**அவதாரிகை**) மனஸிற்கு நிர்மலத்தன்மை எவ்விதம் ஏற்படு மென்பதை இரண்டு சுலோகங்களால் காட்டுகிருர்: -

**यथा सुवर्णं पुटपाकशोधितं त्यक्त्वा मलं स्वात्मगुणं समृच्छति ।**
**तथा मनः सत्वरजस्तमोमलं ध्यानेन संत्यज्य समेति तत्त्वम् ॥ ३६३ ॥**

**யதா² ஸுவர்ணம் புடபாகஶோதி⁴தம் த்யக்த்வா மலம்**
**ஸ்வாத்மகு³ணம் ஸம்ருச்ச²தி ।**
**ததா² மன: ஸத்வரஜஸ்தமோமலம் த்⁴யானேன ஸந்த்யஜ்ய**
**ஸமேதி தத்த்வம் ॥ 363 ॥**

| | | |
|---|---|---|
| **पुटपाक शोधितं**<br>**புடபாக ஶோதி⁴தம்** | = | புடம்போட்டு சுத்திசெய்யப்பட்ட, |
| **सुवर्णं**<br>**ஸுவர்ணம்** | = | தங்கம், |
| **यथा**<br>**யதா²** | = | எப்படி, |
| **मलं**<br>**மலம்** | = | அழுக்கையெல்லாம், |

| | | |
|---|---|---|
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | தள்ளிவிட்டு, |
| **स्व आत्म गुणं**<br>**ஸ்வ ஆத்ம கு³ணம்** | = | தனக்கு சொந்தமான குணத்தை, |
| **समृच्छति**<br>**ஸம்ருச்ச²தி** | = | நன்கு அடைகிறதோ, |
| **तथा**<br>**ததா²** | = | அப்படியே, |
| **मनः**<br>**மனঃ** | = | மனஸானது, |
| **ध्यानेन**<br>**த்⁴யானேன** | = | தியானத்தினுல், |
| **सत्व रजः तमः मलं**<br>**ஸத்வ ரஜঃ தமঃ மலம்** | = | (ஆத்மாவை அசுத்தப்படுத்துகிற மாயையின் கார்யங்களான) ஸத்வம், ரஜஸ், தமஸ் (என்ற மூன்று குணங்களாகிற) அழுக்கை, |
| **संत्यज्य**<br>**ஸந்த்யஜ்ய** | = | நன்கு விலக்கிவிட்டு, |
| **तत्त्वं**<br>**தத்த்வம்** | = | ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வரூபத்தை (பிரஹ்மமாயிருக்கும் தன்மையை), |
| **समेति**<br>**ஸமேதி** | = | நன்கு அடைகிறது. |

தங்கத்தின் ஸ்வபாவமான ஒளியையும் நிறத்தையும் மறைத்துக்கொண்டிருக்கும் அழுக்கைப் போக்குவதற்காக தங்கத்தை புடத்தில் போட்டு நெருப்பில் வைத்து சுத்தப் படுத்துவது வழக்கம். இதுவே புடபாகம். இதனுல் அழுக்கு நீங்கி தங்கம் ஒளியுடன் விளங்கும். இதுபோல் த்யானத்தால் மனதிலுள்ள ஸத்வரஜஸ்தமோ குணங்கள் என்ற அழுக்கு நீங்கியதும் ப்ரஹ்மமாக ஆய்விடுகிறது "ரஜோகுணமும் தமோ குணமும் தானே மலமாகும், ஸத்வகுணம் மலமாகாதே! 'ரஜஸ் தமோ மலங்களை நீக்குவதற்காக ஸத்வகுணத்தைக் கைக்கொள்ளவேண்டும், ஸத்வகுணத்தைக்கொண்டு அத்யாஸத்தைப் போக்கவேண்டும்' என்றெல்லாம் கூறப்பட்டிருக்கிறதே" என்று கேட்கலாம். ஆனுலும் முக்குணங்களையும் கடந்தவன்தான் பிரஹ்மத்தையடைகிறுன் என்றும் 'சுத்த ஸத்வபிரதானமான மாயை விலகுகிறது' என்றும் கூறப்பட்டிருப்பதாலும் சுத்த ஸத்வமும் மித்யையானபடியாலும் அதுவும் விலக்க வேண்டிய மலம்தான் 'எந்த சுத்த ஸத்வகுணத்தைக்கொண்டு ரஜஸ் தமோகுணங்களை விலக்குகிறுயோ அதையும் விலக்கவேண்டும்' என்று கூறப்பட்டிருக்கிறது. ஸத்வகுணம் மிஞ்சியிருந்தால் நிர்குணமான பிரஹ்மத்தை அடையமுடியாது மூலாக்ஞானத்தைப்போக்கும் ஸாத்விகமான அகண்டாகார விருத்தியும் தானுகவே அழிந்து விடுகிறது. ஆதலால் ஸத்வகுணமும் மலம்தான். **(363)**

**निरन्तराभ्यासवशात्तदित्थं पक्वं मनो ब्रह्मणि लीयते यदा ।**
**ददा समाधिः स विकल्पवर्जितः स्वतोऽद्वयानन्दरसानुभावकः ॥ ३६४ ॥**

**நிரந்தராப்4யாஸவஶாத்ததி3த்த2ம் பக்வம் மனோ**
**ப்3ரஹ்மணி லீயதே யதா3 ।**
**த3தா3 ஸமாதி4ঃ ஸ விகல்பவர்ஜிதঃ**
**ஸ்வதோ(அ)த்3வயானந்த3ரஸானுபா4வகঃ ॥ 364 ॥**

**निरन्तर अभ्यास वशात्** = இடைவிடாமல் அப்பியாஸம் செய்வது
**நிரந்தர அப்4யாஸ வஶாத்** காரணமாக,

**इत्थं** = இவ்விதம்,
**இத்த2ம்**

**तत्** = அந்த,
**தத்**

**मनः** = மனஸ்,
**மனঃ**

**पक्वं** = பக்குவமாகி,
**பக்வம்**

**ब्रह्मणि** = பிரஹ்மத்தினிடத்தில்,
**ப்3ரஹ்மணி**

**यदा** = எப்பொழுது,
**யதா3**

**लीयते** = லயிக்கிறதோ,
**லீயதே**

**तदा** = அப்பொழுது,
**ததா3**

**स्वतः** = தாஞகவே (வேறு பிரயத்தினத்திற்கு
**ஸ்வதঃ** அவசியமில்லாமல்),

**अद्वय आनन्द रसा अनुभावकः** = இரண்டற்ற ஆனந்த ரஸத்தை
**அத்3வய ஆனந்த3 ரஸா அனுபா4வகঃ** அனுபவிக்கும்படிச் செய்யும்,

**सः** = அந்த,
**ஸঃ**

**समाधिः** = ஸமாதி,
**ஸமாதி4ঃ**

**विकल्प वर्जितः** = எவ்வித கல்பஞயுமற்றது,
**விகல்ப வர்ஜிதঃ** நிர்விகல்ப ஸமாதி (எனப்படும்)

இங்கு மனதின் பக்வமென்பது விபரீத பாவனை முதலான தோஷங்கள் நீங்குவது மனதிற்கு ப்ரஹ்மத்தில் லயமென்பது ஒரு விருத்தியுமில்லாமல் ப்ரஹ்ம மாத்ரமாக இருப்பது. **(364)**

**समाधिनानेन समस्तवासनाग्रन्धेर्विनाशोऽखिलकर्मनाशः ।**
**अन्तर्बहिः सर्वत एव सर्वदा स्वरूपविस्फूर्तिश्यत्नतःस्यात् ॥ ३६५ ॥**

**ஸமாதி⁴னானேன ஸமஸ்தவாஸநாக்³ரந்தே⁴ர்விநாஶோ(அ)கி²லகர்மநாஶঃ ।**
**அந்தர்ப³ஹிঃ ஸர்வத ஏவ ஸர்வதா³ ஸ்வரூபவிஸ்பூ²ர்திஶ்யத்னதঃ ஸ்யாத் ॥365॥**

| | | |
|---|---|---|
| **अनेन** **அனேன** | = | இந்த (நிர்விகல்ப), |
| **समाधिना** **ஸமாதி⁴னா** | = | ஸமாதியினால், |
| **समस्त वासना ग्रथेः** **ஸமஸ்த வாஸனா க்³ரதே²ঃ** | = | (அவித்யையினால் ஏற்பட்ட) எல்லாவித வாஸனைகளாகிற முடிச்சிற்கு, |
| **विनाशः** **விநாஶঃ** | = | பூராவும் நாசமும், |
| **अखिल कर्म नाशः** **அகி²ல கர்ம நாஶঃ** | = | (முன் சேகரிக்கப்பட்டுள்ள) எல்லா கர்மாக்களின் நாசமும், |
| **अन्तः** **அந்தঃ** | = | உள்ளேயும், |
| **बहिः** **ப³ஹிঃ** | = | வெளியிலும், |
| **सर्वतः** **ஸர்வதঃ** | = | எல்லாவற்றிலும், |
| **सर्वदा** **ஸர்வதா³** | = | எப்பொழுதும், |
| **एव** **ஏவ** | = | கூட, |
| **स्वरूप विस्फूर्तिः** **ஸ்வரூப விஸ்பூ²ர்திঃ** | = | ஆத்மஸ்வரூபத்தின் நன்கு பிரகாசமும், |
| **अयत्नतः** **அயத்னதঃ** | = | எவ்வித யத்தினமுமன்னியில், |
| **स्यात्** **ஸ்யாத்** | = | ஏற்படும். |

**(365)**

**श्रुतेः शतगुणं विद्यान्मननं मननादपि ।**
**निदिध्यासं लक्षगुणमनन्तं निर्विकल्पकम् ॥ ३६६ ॥**

**ஶ்ருதேঃ ஶதகு³ணம் வித்³யான்மனனம் மனநாத³பி ।**
**நிதி³த்⁴யாஸம் லக்ஷகு³ணமனந்தம் நிர்விகல்பகம் ॥ 366 ॥**

| | | |
|---|---|---|
| **श्रुतेः** ஶ்ருதேঃ | = | சிரவணத்தைவிட, |
| **मननं** மனனம் | = | மனனமானது, |
| **शतगुणं** ஶதகு³ணம் | = | நூறுபங்கு (பிரயோஜனமுள்ளது என்று), |
| **विद्यात्** வித்³யாத் | = | அறிந்து கொள்ள வேண்டும், |
| **मननात्** மனனுத் | = | மனத்தைக்காட்டிலும், |
| **अपि** அபி | = | நிதித்யாஸனத்தை, |
| **लक्षगुणं** லக்ஷகு³ணம் | = | லக்ஷம் பங்கு (பிரயோஜன முள்ளது என்றும்), |
| **निर्विकल्पकं** நிர்விகல்பகம் | = | நிர்விகல்பக ஸமாதியை, |
| **अनन्तं** அனந்தம் | = | எண்ணற்ற பங்கு (பிரயோஜன முள்ளது என்றும் அறியவேண்டும்) (366) |

**निर्विकल्पक समाधिना स्फुटं ब्रह्मतत्वमवगम्यते ध्रुवम् ।**
**नान्यथा चलतया मनोगतेः प्रत्ययान्तरविमिश्रितं भवेत् ॥ ३६७ ॥**

**நிர்விகல்பக ஸமாதி⁴னு ஸ்பு²டம் ப்³ரஹ்மதத்வமவக³ம்யதே த்⁴ருவம் ।**
**நான்யதா² சலதயா மனேக³தேঃ ப்ரத்யயாந்தரவிமிஸ்ரிதம் ப⁴வேத் ॥ 367 ॥**

| | | |
|---|---|---|
| **निर्विकल्पक समाधिना** நிர்விகல்பக ஸமாதி⁴னு | = | நிர்விகல்பக ஸமாதியினுல், |
| **ब्रह्मतत्वं** ப்³ரஹ்மதத்வம் | = | பிரஹ்மத்தின் தத்வம், |
| **स्फुटं** ஸ்பு²டம் | = | தெளிவாக, |
| **अवगम्यते** அவக³ம்யதே | = | அறியப்படுகிறது, |

| | | |
|---|---|---|
| ध्रुवं<br>த்⁴ருவம் | = | இது நிச்சயம், |
| अन्यथा<br>அன்யதா² | = | வேறு பிரகாரமாக, |
| न<br>ந | = | அறியமுடியாது, |
| मनोगतेः<br>மனோக³தே꞉ | = | மனஸின் போக்கு, |
| चलतया<br>சலதயா | = | சஞ்சலமாயிருப்பதால் (அந்த தத்வம்), |
| प्रत्ययान्तर विमिश्रितं<br>ப்ரத்யயாந்தர விமிஶ்ரிதம் | = | வேறுவித எண்ணங்களுடன் (தேஹம் முதலானது நான் என்பதுபோலுள்ள தோற்றங்களுடன்) நன்கு கலங்கியே, |
| भवेत्<br>ப⁴வேத் | = | இருக்கும். |

(367)

**(அவதாரிகை)** ஆகையால் நிர்விகல்பஸமாதியை அவசியம் அப்யாஸம் செய்ய வேண்டுமென்று முடிக்கிறார்: -

**अतः समाधत्स्व यतेन्द्रियः सन् निरन्तरं शान्तमनाः प्रतीचि ।**
**विध्वंसय ध्वान्तमनाद्यविद्यया कृतं सदेकत्वविलोकनेन ॥ ३६८ ॥**

**அத꞉ ஸமாத⁴த்ஸ்வ யதேந்த்³ரிய꞉ ஸன்**
**நிரந்தரம் ஶாந்தமனா꞉ ப்ரதீசி ।**
**விஷ்வம்ஸய த்⁴வாந்தமநாத்³யவித்³யயா**
**க்ருதம் ஸதே³கத்வவிலோகனேன ॥ 368 ॥**

| | | |
|---|---|---|
| अतः<br>அத꞉ | = | மேலே சொன்ன காரணங்களினால், |
| यतेन्द्रियः<br>யதேந்த்³ரிய꞉ | = | கட்டுப்படுத்தின இந்திரியங்களுடையவனாய், |
| शान्तमनाः<br>ஶாந்தமனா꞉ | = | விருத்திகள் அடங்கின மனஸுள்ளவனாய், |
| सन्<br>ஸன் | = | இருந்து கொண்டு, |
| प्रतीचि<br>ப்ரதீசி | = | உள்ளேயிருக்கும் ஆத்மாவினிடத்தில், |

| | | |
|---|---|---|
| **निरन्तरं** | = | இடைவிடாமல், |
| **நிரந்தரம்** | | |
| **समाधत्स्व** | = | மனஸை நிலைநிறுத்து, |
| **ஸமாத⁴த்ஸ்வ** | | |
| **अनादि अविधया** | = | அனாதியான அவித்யையினால், |
| **அநாதி³ அவித⁴யா** | | |
| **कृतं** | = | உண்டு பண்ணப்பட்டிருக்கும், |
| **க்ருதம்** | | |
| **ध्वान्त** | = | இருட்டை, |
| **த்⁴வாந்த** | | |
| **सत् एकत्व विलोकनेन** | = | ஸத் ஒன்றுதான் உள்ளது என்று |
| **ஸத் ஏகத்வ விலோகனேன** | | ஸாக்ஷாத் தரிப்பதினால், |
| **विष्वंसय** | = | நன்கு போக்கிவிடு. |
| **விஷ்வம்ஸய** | | **(368)** |

## 33. ஸமாதிக்கு ஸாதனங்கள்

**(அவதாரிகை)** அவ்வித நிர்விகல்பக ஸமாதி ஏற்படுவதற்குள்ள ஸாதனங்களை எடுத்துச்சொல்கிறார்: -

**योगस्य प्रथमं द्वारं वाङ्निरोधोऽपरिग्रहः ।**
**निराशा च निरीहा च नित्यमेकान्तशीलता ॥ ३६९ ॥**

**யோக³ஸ்ய ப்ரத²மம் த்³வாரம் வாங்நிரோதோ⁴(அ)பரிக்³ரஹ꞉ ।**
**நிராஶா ச நிரீஹா ச நித்யமேகாந்தஶீலதா ॥ 369 ॥**

| | | |
|---|---|---|
| **योगस्य** | = | (மனோவிருத்திகளை அடக்குவதான) யோகத்திற்கு, |
| **யோக³ஸ்ய** | | |
| **प्रथमं** | = | முதலாவது, |
| **ப்ரத²மம்** | | |
| **द्वारं** | = | வாயிலாயிருப்பது, |
| **த்³வாரம்** | | |
| **वाक् निरोध:** | = | பேச்சைக் கட்டுப்படுத்துவது, |
| **வாக் நிரோத⁴꞉** | | |
| **अपरिग्रह:** | = | (சரீர ஸ்திதிக்கு அவசியமானதைத் தவிர வேறு) |
| **அபரிக்³ரஹ꞉** | | எந்த பதார்த்தத்தையும் வைத்துக் கொள்ளாமலிருப்பதும், |

| | | |
|---|---|---|
| **निराशा च** | = | ஆசையற்றிருப்பதும், |
| **நிராஶா ச** | | |
| **निरीहा च** | = | எவ்வித வெளி வியாபாரமற்றிருப்பதும், |
| **நிரீஹா ச** | | |
| **नित्यं** | = | எப்பொழுதும், |
| **நித்யம்** | | |
| **एकान्तशीलता** | = | (ஜனங்களில்லாத இடத்தில்) தனித்தேயிருக்கும் |
| **ஏகாந்தஶீலதா** | | பழக்கத்துடனிருப்பதும். (யோகத்திற்கு ஸாதனங்கள்) |

மௌனத்தைக் கைக்கொள்ளாமல் அதிகமாகப் பேசினுல் அடக்கமுடியாமல் மனோவிருத்திகள் வளரும். தேவைக்கு அதிகமாக பொருள்களை சேகரித்தால் அதை காப்பாற்றுவதிலேயே மனம் ஈடுபடும். ஆசையும் கர்மாக்களும் ஜனக் கூட்டமும் மனதிற்கு விக்ஷேபத்தைக்கொடுக்கும். **(369)**

**(அவதாரிகை)** ஏகாந்த வாஸத்தில் சப்தம் முதலான விஷயங்களில்லா மையால் காது முதலான இந்திரியங்கள் வெளியில் போகாமல் அடங்கும். இந்திரியங்கள் அடங்கினுல் மனஸ் ஒடுங்கி ஆத்மாபிமுகமாக ஆகும் அதனுல் நான் என்ற வாஸனைகள் குறையும், வாஸனையற்றுப்போனுல் ஆனந்தானுபவம் ஏற்படும், என்பதை வர்ணிக்கிறுர்: -

**एकान्तस्थितिरिन्द्रियो परमणे हेतुर्दमश्चेतसः**
**संरोधे करणं शमेन विलयं यायादहंवासना |**
**तेनानन्दरसानुभूतिरचला ब्राह्मी सदा योगिन-**
**स्तस्माच्चित्तनिरोध एव सततं कार्यः प्रयत्नान्मुनेः ॥ ३७० ॥**

**ஏகாந்தஸ்தி²திரிந்த்³ரியோ பரமணே ஹேதுர்த³மஶ்சேதஸ:**
**ஸம்ரோதே⁴ கரணம் ஶமேன விலயம் யாயாத³ஹம்வாஸனு ।**
**தேனுனந்த³ரஸானுபூ⁴திரசலா ப்³ராஹ்மீ ஸதா³ யோகி³ன-**
**ஸ்தஸ்மாச்சித்தநிரோத⁴ ஏவ ஸததம் கார்ய: ப்ரயத்னுன்முனே: ॥ 370 ॥**

| | | |
|---|---|---|
| **एकान्त स्थितिः** | = | தனித்து இருப்பது, |
| **ஏகாந்த ஸ்தி²தி:** | | |
| **इन्द्रिय उपरमणे** | = | இந்திரியங்கள் அடங்குவதில், |
| **இந்த்³ரிய உபரமணே** | | |
| **हेतुः** | = | காரணமாகும், |
| **ஹேது:** | | |
| **दमः** | = | இந்திரியங்களை அடக்குதல், |
| **த³ம:** | | |

| | | |
|---|---|---|
| **चेतसः**<br>**சேதஸ:** | = | மனஸை, |
| **संरोधे**<br>**ஸம்ரோதே⁴** | = | அடக்குவதில், |
| **करणं**<br>**கரணம்** | = | உபயோகப்படும் கருவி, |
| **शमेन**<br>**ஶமேன** | = | மனஸ் அடங்குவதினுல், |
| **अहं वासना**<br>**அஹம் வாஸனு** | = | (தேஹம் முதலானதுகளில்) "நான்" என்ற வாஸஊன, |
| **विलयं**<br>**விலயம்** | = | லயத்தை, |
| **यायात्**<br>**யாயாத்** | = | அடையும், |
| **तेन**<br>**தேன** | = | அதினுல் (அப்படி வாஸஊன லயமடைவதால்), |
| **ब्राह्मी**<br>**ப்³ராஹ்மீ** | = | பிரஹ்ம விஷயமான, |
| **आनन्द रसा अनुभूतिः**<br>**ஆனந்த³ ரஸா அனுபூ⁴தி:** | = | ஆனந்த ரஸத்தின் அனுபவம், |
| **योगिनः**<br>**யோகி³ன:** | = | யோகிக்கு, |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **अचला**<br>**அசலா** | = | அசைவற்று ஸ்திரமாக (ஏற்படும்), |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |
| **चित्त निरोधः**<br>**சித்த நிரோத⁴:** | = | மனஸை அடக்குவது, |
| **एव**<br>**ஏவ** | = | தான், |
| **मुनेः**<br>**முனே:** | = | யோகிக்கு, |
| **सततं**<br>**ஸததம்** | = | எப்பொழுதும், |

| | | |
|---|---|---|
| **प्रयत्नात्** ப்ரயத்னாத் | = | பிரயாஸை எடுத்துக்கொண்டு, |
| **कार्यः** கார்ய: | = | செய்யவேண்டிய கார்யம். |

(370)

(**அவதாரிகை**) பேச்சை அடக்குவதிலிருந்து ஆரம்பித்து செய்ய வேண்டிய அப்பியாஸத்தை கடோபநிஷத்தில் கண்ட முறையை அனுஸரித்து எடுத்துச் சொல்கிறர்: -

**वाचं नियच्छात्मनि तं नियच्छ बुद्धौ धियं यच्छ च बुद्धिसाक्षिणि ।**
**तं चापि पूर्णात्मनि निर्विकल्पे विलाप्य शान्तिं परमां भजस्व ॥ ३७१ ॥**

**வாசம் நியச்சா²த்மனி தம் நியச்ச² பு³த்³தௌ⁴ தி⁴யம் யச்ச²**
**ச பு³த்³தி⁴ஸாக்ஷிணி ।**
**தம் சாபி பூர்ணாத்மனி நிர்விகல்பே விலாப்ய ஶாந்திம்**
**பரமாம் ப⁴ஜஸ்வ ॥ 371 ॥**

| | | |
|---|---|---|
| **वाचं** வாசம் | = | வாக் இந்திரியத்தை, |
| **आत्मनि** ஆத்மனி | = | மனஸிற்குள், |
| **नियच्छ** நியச்ச² | = | அடக்கிக்கொள். (பேசுவதை நிறுத்திக்கொண்டு மனஸில் எண்ணுவதோடு இருந்து வா, அதன் பிறகு), |
| **तं** தம் | = | அந்த மனஸை, |
| **बुद्धौ** பு³த்³தௌ⁴ | = | புத்தியில், |
| **नियच्छ** நியச்ச² | = | அடக்கிக் கொள் (பலவிதமாக ஆலோசிப்பதை விட்டு தீர்மானத்துடன் நின்றுவிடு. அதன் பிறகு) |
| **धियं च** தி⁴யம் ச | = | புத்தியையும், |
| **बुद्धि साक्षिणि** பு³த்³தி⁴ ஸாக்ஷிணி | = | புத்திக்கும் ஸாக்ஷியான ('த்வம்' பதத்தின் லக்ஷ்யார்த்தமான) பிரத்யகாத்ம சைதன்யத்தில், |
| **यच्छ** யச்ச² | = | அடக்கிவிடு, |
| **तं च अपि** தம் ச அபி | = | அந்த ஸாக்ஷி சைதன்யத்தையும் கூட, |

| | | |
|---|---|---|
| **निर्विकल्पे** **நிர்விகல்பே** | = | எல்லா கல்பனையுமற்றதான, |
| **पूर्ण आत्मनि** **பூர்ண ஆத்மனி** | = | நிறைந்ததான ('தத்' பதத்தின் லக்ஷ்யமான) பிரஹ்ம சைதன்யத்தில், |
| **विलाप्य** **விலாப்ய** | = | நன்கு லயம் செய்து (இரண்டு சைதன்யங்களும் வெவ்வேறல்ல, ஒன்றுதான் என்று அறிந்து), |
| **परमां** **பரமாம்** | = | உத்தமமான, |
| **शान्तिं** **ஶாந்திம்** | = | (ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையாகிற) சாந்தியை, |
| **भजस्व** **ப⁴ஜஸ்வ** | = | அடைந்துவிடு. |

பசு முதலான பிராணிகளுக்குப்போல் மௌனம் உறுதிப்பட்டபின் மனதை புத்தியில் அடக்கவேண்டும். கையில் உளி இல்லாத சமயம் தச்சன் வேலை செய்யாமல் சும்மா இருப்பதுபோல் வேலை செய்யும் ஸ்வபாவமுள்ள போதிலும் புத்தி மனோவியாபாரம் என்ற கருவி இல்லாததால் வெளி வியாபாரங்களிலிருந்து ஒதுங்கி சாந்தமாகிவிடுகிறது. **(371)**

**देहप्राणेन्द्रियमनोबुद्ध्यादिभिरुपाधिभिः ।**
**यैर्यैर्वृत्तेः समायोगस्तत्तद्भावोऽस्य योगिनः ॥ ३७२ ॥**

**தே³ஹப்ராணேந்த்³ரியமனோபு³த்³த⁴யாதி³பி⁴ருபாதி⁴பி⁴: ।**
**யையைர்வ்ருத்தே: ஸமாயோக³ஸ்தத்தத்³பா⁴வோ(அ)ஸ்ய யோகி³ன: ॥ 372 ॥**

**तन्निवृत्या मुनेः सम्यक्सर्वोपरमणं सुखम् ।**
**सन्दृश्यते सदानन्दरसानुभवविप्लवः ॥ ३७३ ॥**

**தந்நிவ்ருத்யா முனே: ஸம்யக்ஸர்வோபரமணம் ஸுக²ம் ।**
**ஸந்த்³ருஶ்யதே ஸதா³னந்த³ரஸானுப⁴வவிப்லவ: ॥ 373 ॥**

| | | |
|---|---|---|
| **अस्य** **அஸ்ய** | = | இந்த ஆத்மாவிற்கு, |
| **देह प्राण इन्द्रिय मनोबुद्ध्यादिभिः** **தே³ஹ ப்ராண இந்த்³ரிய மனோபு³த்³த⁴யாதி³பி⁴:** | = | தேஹம் (அன்னமயகோசம்) பிராணன் (பிராணமய கோசம்) இந்திரியம் (கர்மேந்திரியங்கள் பிராணமய கோசத்திலும், ஞானேந்திரியங்கள் மனோமய விக்ஞானமய கோசங்களிலும் சேரும்) மனஸ் (மனோமயகோசம்) - புத்தி (விக்ஞானமய கோசம்) (ஆனந்தமயகோசம்) முதலான, |

| | | |
|---|---|---|
| **उपाधिभिः**<br>**உபாதி⁴பி⁴:** | = | உபாதிகளுடன், |
| **यैः यैः**<br>**யை: யை:** | = | எந்த எந்த கோசங்களுடன், |
| **वृत्तेः**<br>**வ்ருத்தே:** | = | மனோ விருத்திக்கு, |
| **समायोगः**<br>**ஸமாயோக³:** | = | ஸம்பந்தம் (ஏற்படுகிறதோ), |
| **तत् तत् भावः**<br>**தத் தத் பா⁴வ:** | = | அது அதுவாக இருக்கும் தன்மை<br>(ஏற்பட்டு விடுகிறது), |
| **मुनेः**<br>**முனே:** | = | ஐந்து கோசங்களும் ஆத்மாவல்ல என்று<br>யுக்திகளால் சிந்தனம் செய்கின்ற, |
| **योगिनः**<br>**யோகி³ன:** | = | மனோ விருத்திகளை யடக்கும் யோகிக்கு, |
| **तत् निवृत्या**<br>**தத் நிவ்ருத்யா** | = | அது (உபாதியாகிற கோசம்) விலகிவிடுவதினால், |
| **सर्व उपरमणं**<br>**ஸர்வ உபரமணம்** | = | (அவைகளுடன் ஸம்பந்தத்தினால் ஏற்படும்<br>ஸுக துக்கம்) எல்லாம் அடங்கும் நிலையான, |
| **सुखं**<br>**ஸுக²ம்** | = | ஸ்வரூப ஆனந்தம், |
| **सम्यक्**<br>**ஸம்யக்** | = | நன்கு (ஆவிர்பவிக்கும்), |
| **सत् आनन्दरस अनुभवविप्लवः**<br>**ஸத் ஆனந்த³ரஸ அனுப⁴வவிப்லவ:** | = | எப்பொழுதும். இருக்கக்கூடிய ஆனந்த ரஸத்தின்<br>அனுபவத்தினுடைய பெறுக்கு, |
| **सन्दृश्यते**<br>**ஸந்த்³ருஸ்யதே** | = | நன்கு விளங்கும். |

ஸ்படிகம் ஸ்வச்சமாக வெளுப்பாக இருந்தபோதிலும் பக்கத்திலுள்ள பொருள்களின் நிறத்தையொட்டி அந்தந்த நிறமுள்ளதாகக் காணப்படுகிறது இதுபோல ஆத்மாவுக்கும் அன்னமயம் முதலான கோசங்களுடன் மனோவிருத்திகளின் மூலமாக ஸம்பந்தம் ஏற்பட்டு கோச தர்மங்களை தன்னிடமிருப்பதாக எண்ணி பலவித துன்பங்களை யனுபவிக்கிறது. மனோவிருத்திகளையடக்கும் யோகிக்கு கோசங்களுடன் ஸம்பந்தமில்லாததால் அவைகளில் நான் என்ற எண்ணம் நீங்கி எல்லாத் துன்பங்களும் விலகி ஸதா ஆநந்தரஸானுபவத்தில் மூழ்குகிறான் கடும் கோடையில் ஆழமுள்ள கங்காநதியில் மூழ்குபவனுக்கு தாபமெல்லாம் விலகி உள்ளும் வெளியும் ஸுகம் ஏற்படுவதுபோல் யோகிக்கும் ஆனந்தானுபவம் நிறைந்திருக்கும். **(372-373)**

**(அவதாரிகை)** 369 - வது சுலோகத்தில் 'நிராசா' (ஆசையற்றிருத்தல்) என்ற வைராக்யத்தை யோகத்திற்கு முக்ய ஸாதனமாகக் கூறினர் 177 - வது சுலோகத்தில் தீவ்ரதமமான, உறுதியான வைராக்யம் மனசுத்திக்கு காரணமென்று கூறப்பட்டது. இத்தகைய அந்தரங்கஸாதனமான வைராக்யத்தை 6 சுலோகங்களால் நிரூபணம் செய்கிறுர்: -

**अन्तस्त्यागो बहिस्त्यागो विरक्तस्यैव युज्यते ।**
**त्यजत्यन्तर्बहि:सङ्गं विरक्तस्तु मुमुक्षया ॥ ३७४ ॥**

**அந்தஸ்த்யாகோ³ ப³ஹிஸ்த்யாகோ³ விரக்தஸ்யைவ யுஜ்யதே ।**
**த்யஜத்யந்தர்ப³ஹிঃஸங்க³ம் விரக்தஸ்து முமுக்ஷயா ॥ 374 ॥**

**विरक्तस्य** = ஆசையற்றவனுக்கு,
**விரக்தஸ்ய**
**एव** = தான்,
**ஏவ**
**अन्तस्त्याग:** = உள்ளிருப்பவைகளின் (அஹங்காரம் முதல்
**அந்தஸ்த்யாக³ঃ** தேஹம் வரையுள்ளவைகளில் 'நான்' என்கிற எண்ணத்தின்) பரித்யாகமோ,
**बहिस्त्याग:** = வெளியிலிருப்பவைகளின் (புத்திரமித்ராதி
**ப³ஹிஸ்த்யாக³ঃ** விஷயங்களில் "என்னுடையது" என்கிற எண்ணத்தின்) பரித்யாகமோ,
**युज्यते** = ஏற்படக் கூடியதாகும்,
**யுஜ்யதே**
**विरक्त: तु** = ஆசையற்றவன் தான்,
**விரக்தঃ து**
**मुमुक्षया** = மோக்ஷமடைய வேண்டுமென்ற ஆவலினுல்,
**முமுக்ஷயா**
**अन्तः र्बहिः सङ्गं** = உள்ளேயும் வெளியிலும் பற்றுதலை,
**அந்தঃ ர்ப³ஹிঃ ஸங்க³ம்**
**त्यजति** = விட்டு விடுவான்.
**த்யஜதி** **(314)**

**(அவதாரிகை)** இவ்விஷயத்தையே இன்னமும் தெளிவாகச் சொல்கிறுர்: -

**बहिस्तु विषयैसङ्गस्तथाऽन्तरहमादिभि: ।**
**विरक्त एव शक्नोति त्यक्तुं ब्रह्मणि निष्ठित: ॥ ३७५ ॥**

**ப³ஹிஸ்து விஷயைஸங்க³ஸ்ததா²(அ)ந்தரஹமாதி³பி⁴ঃ ।**
**விரக்த ஏவ ஶக்னோதி த்யக்தும் ப்³ரஹ்மணி நிஷ்டி²தঃ ॥ 375 ॥**

| | | |
|---|---|---|
| **सङ्गः** | = | பற்றுதல் என்பது, |
| **ஸங்க³꞉** | | |
| **बहिः तु** | = | வெளியிலோ, |
| **ப³ஹிஸ்து** | | |
| **विषयैः** | = | விஷயங்களுடன், |
| **விஷயை꞉** | | |
| **तथा** | = | அப்படியே, |
| **ததா²** | | |
| **अन्तः** | = | உள்ளே, |
| **அந்த꞉** | | |
| **अहं आदिभिः** | = | அஹங்காரம் முதலானவைகளுடன். (இவ்வித பற்றுதலை) |
| **அஹம் ஆதி³பி⁴꞉** | | |
| **त्यक्तुं** | = | விட்டுவிடுவதற்கு, |
| **த்யக்தும்** | | |
| **ब्रह्मणि** | = | பிரஹ்மத்தினிடத்தில், |
| **ப்³ரஹ்மணி** | | |
| **निष्ठितः** | = | நிலைத்திருக்கும், |
| **நிஷ்டி²த꞉** | | |
| **विरक्तः** | = | வைராக்யமுள்ளவன், |
| **விரக்த꞉** | | |
| **एव** | = | தான், |
| **ஏவ** | | |
| **शक्नोति** | = | சக்தியுள்ளவனாவான். |
| **ஶக்னோதி** | | |

(**அவதாரிகை**) பிரஹ்மத்தில் நிலைத்திருப்பதற்கு வைராக்கியம் அவசியமே யானாலும் அதுமாத்திரம் போதாது. ஆத்ம அநாத்ம விவேசனம் செய்து ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு அறிந்து அனுபவிக்கும் தன்மையும் அவசியம் என்பதை, கீழே இருக்கும் ஒரு பக்ஷி மேல் மாடிக்குப் பறந்துபோக வேண்டுமானால் எப்படி ஒரு இரக்கையுடன் இருந்தால் போதாது, இரண்டு இரக்கைகளையும் உபயோகப் படுத்தினால் தான் ஸாத்தியப்படுமோ அது போல என்ற திருஷ்டாந்தத்தை சொல்லி விளக்கிக் காட்டுகிறார்: -

**वैराग्यबोधौ पुरुषस्य पक्षिवत्पक्षौ विजानीहि विचक्षण त्वम् ।**
**विमुक्तिसौधाग्रलताधिरोहणं ताभ्यां विना नान्यतरेण सिध्यति ॥ ३७६ ॥**

**வைராக்³யபோ³தௌ⁴ புருஷஸ்ய பக்ஷிவத்பக்ஷௌ**
**விஜானீஹி விசக்ஷண த்வம் ।**
**விமுக்திஸௌதா⁴க்³ரலதாதி⁴ரோஹணம் தாப்⁴யாம்**
**வினா நான்யதரேண ஸித்⁴யதி ॥ 376 ॥**

| | | |
|---|---|---|
| **पक्षौ**<br>**பக்ஷௌ** | = | இரண்டு இரக்கைகளும், |
| **पक्षिवत्**<br>**பக்ஷிவத்** | = | பக்ஷிக்கு எப்படியோ அதேபோல, |
| **पुरुषस्य**<br>**புருஷஸ்ய** | = | மோக்ஷமடைய விரும்பும் மனிதனுக்கு, |
| **वैराग्य बोधौ**<br>**வைராக்³ய போ³தௌ⁴** | = | வைராக்கியமும் ஆத்மானுபவ ஞானமும் என்று, |
| **विचक्षण**<br>**விசக்ஷண** | = | ஸாமர்த்திய முள்ளவனே, |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **विजानीहि**<br>**விஜானீஹி** | = | நன்கு தெரிந்துகொள், |
| **ताभ्यां**<br>**தாப்⁴யாம்** | = | அவ்விரண்டும், |
| **विना**<br>**வினா** | = | சேர்ந்திராமல், |
| **अन्यतरेण**<br>**அன்யதரேண** | = | அவைகளில் ஒன்றினால் மாத்திரம், |
| **विमुक्ति सौधाग्रल आधिरोहणं**<br>**விமுக்தி ஸௌதா⁴க்³ரல ஆதி⁴ரோஹணம்** | = | மோக்ஷமாகிற மாளிகையின் உச்சியிலுள்ள தளத்தை ஏறியடைவது, |
| **न सिध्यति**<br>**ந ஸித்⁴யதி** | = | ஸாத்தியப்படாது. |

**अत्यन्तवैराग्यवतः समाधिः समाहितस्यैव दृढप्रबोधः ।**
**प्रबुद्धतत्त्वस्य हि बन्धमुक्तिर्मुक्तात्मनो नित्यसुखानुभूतिः ॥ ३७७ ॥**

**அத்யந்தவைராக்³யவத: ஸமாதி⁴: ஸமாஹிதஸ்யைவ**
**த்³ருட⁴ப்ரபோ³த⁴: ।**
**ப்ரபு³த்³த⁴தத்த்வஸ்ய ஹி ப³ந்த⁴முக்திர்முக்தாத்மனோ**
**நித்யஸுகா²னுபூ⁴தி: ॥ 377 ॥**

| | | |
|---|---|---|
| **अत्यन्तवैराग्यवतः**<br>**அத்யந்தவைராக்³யவத:** | = | (மறுபடியும் அநாத்ம பதார்த்தங்ளால் இழுக்கமுடியாதபடி) தீவிரமான வைராக்கியத்தை யுடையவனுக்குத்தான்), |
| **समाधिः**<br>**ஸமாதி⁴:** | = | ஸமாதி (பிரஹ்மத்தில் நன்கு நிலைத்தல்) (ஸித்திக்கும்), |

**समाहितस्य** = பிரஹ்மத்தில் நன்கு நிலைத்த மனஸுள்ளவனுக்கு,
**ஸமாஹிதஸ்ய**
**एव** = தான்,
**ஏவ**
**दृढप्रबोध:** = (பிரஹ்மத்தைத் தவிர விஷயங்களில் போகாமல்)
**த்³ருட⁴ப்ரபோ³த⁴:** திடமான நல்ல ஞானம் (ஏற்படும்),
**प्रबुद्ध तत्त्वस्य** = பிரஹ்மதத்வத்தை நன்கு அறிந்தவனுக்கு,
**ப்ரபு³த்³த⁴ தத்த்வஸ்ய**
**हि** = அல்லவா,
**ஹி**
**बन्धमुक्ति:** = (அனாத்மாக்களுடன் சேர்ந்து) கட்டுப்படுவதிலி
**ப³ந்த⁴முக்தி:** ருந்து விடுதலை (ஏற்படும்),
**मुक्त आत्मन:** = அவ்விதம் விடுபட்ட மனஸை யுடையவனுக்கு
**முக்த ஆத்மன:** (த்தான்),
**नित्यसुख अनुभूति:** = சாசுவதமான ஆனந்தத்தின் அனுபவம் ஏற்படும்.
**நித்யஸுக² அனுபூ⁴தி:** **(377)**

**वैराग्यान्न परं सुखस्य जनकं पश्यामि वश्यात्मन-**
**स्तच्चेच्छुद्धतरात्मबोधसहितं स्वाराज्यसाम्राज्यधुक् ।**
**एतद्द्वारमजस्रमुक्तियुवतेर्यस्मात्त्वमस्मात्परं**
**सर्वत्रास्पृहया सदात्मनि सदा प्रज्ञां कुरु श्रेयसे ॥ ३७८ ॥**

**வைராக்³யான்ன பரம் ஸுக²ஸ்ய ஜனகம் பஶ்யாமி வஶ்யாத்மன-**
**ஸ்தச்சேச்சு²த்³த⁴தராத்மபோ³த⁴ஸஹிதம் ஸ்வாராஜ்யஸாம்ராஜ்யது⁴க் ।**
**ஏதத்³த்³வாரமஜஸ்ரமுக்தியுவதேர்யஸ்மாத்த்வமஸ்மாத்பரம்**
**ஸர்வத்ராஸ்ப்ருஹயா ஸதா³த்மனி ஸதா³ ப்ரஜ்ஞாம் குரு ஶ்ரேயஸே ॥ 378 ॥**

**वश्यात्मन:** = தேஹம், இந்திரியம், மனஸ் இவைகளை நன்கு
**வஶ்யாத்மன:** வசப்படுத்திக்கொண்டிருப்பவருக்கு,
**सुखस्य** = ஸுகத்தை,
**ஸுக²ஸ்ய**
**जनकं** = உண்டுபண்ணக் கூடியது,
**ஜனகம்**
**वैराग्यात्** = வைராக்கியத்தைவிட,
**வைராக்³யாத்**
**परं** = வேறு (இருப்பதாக),
**பரம்**

| | | |
|---|---|---|
| **न पश्यामि**<br>**ந பஶ்யாமி** | = | நான் காணவில்ஐல, |
| **तत्**<br>**தத்** | = | அந்த வைராக்கியம், |
| **शुतर आत्मबोध सहितं चेत्**<br>**ஶுதர ஆத்மபோ³த⁴ ஸஹிதம் சேத்** | = | (அஞுத்மாவுடன் கலக்காமல்) வெகு சுத்தமான ஆத்மதத்வ ஞானத்துடன் சேர்ந்திருக்கக் கூடுமாஞல், |
| **स्वाराज्य सांराज्यधुक्**<br>**ஸ்வாராஜ்ய ஸாம்ராஜ்யது⁴க்** | = | தனக்குத் தானே அரசஞுயிருக்கும் தன்மை (பிறருக்குக் கட்டுப்படாது இருத்தல்) எல்லாருக்கும் மேல் அரசஞுயிருக்கும் தன்மை (எல்லோரையும் தான் அடக்கியாள் வது) இவைகஐக் கறக்கும் (உண்டுபண்ணும்). ஆசையுள்ளவன் விஷயங்க ஐத் தேடிச்சென்று பிறருக்குக் கட்டுப்படுவான் வைராக்யமுள்ளவன் தேவையில்லாததால் யாருக்கும் கட்டுப்படமாட்டான், |
| **एतत्**<br>**ஏதத்** | = | இந்த வைராக்கியமானது, |
| **अजस्रमुक्ति युवतेः**<br>**அஜஸ்ரமுக்தி யுவதேः** | = | நித்தியமான முக்தியென்ற ஸ்திரீயை அடைவதற்கு, |
| **द्वारं**<br>**த்³வாரம்** | = | வாசற்படி என்பது, |
| **यस्मात्**<br>**யஸ்மாத்** | = | எதிஞலோ, |
| **अस्मात्**<br>**அஸ்மாத்** | = | அதிஞல், |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **श्रेयसे**<br>**ஶ்ரேயஸே** | = | உன்னுடைய உத்தமமான நன்மையின் பொருட்டு, |
| **सर्वत्र**<br>**ஸர்வத்ர** | = | எல்லா பதார்த்தங்களிலும், |
| **परं**<br>**பரம்** | = | மிகவும், |
| **अस्पृहया**<br>**அஸ்ப்ருஹயா** | = | ஆசையற்று, |
| **सत् आत्मनि**<br>**ஸத் ஆத்மனி** | = | ஸத்தாகிய ஆத்ம ஸ்வரூபத்தில், |

| | | |
|---|---|---|
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **प्रज्ञां**<br>**ப்ரஜ்ஞாம்** | = | (ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை உண்டுபண்ணக்கூடிய) நிர்விகல்பக ஸமாதியை, |
| **कुरु**<br>**குரு** | = | செய். |

ஆஸநம், பிராணுயாமம் முதலான ஹடயோக முறைகளைச் செய்து சரீரத்தை வசப்படுத்தியபோதிலும் வைராக்கியம் இல்லாவிடில் ஸுகம் ஏற்படாது. யோகிகளும்கூட அணிமா முதலான ஸித்திகளில் மனதைச் செலுத்திஞல் பந்தம்தான் உறுதியாகும். ஹிரண்யகசிபு முதலான அஸுரர்கள் முதலில் சரீரம், இந்திரியம், மனம் முதலானவைகளை அடக்கி கடும் தவம் செய்தபோதிலும் வைராக்கியம் இல்லாததால் விஷய போகங்களில் ஈடுபட்டு அழிந்துபோனுர்கள் என்பதைப் புராணங்களில் காண்கிறேம். பசி, தாகத்தை மறந்து உடல் அஸ்தி மாத்ரமாக ஆகி அதில் எறும்பு ஊறின போதிலும் பக்ஷிகள் கூடுகட்டியபோதிலும் அதைக்கண்டு கலங்காமல் தவத்தில் ஈடுபட்டிருந்தார்கள் என்றுல் அவர்கள் சரீரத்தை வசப்படுத்தியவர்கள் என்பதில் என்ன ஸந்தேஹம்? தேஹத்தை வசப்படு த்தாதவனுக்கு ஒருக்காலும் வைராக்யம் ஏற்படாது. **(378)**

**आशां छिन्धि विषोपमेषु विषयेष्वेषैव मृत्योः सृति-**
**स्त्यक्त्वा जातिकुलाश्रमेष्वभिमतिं मुञ्चातिदूरात्क्रियाः ।**
**देहादावसति त्यजात्मधिषणां प्रज्ञां कुरुष्वात्मनि**
**त्वं द्रष्टास्यमलोऽसि निर्द्वयपरब्रह्मासि यद्वस्तुतः ॥ ३७९ ॥**

**ஆஶாம் சி²ந்தி⁴ விஷோபமேஷு விஷயேஷ்வேஷைவ ம்ருத்யோ꞉ ஸ்ருதி-**
**ஸ்த்யக்த்வா ஜாதிகுலாஶ்ரமேஷ்வபி⁴மதிம் முஞ்சாதிதூ³ராத்க்ரியா꞉ ।**
**தே³ஹாதா³வஸதி த்யஜாத்மதி⁴ஷணாம் ப்ரஜ்ஞாம் குருஷ்வாத்மனி**
**த்வம் த்³ரஷ்டாஸ்யமலோ(அ)ஸி நிர்த்³வயபரப்³ரஹ்மாஸி யத்³வஸ்துத꞉ ॥ 379 ॥**

| | | |
|---|---|---|
| **विषोपमेषु**<br>**விஷோபமேஷு** | = | விஷத்திற்கு ஸமானமாயிருக்கிற, |
| **विषयेषु**<br>**விஷயேஷு** | = | விஷயங்களில், |
| **आशां**<br>**ஆஶாம்** | = | ஆசையை, |
| **छिन्धि**<br>**சி²ந்தி⁴** | = | அறுத்துவிடு, |
| **एषा**<br>**ஏஷா** | = | இந்த ஆசை, |

| | | |
|---|---|---|
| **एव**<br>**ஏவ** | = | தான், |
| **मृत्योः**<br>**ம்ருத்யோ:** | = | ஸ்வஸ்வரூபத்திலிருந்து நழுவிவிடுவது என்ற மிருத்யுவிற்கு, |
| **सृतिः**<br>**ஸ்ருதி:** | = | மார்க்கம், |
| **जाति कुल आश्रमेषु**<br>**ஜாதி குல ஆஶ்ரமேஷு** | = | (சரீரத்தையொட்டியிருக்கும்) ஜாதி குலம் ஆசிரமம் இவைகளில், |
| **अभिमतिं**<br>**அபி⁴மதிம்** | = | அபிமானத்தை, |
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | விட்டுவிட்டு (அவ்வபிமானத்தினுல் ஏற்பட்டிருக்கும் எல்லாவித), |
| **क्रियाः**<br>**கியா:** | = | கார்யங்களையும், |
| **अतिदूरात्**<br>**அதிதூ³ராத்** | = | வெகு தூரத்திலேயே, |
| **मुञ्च**<br>**முஞ்ச** | = | விட்டுவிடு, |
| **असति**<br>**அஸதி** | = | ஸத் இல்லாத (பொய்யான), |
| **देहादौ**<br>**தே³ஹாதௌ³** | = | தேஹம் முதலானதில், |
| **आत्मधिषणां**<br>**ஆத்மதி⁴ஷணும்** | = | ஆத்மாவென்கிற எண்ணத்தை, |
| **त्यज**<br>**த்யஜ** | = | விட்டுவிடு, |
| **यत्**<br>**யத்** | = | எந்தக் காரணத்தினுல், |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **वस्तुतः**<br>**வஸ்துத:** | = | வாஸ்தவமாய், |
| **द्रष्टा**<br>**த்³ரஷ்டா** | = | பார்க்கிறவனுக, |
| **असि**<br>**அஸி** | = | இருக்கிறுயோ, |

**अमल:** = எவ்வித தோஷமுமற்றவனுய்,
**அமல:**
**असि** = இருக்கிருயோ,
**அஸி**
**निर्द्वय परब्रह्म** = இரண்டற்ற மேலான பிரஹ்மமாக,
**நிர்த்³வய பரப்³ரஹ்ம**
**असि** = இருக்கிறாயோ (அதினால்),
**அஸி**
**आत्मनि** = ஆத்மாவினிடத்திலேயே,
**ஆத்மனி**
**प्रज्ञां** = திடமான ஞானத்தை ((ஸமாதி நிஜலயை),
**ப்ரஜ்ஞாம்**
**कुरुष्व** = செய்துகொள்.
**குருஷ்வ** **(379)**

(அவதாரிகை) அவ்வித ஆத்ம நிஷ்டை ஏற்பட்டால் பிரஹ்மானந்த அனுபவம் ஏற்படுமென்பதைச் சொல்கிறுர்: -

**लक्ष्ये ब्रह्मणि मानसं दृढतरं संस्थाप्य बाह्येन्द्रियं**
**स्वस्थाने विनिवेश्य निश्चलतनुश्चोपेक्ष्य देहस्थितिम् ।**
**ब्रह्मात्मैक्यमुपेत्य तन्मयतया चाखण्डवृत्त्याऽनिशं**
**ब्रह्मानन्दरसं पिबात्मनि मुदा शून्यैः किमन्यैर्भ्रमैः ॥ ३८० ॥**

**லக்ஷ்யே ப்³ரஹ்மணி மானஸம் த்³ருட⁴தரம் ஸம்ஸ்தா²ப்ய பா³ஹ்யேந்த்³ரியம்**
**ஸ்வஸ்தா²னே விநிவேஶ்ய நிஶ்சலதனுஶ்சோபேக்ஷ்ய தே³ஹஸ்தி²திம் ।**
**ப்³ரஹ்மாத்மைக்யமுபேத்ய தன்மயதயா சாக²ண்ட³வ்ருத்த்யா(அ)நிஶம்**
**ப்³ரஹ்மானந்த³ரஸம் பிபா³த்மனி முதா³ ஶூன்யை: கிமன்யைர்ப்⁴ரமை: ॥ 380 ॥**

**लक्ष्ये** = உத்தேசமான,
**லக்ஷ்யே**
**ब्रह्मणि** = பிரஹ்மத்தினிடத்தில்,
**ப்³ரஹ்மணி**
**मानसं** = மனஸை,
**மானஸம்**
**दृढतरं** = வெகு திடமாக,
**த்³ருட⁴தரம்**
**संस्थाप्य** = நன்கு நிறுத்தி,
**ஸம்ஸ்தா²ப்ய**

| | | |
|---|---|---|
| बाह्येन्द्रियं<br>பா³ஹ்யேந்த்³ரியம் | = | (கர்மேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள் ஆகிய) வெளி இந்திரியங்களை, |
| स्वस्थाने<br>ஸ்வஸ்தா²னே | = | அததற்கு சொந்தமான இடமாகிய கோளகங்களிலேயே, |
| विनिवेश्य<br>விநிவேஶ்ய | = | (வெளியில் போகவிடாமல்) நன்கு இருக்கும்படிச் செய்து, |
| देहस्थितिं<br>தே³ஹஸ்தி²திம் | = | பிராரப்தகர்மா சரீரத்தைக் காப்பாற்றும் என்ற உறுதியால் தேஹத்தினுடைய ஸம்ரக்ஷணையை, |
| उपेक्ष्य च<br>உபேக்ஷ்ய ச | = | கவனிக்காமலும், |
| निश्चल तनुः<br>நிஶ்சல தனு꞉ | = | (ஸ்திர ஸுகமான ஆஸனத்தில் அமர்ந்து) அசையாத சரீரமுடையவனாய், |
| तन्मयतया<br>தன்மயதயா | = | அதுவாகவே (பிரஹ்ம மாகவே) இருக்கும் தன்மையினால், |
| ब्रह्म आत्म ऐक्यं<br>ப்³ரஹ்ம ஆத்ம ஐக்யம் | = | பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றேதான் என்ற நிலையை, |
| उपेत्य<br>உபேத்ய | = | அடைந்து (ஸாக்ஷாத்காரம் செய்து), |
| अखण्डवृत्त्या<br>அக²ண்ட³வ்ருத்த்யா | = | இடையில்லாத விருத்தியினால், |
| अनिशं च<br>அநிஶம் ச | = | எப்பொழுதுமே, |
| ब्रह्मानन्द रसं<br>ப்³ரஹ்மானந்த³ ரஸம் | = | பிரஹ்மானந்தத்தின் ரஸத்தை, |
| आत्मनि<br>ஆத்மனி | = | தன்னிடத்திலேயே, |
| मुदा<br>முதா³ | = | ஸந்தோஷமாக, |
| पिब<br>பிப³ | = | அருந்து, |
| शून्यैः<br>ஶூன்யை꞉ | = | பிரயோஜனமற்றதான, |
| अन्यैः<br>அன்யை꞉ | = | (அனாத்ம விஷயமாயுள்ள) வேறு, |
| भ्रमैः<br>ப்⁴ரமை꞉ | = | பிராந்திக்ஞானங்களினால், |

**किं** = என்ன பிரயோஜனம்?

**கிம்** (380)

## अनात्मचिन्तनं त्यक्त्वा कश्मलं दुःखकारणम् ।
## चिन्तयात्मानमानन्दरूपं यन्मुक्तिकारणम् ॥ ३८१ ॥

**அனுத்மசிந்தனம் த்யக்த்வா கஶ்மலம் து³:க²காரணம் ।**
**சிந்தயாத்மானமானந்த³ரூபம் யன்முக்திகாரணம் ॥ 381 ॥**

**कश्मलं** = அசுத்தமாயும்,

**கஶ்மலம்**

**दुःखकारणं** = துக்கத்திற்குக் காரணமாயுமுள்ள,

**து³:க²காரணம்**

**अनात्म चिन्तनं** = அனுத்மவிஷயமான சிந்தனையை,

**அனுத்ம சிந்தனம்**

**त्यक्त्वा** = விட்டு விட்டு,

**த்யக்த்வா**

**यत्** = எது,

**யத்**

**मुक्ति कारणं** = முக்திக்கு காரணமாயிருக்கிறதோ (அந்த),

**முக்தி காரணம்**

**आनन्द रूपं** = ஆனந்த ஸ்வரூபமான,

**ஆனந்த³ ரூபம்**

**आत्मानं** = ஆத்மாவை,

**ஆத்மானம்**

**चिन्तय** = சிந்தனை செய்.

**சிந்தய** (381)

## एष स्वयंज्योतिरशेषसाक्षी विज्ञानकोशे विलसत्यजस्रम् ।
## लक्ष्यं विधायैनमसद्विलक्षणमखण्डवृत्त्याऽऽत्मतयाऽनुभावय ॥ ३८२ ॥

**ஏஷ ஸ்வயஞ்ஜ்யோதிரஶேஷஸாக்ஷீ விஜ்ஞானகோஶே**
**விலஸத்யஜஸ்ரம் ।**
**லக்ஷ்யம் விதா⁴யைனமஸத்³விலக்ஷணமக²ண்ட³**
**வ்ருத்த்யா(ஆ)த்மதயா(அ)னுபா⁴வய ॥ 382 ॥**

**एष** = இவர்,

**ஏஷ**

| | | |
|---|---|---|
| **स्वयं ज्योति:**<br>**ஸ்வயஞ் ஜ்யோதி:** | = | (வேறு எதையும் அபேக்ஷிக்காமல்) தானே பிரகாசிப்பவர், |
| **अशेष साक्षी**<br>**அஶேஷ ஸாக்ஷீ** | = | எல்லாவற்றையும் ஸாக்ஷியாயிருந்து பார்த்துக் கொண்டிருப்பவர், |
| **विज्ञानकोशे**<br>**விஜ்ஞானகோஶே** | = | விக்ஞான கோசத்தில் (புக்தியில்), |
| **अजस्रं**<br>**அஜஸ்ரம்** | = | இடைவிடாமல், |
| **विलसति**<br>**விலஸதி** | = | பிரகாசித்துக்கொண்டிருக்கிறார். (அதனால்), |
| **असद् विलक्षणं**<br>**அஸத்³ விலக்ஷணம்** | = | அஸத் பதார்த்தத்திற்கு (ஜடமாயும் அறியப்படுகிறதாயுமுள்ள புத்தி முதலான அனாத்மாவிற்கு) நேர்மாறுதலான லக்ஷணத்தையுடைய, |
| **एनं**<br>**ஏனம்** | = | இவரை, |
| **लक्ष्यं**<br>**லக்ஷ்யம்** | = | லக்ஷ்யமாக, |
| **विधाय**<br>**விதா⁴ய** | = | வைத்துக்கொண்டு, |
| **अखण्ड वृत्त्या**<br>**அக²ண்ட³ வ்ருத்த்யா** | = | துண்டு விழாத விருத்தியுடன், |
| **आत्मतया**<br>**ஆத்மதயா** | = | ஆத்ம ஸ்வரூபமாக, |
| **अनुभावय**<br>**அனுபா⁴வய** | = | ஸாக்ஷாத்காரம் செய். |

**(382)**

**(அவதாரிகை)** 'துண்டு விழாத விருத்தி' என்றால் எப்படி என்பதை விளக்குகிறார்: -

**एतमच्छिनया वृच्या प्रत्ययान्तरशून्यया ।**
**उल्लेखयन्विजानीयात्स्वस्वरूपतया स्फुटम् ॥ ३८३ ॥**

**ஏதமச்சி²னயா வ்ருச்யா ப்ரத்யயாந்தரஶூன்யயா ।**
**உல்லேக²யன்விஜானீயாத்ஸ்வஸ்வரூபதயா ஸ்பு²டம் ॥ 383 ॥**

| | | |
|---|---|---|
| **अच्छिनया**<br>**அச்சி²னயா** | = | (அழுக்கற்ற திரியுடனும் எண்ணெயுடனும் கூடிய தீபத்தின் ஜ்வாலை போலும் தைலதாரை போலும்) இடைவிடாமல் துடர்ந்ததாயும், |

| | | |
|---|---|---|
| प्रत्ययान्तरशून्यया<br>ப்ரத்யயாந்தரஶூன்யயா | = | (ஆத்மாவைத்தவிர) வேறு எண்ணங்கள ற்றதாயும் உள்ள, |
| वृच्या<br>வ்ருச்யா | = | விருத்தியினுல், |
| एतं<br>ஏதம் | = | இவரை (ஆத்மாவை), |
| उल्लेखयन्<br>உல்லேக²யன் | = | எண்ணிக்கொண்டு, |
| स्वस्वरूपतया<br>ஸ்வஸ்வரூபதயா | = | தன்னுடைய ஸ்வரூபம் என்பதாக, |
| स्फुटं<br>ஸ்பு²டம் | = | தெளிவாக, |
| विजानीयात्<br>விஜானீயாத் | = | அறிந்துகொள்ள வேண்டும். (383) |

अत्रात्मत्वं दृढीकुर्वन्नहमादिषु संत्यजन् ।
उदासीनतया तेषु तिष्ठेद्घटपटादिवत् ॥ ३८४ ॥

அத்ராத்மத்வம் த்³ருடீ⁴குர்வன்னஹமாதி³ஷு ஸந்த்யஜன் ।
உதா³ஸீனதயா தேஷு திஷ்டே²த்³க⁴டபடாதி³வத் ॥ 384 ॥

| | | |
|---|---|---|
| अत्र<br>அத்ர | = | இதனிடத்தில் (ஆத்மாவினிடத்தில்), |
| आत्मत्वं<br>ஆத்மத்வம் | = | 'தான்' என்ற தன்மையை, |
| दृढीकुर्वन्<br>த்³ருடீ⁴குர்வன் | = | திடமாக (தீர்மானமாக) செய்துகொண்டு, |
| अहमादिषु<br>அஹமாதி³ஷு | = | அஹங்காரம் முதலானவைகளில் ("தான்" என்ற தன்மையை), |
| संत्यजन्<br>ஸந்த்யஜன் | = | பூராவும் விட்டுவிட்டு, |
| तेषु<br>தேஷு | = | அவைகளில், |
| घट पटादिवत्<br>க⁴ட படாதி³வத் | = | குடம் வஸ்திரம் முதலியவைகளில் (எப்படி "தான்" என்று எண்ணுவது கிடையாதோ அதைப்) போல, |
| उदासीनतया<br>உதா³ஸீனதயா | = | உதாஸீனமாக ("நான்" என்ற பாவனையில்லாமல்), |

| | | |
|---|---|---|
| **तिष्ठेत्** | = | இருக்கவேண்டும். |
| **திஷ்டே²த்** | | **(384)** |

**(அவதாரிகை)** முன் 371 வது சுலோகத்தில் இவ்விதம் புத்தி முதலான வைகளுக்கெல்லாம் ஸாக்ஷியாக இருக்கிற ஆத்மாவையும் விகல்பமற்று பரிபூர்ண மாயுள்ள பிரஹ்மத்தில் லயப்படுத்த வேண்டுமென்று சொன்னதை எவ்விதம் செய்வ தென்று மூன்று சுலோகங்களில் காட்டுகிறார்: -

## विशुद्धमन्तःकरणं स्वरूपे निवेश्य साक्षिण्यवबोधमात्रे
## शनैः शनैर्निश्चलतामुपानयन्पूर्णत्वमेवानुविलोकयेत्ततः ॥ ३८५ ॥

**விஶுத்³த⁴மந்த:கரணம் ஸ்வரூபே நிவேஶ்ய ஸாக்ஷிண்யவபோ³த⁴மாத்ரே**
**ஶனை: ஶனைர்நிஶ்சலதாமுபாநயன்பூர்ணத்வமேவானுவிலோகயேத்தத: ॥ 385 ॥**

| | | |
|---|---|---|
| **विशुद्धं** | = | (ரஜோ குணம் தமோ குணம் நீங்கி) |
| **விஶுத்³த⁴ம்** | | நன்கு சுத்தமாயிருக்கும், |
| **अन्तःकरणं** | = | அந்த:கரணத்தை, |
| **அந்த:கரணம்** | | |
| **अवबोधमात्रे** | = | (உபாதிகளற்ற) ஞானஸ்வரூபமாகமட்டுமிருக்கும், |
| **அவபோ³த⁴மாத்ரே** | | |
| **साक्षिणि** | = | ஸாக்ஷியாகிய, |
| **ஸாக்ஷிணி** | | |
| **स्वरूपे** | = | ஸ்வரூபத்தில், |
| **ஸ்வரூபே** | | |
| **निवेश्य** | = | நன்கு வைத்து, |
| **நிவேஶ்ய** | | |
| **शनैः शनैः** | = | மெள்ளமெள்ள, |
| **ஶனை: ஶனை:** | | |
| **निश्चलतां** | = | அசைவற்ற தன்மையை, |
| **நிஶ்சலதாம்** | | |
| **उपानयन्** | = | ஏற்படுத்திக்கொண்டு, |
| **உபாநயன்** | | |
| **ततः** | = | அதன் பிறகு, |
| **தத:** | | |
| **पूर्णत्वं एव** | = | பரிபூர்ணமாயிருக்கும் தன்மையையே, |
| **பூர்ணத்வம் ஏவ** | | |
| **अनुविलोकयेत्** | = | ஸாக்ஷாத்கரிக்க வேண்டும். |
| **அனுவிலோகயேத்** | | |

கண்ணுடிக்கெதிரில் நின்று பார்க்கும்பொழுது நம் முகத்தைக்காட்டிலும் வேறுகக் கண்ணுடிக்குள் பிரதிபிம்பம் தெரிகிறது. கண்ணுடியை யகற்றிவிட்டால் அந்த பிரதி பிம்பம் பிம்பமான முகத்துடன் ஒன்ருகச் சேர்ந்துவிடுகிறது. இதுபோல் பிரஹ்மம் மனதில் பிரதிபிம்பித்து சிதாபாஸனுக தனியாகத் தோன்றிக் கொண்டிரு ந்தது. எல்லா விருத்திகளையும் அடக்கியவுடன் உபாதி நீங்கிவிட்டபடியால் பிரதி பிம்பமான சிதாபாஸன் பிம்பமான பிரஹ்மத்துடன் ஒன்றிவிடுகிறது. **(385)**

**देहेन्द्रियप्राणमनोऽहमादिभिः स्वाज्ञानक्लृप्तैरखिलैरुपाधिभिः ।**
**विमुक्तमात्मानमखण्डरूपं पूर्णं महाकाशमिवावलोकयेत् ॥ ३८६ ॥**

**தே³ஹேந்த்³ரியப்ராணமனோ(அ)ஹமாதி³பி⁴:**
**ஸ்வாஜ்ஞானக்ல்ருப்தைரகி² லைருபாதி⁴பி⁴: ।**
**விமுக்தமாத்மானமக²ண்ட³ரூபம் பூர்ணம்**
**மஹாகாஶமிவாவலோகயேத் ॥ 386 ॥**

**स्वाज्ञान क्लृप्तैः** = தன் ஸ்வரூபத்தை அறியாததினுல்
**ஸ்வாஜ்ஞான க்ல்ருப்தை:** ஏற்பட்டிருக்கும்,
**देह इन्द्रिय प्राण मनो अहं आदिभिः** = தேஹம் இந்திரியம் பிராணன் மனஸ்
**தே³ஹ இந்த்³ரிய ப்ராண** அஹங்காரம் முதலான,
**மனே அஹம் ஆதி³பி⁴:**
**अखिलैः** = எல்லா,
**அகி²லை:**
**उपाधिभिः** = உபாதிகளால்,
**உபாதி⁴பி⁴:**
**विमुक्तं** = நன்கு விடப்பட்டிருக்கிற,
**விமுக்தம்**
**आत्मानं** = ஆத்மாவை,
**ஆத்மானம்**
**महाकाशं इव** = வியாபகமான ஆகாசத்தைப்போல,
**மஹாகாஶம் இவ**
**अखण्डरूपं** = துண்டு படாத ஸ்வரூபமாய்,
**அக²ண்ட³ரூபம்**
**पूर्णं** = நிறைந்ததாக,
**பூர்ணம்**
**अवलोकयेत्** = ஸாக்ஷாத்கரிக்கவேண்டும்.
**அவலோகயேத்** **(386)**

**(அவதாரிகை)** 'ஆகாசத்தைப்போல' என்பதை தெளிவு படுத்துகிறர்: -

**घटकलशकुसूलसूचिमुख्यैः गगनमुपाधिशतैर्विमुक्तमेकम् ।**
**भवति न विविधं तथैव शुद्धं परमहमादिविमुक्तमेकमेव ॥ ३८७ ॥**

**க⁴டகலஶகுஸூலஸூசிமுக்²யை: க³க³னமுபாதி⁴ஶதைர்விமுக்தமேகம் ।**
**ப⁴வதி ந விவித⁴ம் ததை²வ ஶுத்³த⁴ம் பரமஹமாதி³விமுக்தமேகமேவ ॥ 387 ॥**

| | | |
|---|---|---|
| **घट कलश कुसूल सूचि मुख्यैः** **க⁴டகலஶகுஸூலஸூசிமுக்²யை:** | = | குடம், கலசம், குதிர், ஊசி முதலான, |
| **उपाधिशतैः** **உபாதி⁴ஶதை:** | = | (சிறிதும் பெரியதுமான, பலவாகத் தோற்றத்திற்குக் காரணமான) நூற்றுக்கணக்கான உபாதிகளினுல், |
| **विमुक्तं** **விமுக்தம்** | = | நன்கு விடப்பட்டிருக்கும், |
| **गगनं** **க³க³னம்** | = | ஆகாசம், |
| **एकं** **ஏகம்** | = | ஒன்ருகவே, |
| **भवति** **ப⁴வதி** | = | இருக்கிறது, |
| **विविधं** **விவித⁴ம்** | = | பலவிதமாக, |
| **न** **ந** | = | இருப்பதில்லை, |
| **तथा एव** **ததா² ஏவ** | = | அவ்விதமே, |
| **अहमादि विमुक्तं** **அஹமாதி³ விமுக்தம்** | = | அஹங்காரம் முதலானவைகளிலிருந்து நன்கு விடப்பட்ட, |
| **शुद्धं** **ஶுத்³த⁴ம்** | = | சுத்தமான, |
| **परं** **பரம்** | = | மேலான வஸ்துவான ஆத்மா, |
| **एकं एव** **ஏகம் ஏவ** | = | ஒன்றே தான். **(387)** |

**(அவதாரிகை)** ஆகாச திருஷ்டாந்தத்தில். உபாதிகளாகக்கண்ட குடம் முதலியவைகளுக்கு ஆகாசத்தைப்போலவே வியாவஹாரிகஸத்தையுண்டு; ஆத்மாவிற்கு ஏற்பட்ட உபாதிகள் வெறும் தோற்றமாயே இருப்பதால் ஆத்மாவின் ஏகமாயிருக்கும் தன்மையை உணர்வது சிரமமில்லையென்ற கருத்துடன் சொல்கிருர்: -

**ब्रह्मादिस्तम्बपर्यन्ता मृषामात्रा उपाधयः ।**
**ततः पूर्णं स्वमात्मानं पश्येदेकात्मना स्थितम् ॥ ३८८ ॥**

**ப்³ரஹ்மாதி³ஸ்தம்ப³பர்யந்தா ம்ருஷாமாத்ரா உபாத⁴ய: ।**
**தத: பூர்ணம் ஸ்வமாத்மானம் பஶ்யேதே³காத்மனா ஸ்தி²தம் ॥ 388 ॥**

**ब्रह्मा आधा:** = ஹிரண்ய கர்ப்பர் முதல்,
**ப்³ரஹ்மா ஆதா⁴:**
**स्तम्ब पर्यन्ता:** = ஸ்தம்பமென்ற சிறு பூச்சி வரையாகிற,
**ஸ்தம்ப³பர்யந்தா**
**उपाधय:** = உபாதிகள்,
**உபாத⁴ய:**
**मृषामात्रा:** = மித்யையே,
**ம்ருஷாமாத்ரா:**
**ततः** = ஆகையால்,
**தத:**
**स्वं** = தன்னுடைய,
**ஸ்வம்**
**आत्मानं** = ஆத்மாவை,
**ஆத்மானம்**
**एकात्मना** = ஓரேவிதமாக,
**ஏகாத்மனு**
**स्थितं** = இருக்கும்,
**ஸ்தி²தம்**
**पूर्णं** = பரிபூர்ண வஸ்துவாக,
**பூர்ணம்**
**पश्येत्** = பார்க்கவேண்டும்.
**பஶ்யேத்** **(388)**

**यत्र भ्रान्त्या कल्पितं तद्विवेके तत्तन्मात्रं नैव तस्माद्विभिन्नम् ।**
**भ्रान्तेर्नाशे भ्रान्तिदृष्टाहितत्त्वं रज्जुस्तद्वद्विश्वमात्मस्वरूपम् ॥ ३८९ ॥**

**யத்ர ப்⁴ராந்த்யா கல்பிதம் தத்³விவேகே தத்தன்மாத்ரம்**
**நைவ தஸ்மாத்³விபி⁴ன்னம் ।**
**ப்⁴ராந்தேர்நாஶே ப்⁴ராந்தித்³ருஷ்டாஹிதத்த்வம்**
**ரஜ்ஜுஸ்தத்³வத்³விஶ்வமாத்மஸ்வரூபம் ॥ 389 ॥**

**यत्र** = எதினிடத்தில்,
**யத்ர**

यत् = எது,
யத்
भ्रान्त्या = பிராந்தியினுல்,
ப்⁴ராந்த்யா
कल्पितं = கல்பிக்கப்பட்டதோ,
கல்பிதம்
तत् = அது,
தத்
विवेके = விசாரித்துப் பார்க்கும்போது,
விவேகே
तत् मात्रं = அந்த அதிஷ்டானமாகவே தானிருக்கும்;
தத் மாத்ரம்
तस्मात् = அதிலிருந்து,
தஸ்மாத்
विभिन्नं = வேறுபட்டது,
விபி⁴ன்னம்
न एव = இல்லவே யில்லை,
ந ஏவ
भ्रान्तेः = இது பாம்பு என்ற பிராந்திக்கு (இது பாம்பு அல்ல,
ப்⁴ராந்தே: கயிறுதான் என்ற ஞானத்தால்)
नाशे = நாசமேற்பட்டால்,
நாஶே
भ्रान्ति दृष्ट अहि तत्त्वं = பிராந்தியினால் காணப்பட்ட ஸர்ப்பத்தின்
ப்⁴ராந்தி த்³ருஷ்ட அஹி தத்த்வம் வாஸ்தவத்தன்மை,
रज्जुः = கயிறுதான்,
ரஜ்ஜு:
तद्वत् = அதுபோல்,
தத்³வத்
विश्वं = (அக்ஞானத்தினுல் தோன்றும்) ஜகத்,
விஶ்வம்
आत्मस्वरूपं = (அதன் அதிஷ்டானமான) ஆத்ம
ஆத்மஸ்வரூபம் ஸ்வரூபமேயாகும்.

கயிறு தெரிந்தவுடன் பாம்பு மறைவதுபோல் அதிஷ்டானமான ஆத்மஸ்வரூபம் தெரிந்தவுடன் உலகத்தோற்றம் மறைந்துவிடும். **(389)**

**स्वयं ब्रह्मा स्वयं विष्णु स्वयमिन्द्रा स्वयं शिवः ।**
**स्वयं विश्वमिदं सर्वं स्वस्मादन्यन्न किञ्चन ॥ ३९० ॥**

**ஸ்வயம் ப்³ரஹ்மா ஸ்வயம் விஷ்ணு ஸ்வயமிந்த்³ரா ஸ்வயம் ஶிவ꞉ ।**
**ஸ்வயம் விஶ்வமித³ம் ஸர்வம் ஸ்வஸ்மாத³ன்யன்ன கிஞ்சன ॥ 390 ॥**

| | | |
|---|---|---|
| **स्वयं** ஸ்வயம் | = | தானே, |
| **ब्रह्मा** ப்³ரஹ்மா | = | பிரஹ்மா, |
| **स्वयं** ஸ்வயம் | = | தானே, |
| **विष्णु** விஷ்ணு | = | விஷ்ணு, |
| **स्वयं** ஸ்வயம் | = | தானே, |
| **इन्द्राः** இந்த்³ரா꞉ | = | இந்திரன், |
| **स्वयं** ஸ்வயம் | = | தானே, |
| **शिवः** ஶிவ꞉ | = | சிவன், |
| **स्वयं** ஸ்வயம் | = | தானே, |
| **इदं** இத³ம் | = | இந்த, |
| **सर्वं** ஸர்வம் | = | எல்லா, |
| **विश्वं** விஶ்வம் | = | ஜகத்தும், |
| **स्वस्मात्** ஸ்வஸ்மாத் | = | தன்னைவிட, |
| **अन्यत्** அன்யத் | = | வேறு, |
| **किञ्चन** கிஞ்சன | = | எதுவும், |
| **न** ந | = | கிடையாது. |

अन्तः स्वयं चापि बहिः स्वयं च
स्वयं पुरस्तात्स्वयमेव पश्चात् ।
स्वयं ह्यवाच्या स्वयमप्युदीच्यां
तथोपरिष्टात्स्वयमप्यधस्तात् ॥ ३९१ ॥

அந்த꞉ ஸ்வயம் சாபி ப³ஹி꞉ ஸ்வயம் ச
ஸ்வயம் புரஸ்தாத்ஸ்வயமேவ பஶ்சாத் ।
ஸ்வயம் ஹ்யவாச்யா ஸ்வயமப்யுதீ³ச்யாம்
ததோ²பரிஷ்டாத்ஸ்வயமப்யத⁴ஸ்தாத் ॥ 391 ॥

अन्तः च अपि = உள்ளேயும் கூட,
அந்த꞉ ச அபி
स्वयं = தானே,
ஸ்வயம்
स्वयं = தானே,
ஸ்வயம்
बहिः च = வெளியிலும்,
ப³ஹி꞉ ச
स्वयं = தானே,
ஸ்வயம்
पुरस्तात् = முன்னால் (கிழக்கில்),
புரஸ்தாத்
स्वयं एव = தான் தான்,
ஸ்வயம் ஏவ
पश्चात् = பின்னால் (மேற்கில்),
பஶ்சாத்
स्वयं हि = தான் தான்,
ஸ்வயம் ஹி
अवाच्यां = தெற்கில்,
அவாச்யாம்
स्वयं = தானே,
ஸ்வயம்
उदीच्यां अपि = வடக்கிலும்,
உதீ³ச்யாம் அபி
तथा = அப்படியே,
ததா²

**उपरिष्टात्** = மேலேயும்,

**உபரிஷ்டாத்**

**अपि** = கீழேயும்,**அபி**

**स्वयं** = தானே,

**ஸ்வயம்** **(391)**

(**அவதாரிகை**) தனித்தனியாகத் தோன்றும் பதார்த்தங்கள் எல்லாம் ஸ்வரூப த்தில் ஒன்றுகவே இருக்கமுடியுமாவென்றல், ஒரே ஜலம் அலையாகவும், நுரையாக வும், சுழலாகவும் தோன்றவில்லையா என்கிறுர்: -

**तरङ्गफेनभ्रमबुद्बुदादि सर्वं स्वरूपेण जलं यथा तथा ।**
**चिदेव देहाद्यहमन्तमेतत् सर्वं चिदेवैकरसं विशुद्धम् ॥ ३९२ ॥**

**தரங்க³பே²னப்⁴ரமபு³த்³பு³தா³தி³ ஸர்வம் ஸ்வரூபேண**
**ஜலம் யதா² ததா² ।**
**சிதே³வ தே³ஹாத்³யஹமந்தமேதத் ஸர்வம்**
**சிதே³வைகரஸம் விஶுத்³த⁴ம் ॥ 392 ॥**

**तरङ्ग फेन भ्रम बुद्बुदादि** = அலை, நுரை, சுழல், நீர்குமிழி முதலியது,

**தரங்க³பே²னப்⁴ரமபு³த்³பு³தா³தி³**

**सर्वं** = எல்லாம்,

**ஸர்வம்**

**स्वरूपेण** = ஸ்வரூபத்தில்,

**ஸ்வரூபேண**

**यथा** = எப்படி,

**யதா²**

**जलं** = ஜலமேதானே,

**ஜலம்**

**तथा** = அப்படியே,

**ததா²**

**देहादि** = தேஹம் முதல்,

**தே³ஹாதி³**

**अहमन्तं** = அஹங்காரம் முடிய,

**அஹமந்தம்**

**एतत्** = இது,

**ஏதத்**

**सर्वं** = எல்லாம்,

**ஸர்வம்**

**एकरसं** = ஒரே ரஸமாயும்,
**ஏகரஸம்**

**विशुद्धं** = சுத்தமாயும் உள்ள,
**விஶுத்³த⁴ம்**

**चित् एव** = சைதன்யம் தான்.
**சித் ஏவ** **(392)**

(**அவதாரிகை**) இந்த அனுபவம் பிரஹ்மத்தில் நிலைத்தவருக்குத் தான் ஏற்படுமே தவிர, மாயைக்கு உள்பட்டவருக்கு ஏற்படாது என்பதைச் சொல்கிறுர்: -

**सदेवेदं सर्वं जगद्वगतं वाङ्मनसयोः**
**सतोऽन्यन्नास्त्येव प्रकृतिपरसीम्नि स्थितवतः ।**
**पृथक्किं मृत्स्नायाः कलशघटकुम्भाद्यवगतं**
**वदत्येष भ्रान्तस्त्वमहमिति मायामदिरया ॥ ३९३ ॥**

**ஸதே³வேத³ம் ஸர்வம் ஜக³த்³வக³தம் வாங்மனஸயோ:**
**ஸதோ(அ)ன்யன்னாஸ்த்யேவ ப்ரக்ருதிபரஸீம்னி ஸ்தி²தவத: ।**
**ப்ருத²க்கிம் ம்ருத்ஸ்னயா: கலஶக⁴டகும்பா⁴த்³யவக³தம்**
**வத³த்யேஷ ப்⁴ராந்தஸ்த்வமஹமிதி மாயாமதி³ரயா ॥ 393 ॥**

**इदं** = இந்த,
**இத³ம்**

**सर्वं** = எல்லா,
**ஸர்வம்**

**जगत्** = ஜகத்தும்,
**ஜக³த்**

**सत् एव** = ஸத் (பிரஹ்மம்) தான் என்று,
**ஸத் ஏவ**

**वाङ्मनसयोः** = (உபநிஷத்) வாக்கியத்தினாலும் (அதையனுஸரித்த
**வாங்மனஸயோ:** யுக்தியோடு கூடிய) புத்தியினுலும்,

**अवगतं** = அறியப்பட்டதாக ஆகிறது,
**அவக³தம்**

**प्रकृति पर सीम्नि** = காரணங்களுக்குள் மேலான (பிரஹ்மமாகிற)
**ப்ரக்ருதி பர ஸீம்னி** எல்லையில்,

**स्थितवतः** = நிற்பவருக்கு,
**ஸ்தி²தவத:**

**सतः** = ஸத்தைத் தவிர,
**ஸத:**

अन्यत् = வேறு எதுவும்,
அன்யத்
न अस्ति एव = கிடையவே கிடையாது தான்,
ந அஸ்தி ஏவ
कलश घट कुम्भादि = கலசம், குடம், கும்பம் முதலியது,
கலஶ க⁴ட கும்பா⁴தி³
मृत्स्नाया: = மண்ணை விட்டு,
ம்ருத்ஸ்னயாः
पृथक् = வேறாக,
ப்ருத²க்
किं अवगतं = அறியப்படுகிறதா?
கிம் அவக³தம்
मायामदिरया = மாயையாகிற கள்ளினால்,
மாயாமதி³ரயா
भ्रान्त: = பிராந்தியடைந்தவனாய்,
ப்⁴ராந்த:
एष: = இவன்,
ஏஷ:
त्वं = 'நீ',
த்வம்
अहं = 'நான்',
அஹம்
इति = என்று,
இதி
वदति = சொல்லி வருகிறான்.
வத³தி

இந்த சுலோகத்தில் 'வாக்' என்பது

**सन् घटः सन् पटः**

**ஸன் க⁴டः ஸன் படः**

இது முதலான ஒரே பொருளைக் குறிக்கிற ஸமானாதிகரண பதங்களுடன் கூடிய வாக்யத்தைக் குறிக்கிறது. அல்லது

**'ऐतदात्म्यमिदं सर्व वाचारम्भणं विकारो नामधेयं'**

**'ஐததா³த்ம்யமித³ம் ஸர்வ வாசாரம்ப⁴ணம் விகாரோ நாமதே⁴யம்'**

(இது எல்லாம் பிரஹ்மம். பிரபஞ்சம் பொய்). இது முதலான உபநிஷக் வாக்யத்தைக் குறிக்கிறது. 'மனஸ்' என்பது ஸமானுதிகரண வாக்யங்களால் ஏற்படும் 'இந்த ஜகத் எல்லாம் ஸத் ஸ்வரூபம் தான்' என்ற ஞானத்தைக் குறிக்கிறது. அல்லது உபநிஷத் வாக்யங்களால் ஏற்படும் அதிஷ்டான மாத்திர விஷயமான அகண்டாகார விருத்தியைக் குறிக்கிறது.

**'यः चोरः स स्थाणुः'**

**'யঃ சோரঃ ஸ ஸ்தா2ணுঃ'**

'திருடனுக என் கண்ணுக்குப் புலப்பட்ட இது திருடனல்ல, மரக்கட்டைதான்' என்பது போல் இதுவரை பிரபஞ்சமாகத் தோன்றிக்கொண்டிருந்த இது பிரபஞ்சமல்ல ஸத்ரூபமான பிரஹ்மம்தான் என்ற ஞானம் ஏற்பட்டுவிடுகிறது. **(393)**

**क्रियासमभिहारेण यत्र नान्यदिति श्रुतिः ।**
**ब्रवीति द्वैतराहित्यं मिथ्याध्यासनिवृत्तये ॥ ३९४ ॥**

**க்ரியாஸமபி4ஹாரேண யத்ர நான்யதி3தி ஶ்ருதிঃ ।**
**ப்3ரவீதி த்3வைதராஹித்யம் மித்2யாத்4யாஸநிவ்ருத்தயே ॥ 394 ॥**

| | | |
|---|---|---|
| **यत्र नान्यत्** / **யத்ர நான்யத்** | = | எதில் வேறு எதுவும் கிடையாதோ", |
| **इति** / **இதி** | = | என்ற, |
| **श्रुतिः** / **ஶ்ருதிঃ** | = | (பிருஹதாரண்யக உபநிஷத்) சுருதியானது, |
| **क्रियासमभिहारेण** / **க்ரியாஸமபி4ஹாரேண** | = | திரும்பத்திரும்ப, |
| **द्वैत राहित्यं** / **த்3வைத ராஹித்யம்** | = | இரண்டாயிருக்கும் தன்மை கிடையாது என்று, |
| **मिथ्याध्यासनिवृत्तये** / **மித்2யாத்4யாஸநிவ்ருத்தயே** | = | பொய்யாயிருக்கும் அத்யாஸத்தை விலக்குவதற்காக, |
| **ब्रवीति** / **ப்3ரவீதி** | = | சொல்லுகிறது. (இங்கு 'அத்யாஸம்' என்பது பேத ஞானத்தையும், பிரபஞ்சத்தையும் குறிக்கிறது.) |

**(394)**

**आकाशवन्निर्मलनिर्विकल्पनिसीमनिस्पन्दन निर्विकारम् ।**
**अन्तर्बहिःशून्यमनन्यमद्वयं स्वयं परं ब्रह्म किमस्ति बोध्यम् ॥ ३९५ ॥**

**ஆகாஶவந்நிர்மலநிர்விகல்பநிஸீமநிஸ்பந்த3ன நிர்விகாரம் ।**
**அந்தர்ப3ஹிঃஶூன்யமனன்யமத்3வயம் ஸ்வயம்**
**பரம் ப்3ரஹ்ம கிமஸ்தி போ3த்4யம் ॥ 395 ॥**

| | | |
|---|---|---|
| **आकाशवत्**<br>**ஆகாஶவத்** | = | ஆகாசத்தைப்போல, |
| **निर्मल**<br>**நிர்மல** | = | அழுக்கற்றதாய், |
| **निर्विकल्प**<br>**நிர்விகல்ப** | = | (அப்படி இப்படியென்று சொல்வதற்கில்லாமல்) ஒரேவிதமாய், |
| **निस्सीम**<br>**நிஸ்ஸீம** | = | எல்லையற்றதாய், |
| **निस्स्पन्दन**<br>**நிஸ்ஸ்பந்த³ன** | = | அசைவற்றதாய், |
| **निर्विकारं**<br>**நிர்விகாரம்** | = | எவ்வித மாறுதலுமற்றகாயும், |
| **अन्तर्बहिः शून्यं**<br>**அந்தர்ப³ஹி:ஶூன்யம்** | = | உள்ளே யென்றோ வெளியென்றோ கிடையாததாயும் (இருக்கிறது), |
| **अनन्यत्**<br>**அனன்யத்** | = | (பிரத்யகாத்மாவைவிட) வேறு இல்லாததாய், |
| **अद्वयं**<br>**அத்³வயம்** | = | இரண்டற்றகாய், |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தாஞகவேயிருப்பதாய், |
| **परं**<br>**பரம்** | = | (எல்லாவற்றிற்கும்) மேலானதாய், |
| **ब्रह्म**<br>**ப்³ரஹ்ம** | = | பிரஹ்மம் (இருக்கிறது). (அது அறியப்பட்டு விட்டால்), |
| **किं**<br>**கிம்** | = | (வேறு) எது, |
| **बोध्यं**<br>**போ³த்⁴யம்** | = | அறியவேண்டியதாக, |
| **अस्ति**<br>**அஸ்தி** | = | இருக்கும்? |

பிரஹ்மத்திற்கு திருஷ்டாந்தமே கிடையாதபோதிலும் நமக்கு அதன் தன்மை கொஞ்சமாவது மனசில் படவேண்டுமே என்று ஆகாசம் திருஷ்டாந்தமாக சொல்லப் பட்டிருக்கிறது. **अन्तर्बहिश्शून्यं அந்தர்ப³ஹிஶ்ஶூன்யம்** என்பதால் ஸ்வகதபேதம் (தன் ஸ்வரூபத்தில் வேற்றுமை) இல்லையென்றும் **अनन्यत् அனன்யத்** என்பதால் ஸஜாதீய பேதமில்லையென்றும் **अद्वयं அத்³வயம்** என்பதால் விஜாதீய பேதம் இல்லை என்றும் சொல்லப்படுகிறது. ஒன்றை அறிந்தால் எல்லாம் அறிந்ததாக ஆகும் என்ற

நியாயப்படி எல்லாமாக இருக்கும் பிரஹ்மத்தை யறிந்துவிட்டால் எல்லாம் அறிந்ததாக ஆகிறபடியால் அறியவேண்டியது ஒன்றும் பாக்கியில்லை. **(395)**

**वक्तव्यं किमु विद्यतेऽत्र बहुधा ब्रह्मैव जीवः स्वयं**
**जगदापराणु सकलं ब्रह्माद्वितीयं श्रुतेः ।**
**ब्रह्मैवाहमिति प्रबुद्धमतयः संत्यक्तवाह्याः स्फुटं**
**ब्रह्मीभूय वसन्ति संततचिदानन्दात्मनैव ध्रुवम् ॥ ३९६ ॥**

**வக்தவ்யம் கிமு வித்³யதே(அ)த்ர ப³ஹுதா⁴ ப்³ரஹ்மைவ ஜீவꞏ ஸ்வயம்**
**ஜக³தா³பராணு ஸகலம் ப்³ரஹ்மாத்³விதீயம் ஶ்ருதேꞏ ।**
**ப்³ரஹ்மைவாஹமிதி ப்ரபு³த்³த⁴மதயꞏ ஸந்த்யக்தவாஹ்யாꞏ ஸ்பு²டம்**
**ப்³ரஹ்மீபூ⁴ய வஸந்தி ஸந்ததசிதா³னந்தா³த்மனைவ த்⁴ருவம் ॥ 396 ॥**

| | | |
|---|---|---|
| **अत्र** **அத்ர** | = | இவ்விஷயத்தில் (பிரஹ்மம் ஒன்று தான் உள்ளது என்பதில்), |
| **बहुधा** **ப³ஹுதா⁴** | = | பலவிதமாக, |
| **वक्तव्यं** **வக்தவ்யம்** | = | சொல்ல வேண்டியது, |
| **किमु** **கிமு** | = | எது வேனும், |
| **विद्यते** **வித்³யதே** | = | உண்டா? |
| **ब्रह्म एव** **ப்³ரஹ்ம ஏவ** | = | பிரஹ்மம் தான், |
| **स्वयं** **ஸ்வயம்** | = | தானே, |
| **जीवः** **ஜீவꞏ** | = | (உபாதியோடு சேரும் போது) ஜீவன் (எனப்படுகிறது.) |
| **आपराणु** **ஆபராணு** | = | பரமாணுவரை, |
| **एतत्** **ஏதத்** | = | இந்த, |
| **जगत्** **ஜக³த்** | = | ஜகத், |
| **सकलं** **ஸகலம்** | = | எல்லாம் (ப்ரஹ்மத்திலிருந்து உண்டாகி அதிலேயே இருந்து அதிலேயே லயத்தை யடைகிறபடியால்), |

| | | |
|---|---|---|
| **ब्रह्म** | = | பிரஹ்மமே (பிரஹ்மத்தைத் தவிர வேறில்லை). |
| **ப்³ரஹ்ம** | | (ஜீவனும் பிரஹ்மம், ஜத்தும் பிரஹ்மம் என்றிருப்பதினால்), |
| **श्रुतेः** | = | உபநிஷத் பிரமாணத்தினால், |
| **ஶ்ருதே꞉** | | |
| **ब्रह्म** | = | பிரஹ்மம், |
| **ப்³ரஹ்ம** | | |
| **अद्वितीयं** | = | இரண்டாவதற்றது, |
| **அத்³விதீயம்** | | |
| **ब्रह्म एव** | = | பிரஹ்மம் தான், |
| **ப்³ரஹ்ம ஏவ** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **प्रबुद्धमतयः** | = | நன்கு அறிந்துகொண்ட புத்தி யுள்ளவர்கள், |
| **ப்ரபு³த்³த⁴மதய꞉** | | |
| **स्फुटं** | = | பூராவாக (வாஸனையுள்பட), |
| **ஸ்பு²டம்** | | |
| **संत्यक्तवाह्याः** | = | வெளி (அனாத்ம) பதார்த்தங்களை நன்கு |
| **ஸந்த்யக்தவாஹ்யா꞉** | | விட்டு விட்டவர்களாக, |
| **ब्रह्मीभूय** | = | பிரஹ்மமாக ஆகி, |
| **ப்³ரஹ்மீபூ⁴ய** | | |
| **संतत चिदानन्दात्मना एव** | = | இடைவிடாமல் ஞான ஆனந்த ஸ்வரூபமாகவே |
| **ஸந்தத சிதா³னந்தா³த்மனா ஏவ** | | தான், |
| **ध्रुवम्** | = | நிச்சயமாக, |
| **த்⁴ருவம்** | | |
| **वसन्ति** | = | இருப்பார்கள். |
| **வஸந்தி** | | |

**जहि मलमयकोशेऽहंधियोत्थापिताशां**
**प्रसभमलिकल्पे लिङ्गदेहेऽपि पश्चात् ।**
**निगमगदितकीर्तिं नित्यमानन्दमूर्तिं**
**स्वयमिति परिचीय ब्रह्मरूपेण तिष्ठ ॥ ३९७ ॥**

**ஜஹி மலமயகோஶே(அ)ஹந்தி⁴யோத்தா²பிதாஶாம்**
**ப்ரஸப⁴மலிகல்பே லிங்க³தே³ஹே(அ)பி பஶ்சாத் ।**
**நிக³மக³தி³தகீர்திம் நித்யமானந்த³மூர்திம்**
**ஸ்வயமிதி பரிசீய ப்³ரஹ்மரூபேண திஷ்ட² ॥ 397 ॥**

| | | |
|---|---|---|
| **मलमय कोशे** மலமய கோஶே | = | மலம் நிறைந்த (அன்னமய) கோசத்தில், |
| **अहं धिया** அஹம் தி⁴யா | = | 'நான்' என்ற எண்ணத்தினுல், |
| **उत्थापिताशां** உத்தா²பிதாஶாம் | = | கிளப்பப்பட்டிருக்கும் ஆசையை, |
| **प्रसभं** ப்ரஸப⁴ம் | = | பலாத்காரமாக, |
| **जहि** ஜஹி | = | போக்கடித்து விடு, |
| **पश्चात्** பஶ்சாத் | = | (ஸ்தூலதேஹ ஸம்பந்தமான ஆசை நீங்கிய) பிறகு, |
| **अनिकल्पे** அனிகல்பே | = | காற்றுப்போலுள்ள (கண்ணுக்குத் தெரியாமல் எப்பொழுதும் சலித்துக் கொண்டிருக்கிற), |
| **लिङ्गदेहे** லிங்க³தே³ஹே | = | (பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம் என்கிற மூன்று கோசங்கள் அடங்கிய) ஸூக்ஷ்ம சரீரத்திலும், |
| **अपि** அபி | = | கூட (நான் என்ற எண்ணத்தையும் அதினுல் ஏற்படும் அபிமானத்தையும் விட்டு விடு. அநித்ய மாயுள்ள ஆனந்தமய கோசத்தில் அபிமானம் தானுகவே நிவிருத்தி யாகிவிடும். பிறகு), |
| **निगम गदित कीर्तिं** நிக³ம க³தி³த கீர்திம் | = | வேதத்தில் சொல்லப்பட்ட (ஸத், சித் ஆனந்தம், என்றெல்லாம் பலவாறுக) கீர்த்தி யுள்ளதான, |
| **नित्यं आनन्द मूर्तिं** நித்யம் ஆனந்த³ மூர்திம் | = | எப்பொழுதும் ஆனந்த ஸ்வரூபமான பிரஹ்மத்தை, |
| **स्वयं** ஸ்வயம் | = | தான், |
| **इति** இதி | = | என்று, |
| **परिचीय** பரிசீய | = | அறிந்து அனுபவித்து, |
| **ब्रह्मरूपेण** ப்³ரஹ்மரூபேண | = | பிரஹ்ம ஸ்வரூபமாகவே, |

**तिष्ठ** = நிலைத்திரு.
**திஷ்ட²** (397)

**शवाकारं यावद् भजति मनुजः तावदशुचिः**
**परेभ्यः स्यात् क्लेशो जननमरणव्याधिनिरयाः ।**
**यदाऽऽत्मानं शुद्धं कलयति शिवाकारं अचलं**
**तदा तेभ्यो मुक्तो भवति हि तदाह श्रुतिरपि ॥ ३९८ ॥**

**ஶவாகாரம் யாவத்³ ப⁴ஜதி மனுஜ: தாவத³ஶுசி:**
**பரேப்⁴ய: ஸ்யாத் க்லேஶோ ஜனனமரணவ்யாதி⁴நிரயா: ।**
**யதா³(ஆ)த்மானம் ஶுத்³த⁴ம் கலயதி ஶிவாகாரம் அசலம்**
**ததா³ தேப்⁴யோ முக்தோ ப⁴வதி ஹி ததா³ஹ ஶ்ருதிரபி ॥ 398 ॥**

**मनुजः** = மனுஷ்யன்,
**மனுஜ:**
**यावत्** = எதுவரையில்,
**யாவத்**
**शव आकारं** = பிணமாக உள்ளதை (இந்த ஸ்தூல சரீரத்தை)
**ஶவ ஆகாரம்** தன் ஸ்வரூபமாக,
**भजति** = எண்ணிக்கொண்டு இருக்கிறானோ,
**ப⁴ஜதி**
**तावत्** = அதுவரை (அவன்),
**தாவத்**
**अशुचिः** = அசுத்தமானவன் தான்,
**அஶுசி:**
**परेभ्यः** = பிறர்களிடமிருந்து,
**பரேப்⁴ய:**
**क्लेशः** = துன்பம்,
**க்லேஶ:**
**स्यात्** = ஏற்படும்,
**ஸ்யாத்**
**जनन मरणव्याधि निरयाः** = (இந்த லோகத்தில்) பிறப்பு, இறப்பு, பிணி,
**ஜனன மரண வ்யாதி⁴நிரயா:** (மறு லோகத்தில்) நரகம் இவைகளும் (ஏற்படும்),
**यदा** = எப்பொழுது (ஸாதன சதுஷ்டயத்தைக் கை
**யதா³** கொண்டு ஸத்குருவை யண்டி வேதாந்த சிரவண மனனங்களால்),
**आत्मानं** = தன்னை,
**ஆத்மானம்**

| | | |
|---|---|---|
| शुद्धं<br>ஶுத்³த⁴ம் | = | சுத்தமாக (ஸ்தூலம், ஸூக்ஷ்மர், காரணம் என்னும் மூன்று சரீரங்களுக்கும் அப்பால் பட்டதாக), |
| शिवाकारं<br>ஶிவாகாரம் | = | ஆனந்த ஸ்வரூபமாக, |
| अचलं<br>அசலம் | = | அசைவற்றதாக அல்லது நன்கு கவனமாக, |
| कलयति<br>கலயதி | = | அறிகிறுனே, |
| तदा<br>ததா³ | = | அப்பொழுது, |
| तेभ्यो<br>தேப்⁴யோ | = | அவைகளிடமிருந்து (துன்பம், பிறப்பு முதலியவைகளிடமிருந்து), |
| मुक्तः<br>முக்த: | = | விடுபட்டவனுக, |
| भवति<br>ப⁴வதி | = | ஆகிவிடுகிறுன், |
| हि<br>ஹி | = | என்பது பிரஸித்தம், |
| तत्<br>தத் | = | அந்த விஷயத்தை, |
| श्रुतिः<br>ஶ்ருதி: | = | (சாந்தோக்ய உபநிஷத்) சுருதியும், |
| अपि<br>அபி | = | கூட, |
| आह<br>ஆஹ | = | சொல்கிறது. |

ஸ்தூல சரீரம் தனிப்பட்ட முறையில் சைதன்ய ஸ்வரூபமாக இல்லாததால் பிணம்தான். மலம் நிறைந்த அசுத்தமான சரீரத்தை நான் என்று எண்ணுகிறவனும் அசுத்தன்தான். சுருதியும் என்பதால் அநுபவமும் ஆசார்யர்களும் சொல்கிறுர்கள் என்ற அர்த்தம் கிடைக்கிறது **तदपि श्रुतिराह தத³பி ஶ்ருதிராஹ** அதையும் சுருதி சொல்கிறது என்றும் அர்த்தம் கொள்ளலாம். **(398)**

## 34. இரண்டற்ற நிலை

**(அவதாரிகை)** 'சுத்தமாக' என்று சொன்னதை விஸ்தரிக்கிறுர்:

स्वात्मन्यारो पिताशेषाभासवस्तु निरासतः ।
स्वयमेव परं ब्रह्म पूर्ण अद्वयं अक्रियम् ॥ ३९९ ॥

**ஸ்வாத்மன்யாரோ பிதாஶேஷாபா⁴ஸவஸ்து நிராஸத꞉ ।**
**ஸ்வயமேவ பரம் ப்³ரஹ்ம பூர்ண அத்³வயம் அக்ரியம் ॥ 399 ॥**

| | | |
|---|---|---|
| स्वात्मनि<br>ஸ்வாத்மனி | = | தன் ஆத்மாவினிடத்தில், |
| आरोपित<br>ஆரோபித | = | ஏற்றிய (கல்பிக்கப்பட்ட) |
| अशेष<br>அஶேஷ | = | எல்லா, |
| आभास<br>ஆபா⁴ஸ | = | வெறும் தோற்றமான, |
| वस्तु<br>வஸ்து | = | (அஹங்காரம் முதலிய) வஸ்துக்களை, |
| निरासतः<br>நிராஸத꞉ | = | விலக்கி விடுவதினால், |
| स्वयं एव<br>ஸ்வயம் ஏவ | = | தான் தானே, |
| परं<br>பரம் | = | மேலானதாய், |
| पूर्णं<br>பூர்ணம் | = | நிறைந்ததாய், |
| अद्वयं<br>அத்³வயம் | = | இரண்டற்றதாய், |
| अक्रियं<br>அக்ரியம் | = | எவ்வித கிரியையும் அற்றதாயுமுள்ள, |
| ब्रह्म<br>ப்³ரஹ்ம | = | பிரஹ்மம் (தான் என்ற அனுபவம் ஏற்படும்) (399) |

**(அவதாரிகை)** முதலில் மிகுந்த பிரயாஸை எடுத்துக்கொண்டு பிரபஞ்சத் தோற்றத்தை விலக்கி ஸமாதியை அப்யஸித்து வந்தால் அதிலேயே நிலைத்தபின் தானாகவே பிரபஞ்சத் தோற்றம் முயல் கொம்பு போலாகிவிடும் என்பதை கூறுகிறார்:-

समाहितायां सति चित्तवृत्तौ परात्मनि ब्रह्मणि निर्विकल्पे ।
न दृश्यते कश्चिदयं विकल्पः प्रजल्पमात्रः परिशिष्यते ततः ॥ ४०० ॥

**ஸமாஹிதாயாம் ஸதி சித்தவ்ருத்தௌ பராத்மனி ப்³ரஹ்மணி நிர்விகல்பே ।
ந த்³ருஶ்யதே கஶ்சித³யம் விகல்ப: ப்ரஜல்பமாத்ர: பரிஶிஷ்யதே தத: ॥ 400 ॥**

| | | |
|---|---|---|
| **परात्मनि** பராத்மனி | = | பரமாத்மாவாயுள்ள, |
| **निर्विकल्पे** நிர்விகல்பே | = | எவ்வித விகல்பமுமற்ற, |
| **ब्रह्मणि** ப்³ரஹ்மணி | = | பிரஹ்மமாகிற, |
| **सति** ஸதி | = | ஸத்பதார்த்தத்தில், |
| **चित्तवृत्तौ** சித்தவ்ருத்தௌ | = | மனதின் விருத்தி, |
| **समाहितायां** ஸமாஹிதாயாம் | = | நன்கு வைக்கப்பட்டதேயானால் (அதாவது நிர்விகல்ப ஸமாதி நிலை ஏற்பட்டதே யானல்), |
| **अयं** அயம் | = | இந்த (அக்ஞான் தசையில் காணப்படுகிற), |
| **विकल्प:** விகல்ப: | = | விகல்பம், |
| **कश्चित्** கஶ்சித் | = | எதுவும், |
| **न दृश्यते** ந த்³ருஶ்யதே | = | காணப்படுவதில்லை, |
| **तत:** தத: | = | பிறகு (அந்த விகல்பமெல்லாம்), |
| **प्रजल्पमात्रं** ப்ரஜல்பமாத்ரம் | = | வெறும் பேச்சாக மாத்திரம், |
| **परिशिष्यते** பரிஶிஷ்யதே | = | மிஞ்சிவிடுகிறது. (ஒன்றும் செய்ய சக்தியற்றதாகிவிடுகிறது.) |

முன்னல் ஸுகதுக்கங்களைக் கொடுத்துக்கொண்டிருந்த பிரபஞ்சம், பிரஹ்ம நிஷ்டனுக்குத் தோன்றியபோதிலும் ஆகாசத்தாமரைபோலும், விஷப்பல்லைப் பிடுங்கிய பாம்பு போலும், ஒரு காரியத்தையும் உண்டுபண்ணுவதில்லை. வஸ்து இல்லாமல் சொல்லும் ஞானமும் ஏற்படுவது விகல்பம் என்று யோக ஸூத்ரத்தில் கூறப்பட்டுள்ளது. அதுபோலாகிவிடும். **(400)**

## असत्कल्पो विकल्पोऽयं विश्वमित्येकवस्तुनि |
## निर्विकारे निराकारे निर्विशेषे भिदा कुतः ॥ ४०१ ॥

**அஸத்கல்போ விகல்போ(அ)யம் விஶ்வமித்யேகவஸ்துனி |**
**நிர்விகாரே நிராகாரே நிர்விஶேஷே பி⁴தா³ குதஃ ॥ 401 ॥**

**विश्वं** = ஜகத்,
**விஶ்வம்**
**इति** = என்ற,
**இதி**
**अयं** = இது,
**அயம்**
**असत्कल्पः** = இல்லாத வஸ்துவிற்கு ஸமானமான,
**அஸத்கல்பஃ**
**विकल्पः** = விகல்பமாயிருக்கிறது,
**விகல்பஃ**
**निर्विकारे** = எவ்வித மாறுதலுமில்லாத,
**நிர்விகாரே**
**निराकारे** = எவ்வித ரூபமுமில்லாத,
**நிராகாரே**
**निर्विशेषे** = எவ்வித விசேஷமுமில்லாத,
**நிர்விஶேஷே**
**एक वस्तुनि** = ஒரே வஸ்துவான பிரஹ்மத்தில்,
**ஏக வஸ்துனி**
**भिदा** = வேற்றுமை,
**பி⁴தா³**
**कुतः** = எங்கிருந்து ஏற்பட முடியும்?
**குதஃ**

எப்பொழுதும் பிரஹ்மஸ்வரூபத்திலேயே மனம் நன்கு நிலைத்து நிர்விகல்ப ஸமாதியிலிருப்பவர்களுக்கு ஒருபொழுதும் உலகம் தோன்றுவதில்லை. ஆனாலும் மற்றவர்களுக்கு உலகம் தோன்றுகிறது. இவர்களுக்கும் கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி போல ஞானம வந்ததும் மறைந்துவிடுகிறது. இதனால் தான் பிரபஞ்சத்தை முயல் கொம்புபோல அஸத் என்று சொல்லாமல் அஸத் கல்பம் (அஸத்தைப் போன்றது) என்று கூறுகிறார். தோன்றி மறைவதால் பிரபஞ்சம் மித்யை (பொய்யானது). மித்யையான பிரபஞ்சத்தால் பிரஹ்மம் அத்வைதம் என்பதற்கு பாதகமில்லை. ஆகையால் வாஸ்தவத்தில் பிரஹ்மஸ்வரூபததைக்காட்டிலும் வேறு வஸ்து இல்லை. பிரஹ்மஸ்வரூபத்திலும் வேற்றுமை இல்லை. **(401)**

**द्रष्टुदर्शनदृश्यादिभावशून्यैकवस्तुनि ।**
**निर्विकारे निराकारे निर्विशेषे भिदा कुतः ॥ ४०२ ॥**

**த்³ரஷ்டுத³ர்ஶனத்³ருஶ்யாதி³பா⁴வஶூன்யைகவஸ்துனி ।**
**நிர்விகாரே நிராகாரே நிர்விஶேஷே பி⁴தா³ குதः ॥ 402 ॥**

(அக்ஞானம் விலகிவிட்டபடியால் தன்மூலகமான),

**द्रष्टु** = பார்க்கிறவன்,
**த்³ரஷ்டு**
**दर्शन** = பார்வை,
**த³ர்ஶன**
**दृश्य** = பார்க்கப்படும். வஸ்து,
**த்³ருஶ்ய**
**आदि** = (பார்க்கும் கருவி) முதலான,
ஆதி³
**भाव** = வஸ்துக்கள்,
**பா⁴வ**
**शून्य** = இல்லாத,
**ஶூன்ய**
**एक** = ஒரே,
**ஏக**
**वस्तुनि** = வஸ்துவாயும்,
**வஸ்துனி**
**निर्विकारे** = விகாரமற்றதாயும்,
**நிர்விகாரே**
**निराकारे** = ரூபமற்றதாயும்,
**நிராகாரே**
**निर्विशेषे** = விசேஷமற்றதாயும் உள்ள பிரஹ்மத்தில்,
**நிர்விஶேஷே**
**भिदा** = வேற்றுமை,
**பி⁴தா³**
**कुतः** = எங்கிருந்துவரும்?
**குதः** **(402)**

**कल्पार्णव इवात्यन्तपरिपूर्णैकवस्तुनि ।**
**निर्विकारे निराकारे निर्विशेषे भिदा कुतः ॥ ४०३ ॥**

**கல்பார்ணவ இவாத்யந்தபரிபூர்ணைகவஸ்துனி ।**
**நிர்விகாரே நிராகாரே நிர்விஶேஷே பி⁴தா³ குதः ॥ 403 ॥**

| | | |
|---|---|---|
| **कल्पार्णवे**<br>**கல்பார்ணவே** | = | கல்பம் முடிந்து பிரளயம் ஏற்படும் போதுள்ள ஸமுத்திரத்தில், |
| **इव**<br>**இவ** | = | போல, |
| **अत्यन्त**<br>**அத்யந்த** | = | எல்லைமீறி, |
| **परिपूर्ण**<br>**பரிபூர்ண** | = | எங்கும் நிறைந்து, |
| **एक**<br>**ஏக** | = | ஒன்றுயிருக்கும், |
| **वस्तुनि**<br>**வஸ்துனி** | = | வஸ்துவாயும், |
| **निर्विकारे**<br>**நிர்விகாரே** | = | விகாரமற்றதாயும், |
| **निराकारे**<br>**நிராகாரே** | = | ரூபமற்றதாயும், |
| **निर्विशेषे**<br>**நிர்விஶேஷே** | = | விசேஷமற்றதாயும் உள்ள பிரஹ்மத்தில், |
| **भिदा**<br>**பி⁴தா³** | = | வேற்றுமை, |
| **कुतः**<br>**குத꞉** | = | எங்கிருந்துவரும்? |

**(403)**

**तेजसीव तमो यत्र विलीनं भ्रान्तिकारणम् ।**
**अद्वितीये परे तत्त्वे निर्विशेषे भिदा कुतः ॥ ४०४ ॥**

**தேஜஸீவ தமோ யத்ர விலீனம் ப்⁴ராந்திகாரணம் ।**
**அத்³விதீயே பரே தத்த்வே நிர்விஶேஷே பி⁴தா³ குத꞉ ॥ 404 ॥**

| | | |
|---|---|---|
| **भ्रान्तिकारणं**<br>**ப்⁴ராந்திகாரணம்** | = | பிராந்திக்குக்காரணமான, |
| **तमः**<br>**தம꞉** | = | அக்ஞானமாகிற இருட்டு, |
| **यत्र**<br>**யத்ர** | = | எதினிடத்தில், |
| **तमः**<br>**தம꞉** | = | இருட்டு, |

| | | |
|---|---|---|
| **तेजसी**<br>**தேஜஸீ** | = | பிரகாசத்தில் (லயித்துவிடுவது), |
| **इव**<br>**இவ** | = | போல, |
| **विलीनं**<br>**விலீனம்** | = | நன்கு லயமடைந்துவிடுகிறதோ (அந்த), |
| **अद्वितीये**<br>**அத்³விதீயே** | = | இரண்டாவதற்ற, |
| **परे**<br>**பரே** | = | உத்தமமான, |
| **तत्त्वे**<br>**தத்த்வே** | = | வாஸ்தவமான, |
| **निर्विशेषे**<br>**நிர்விஶேஷே** | = | விசேஷமில்லாததான பிரஹ்மத்தில், |
| **भिदा**<br>**பி⁴தா³** | = | வேற்றுமை, |
| **कुतः**<br>**குத:** | = | எங்கிருந்துவரும்? **(404)** |

(**அவதாரிகை**) எல்லாம் ஒன்றுகத்தெரியும்போது வேற்றுமைக்கு இடமில்லை யென்பதை நல்ல தூக்கத்தை திருஷ்டாந்தமாகச் சொல்லி தெளிவுபடுத்துகிறார்: -

**एकात्मके परे तत्त्वे भेदवार्ता कथं भवेत् ।**
**सुषुप्तौ सुखमात्रायां भेदः केनावलोकितः ॥ ४०५ ॥**

**ஏகாத்மகே பரே தத்த்வே பே⁴த³வார்தா கத²ம் ப⁴வேத் ।**
**ஸுஷுப்தௌ ஸுக²மாத்ராயாம் பே⁴த³: கேனாவலோகித: ॥ 405 ॥**

| | | |
|---|---|---|
| **एकात्मके**<br>**ஏகாத்மகே** | = | ஒரே ஸ்வரூபமாயுள்ள, |
| **परे**<br>**பரே** | = | மேலான, |
| **तत्त्वे**<br>**தத்த்வே** | = | தத்வத்தில், |
| **भेदवार्ता**<br>**பே⁴த³வார்தா** | = | வேற்றுமை என்ற பேச்சு, |
| **कथं**<br>**கத²ம்** | = | எப்படி, |

भवेत् = இருக்கமுடியும்?

ப⁴வேத்

सुखमात्रायां = ஸுகம் மாத்திரமாயிருக்கும்,

ஸுக²மாத்ராயாம்

सुषुप्तौ = நல்ல தூக்கத்தில்,

ஸுஷுப்தௌ

भेदः = வேற்றுமையானது,

பே⁴த³ः

केन = எவனுலாவது,

கேன

अवलोकितः = அனுபவிக்கப்பட்டதுண்டா?

அவலோகிதः

ஸுஷுப்தியில் ஞானத்தை உண்டுபண்ணும் மனம் அடங்கிவிட்டபடியால், ஆத்மா ஜடமானபடியால் ஞானம் ஏற்படுவதில்லை என்பது தார்க்கிகரின் கொள்கை. இது சரியல்ல நித்ய ஞான ஸ்வரூபனுன ஸ்வயம் பிரகாச ஆத்மா ஸுஷுப்தி யிலும் விளங்கிக்கொண்டுதான் இருக்கிறுன். ஆனுல் அறியப்படும் விஷயம் இல்லா ததால்தான் ஸுஷுப்தியில் ஞானம் ஏற்படுவதில்லை. இரண்டாவதுவஸ்து இருக்கு மாகில் அவசியம் பார்ப்பான் "ஆத்மா ஸ்வயம் ப்ரகாச நித்ய ஞான ஸ்வரூபனுக இருந்தாலும் இதைக்காட்டிலும் வேருக இரண்டாவது வஸ்து இல்லாததால் தான் ஆத்மா ஸுஷுப்தியில் அறிகிறதில்லை" என்ற இக்கருத்தை சுருதி கூறுகிறது

**यदै तन्न पश्यति पश्यन् वै तन्न पश्यति न तु तद्बितीयमस्ति ततोऽन्यद्विभक्तं यत्पश्येत् ॥**

**யதை³ தன்ன பஶ்யதி பஶ்யன் வை தன்ன பஶ்யதி ந து தத்³தி⁴தீயமஸ்தி ததோ(அ)ன்யத்³விப⁴க்தம் யத்பஶ்யேத் ॥**

ஸுஷுப்தியில் அக்ஞான மிருந்தாலும் அது ஆத்மசக்தி யானதாலும் அதிஷ் டானமான ஆத்மாவில் கல்பிதமானதாலும் ஆத்மாவைக்காட்டிலும் வேறல்ல எல்லா நிலைகளிலும் ஆத்மா இவ்வாருக இருந்தபோதிலும் எல்லாம் அடங்கியுள்ள ஸுஷுப்தியில் அத்வைதத்தை சுலபமாகப் புரிந்து கொள்ளக்கூடும் என்பது சுருதி யின் கருத்து ஒரு உத்தம அதிகாரி ஜாக்ரத் நிலையிலேயே ஸுஷுப்தி நிலையை நன்கு சிந்திப்பானேயானுல் அவனுக்கு ஸமாதி கைகூடி அந்தக்கரண விருத்தியைக் கொண்டே அக்ஞானத்தைப்போக்கி நிஷ்ப்ரபஞ்ச ப்ரஹ்மமாக ஆய்விடுவான். ஸுஷுப்தி, ஸமாதி இரண்டிலும் விக்ஷேப்மில்லை, ஆனுல் ஸுஷுப்தியில் ஆவரணம் உள்ளது ஸமாதியில் அதுவுமில்லை வாஸ்தவத்தில் த்வைத பிரபஞ்சம் இருக்குமானுல் ஸுஷுப்தியில் காணப்படும் அது இல்லாததால்தான் காணப்பட வில்லை. ஸுஷுப்தியில் அக்ஞானம் இருந்தபோதிலும் ஸமாதியில் நீங்கிவிடுகிற படியால் அதுவும் வாஸ்தவமல்ல. **(405)**

**न ह्यस्ति विश्वं परतत्त्वबोधात् सदात्मनि ब्रह्मणि निर्विकल्पे ।**
**कालत्रये नाप्यहिरीक्षितो गुणे न ह्यम्बुबिन्दुर्मृगतृष्णिकायाम् ॥ ४०६ ॥**

**ந ஹ்யஸ்தி விஶ்வம் பரதத்த்வபோ³தா⁴த் ஸதா³த்மனி**
**ப்³ரஹ்மணி நிர்விகல்பே ।**
**காலத்ரயே நாப்யஹிரீக்ஷிதோ கு³ணே ந**
**ஹ்யம்பு³பி³ந்து³ர்ம்ருக³த்ருஷ்ணிகாயாம் ॥ 406 ॥**

| | | |
|---|---|---|
| **परतत्त्वबोधात्** **பரதத்த்வபோ³தா⁴த்** | = | உத்தமமான தத்வத்தின் அறிவு (அனுபவம்) ஏற்பட்டுவிட்டால் (அக்ஞானம் அடியோடு நீங்கி விடுகிறபடியால்) |
| **सदात्मनि** **ஸதா³த்மனி** | = | ஸத் ஸ்வரூபமாயும், |
| **निर्विकल्पे** **நிர்விகல்பே** | = | விகல்பமற்றதாயுமுள்ள, |
| **ब्रह्मणि** **ப்³ரஹ்மணி** | = | பிரஹ்மத்தினிடத்தில், |
| **विश्वं** **விஶ்வம்** | = | ஜகத், |
| **न अस्ति हि** **ந அஸ்தி ஹி** | = | இல்லேதான், |
| **गुणे** **கு³ணே** | = | கயிற்றில், |
| **ईक्षितः** **ஈக்ஷிதঃ** | = | பார்க்கப்பட்ட, |
| **अहिः** **அஹிঃ** | = | பாம்பானது, |
| **कालत्रये अपि** **காலத்ரயே அபி** | = | (பார்ப்பதற்கு முன்னுலும், மறைந்தபிறகும், பார்க்கப்படும் காலத்திலும் ஆக) மூன்று காலங்களிலும்கூட, |
| **न** **ந** | = | இல்லவே இல்லே. (அப்படியே) |
| **मृगतृष्णिकायां** **ம்ருக³த்ருஷ்ணிகாயாம்** | = | (மானுக்கு தாஹத்தை யுண்டுபண்ணும் பொய்யான) கானல் ஜலத்தில், |
| **अम्बुबिन्दुः** **அம்பு³பி³ந்து³ঃ** | = | துளி ஜலம்கூட, |
| **न** **ந** | = | கிடையாது என்பது, |

**हि** = பிரஸித்தம்.

**ஹி**

நல்ல அறிவைக்கொண்டுதான் ஒரு வஸ்து இருப்பதையும் இல்லாததையும் தீர்மானிக்கவேண்டும். அக்ஞானத்தால் முன்னுல் தோன்றிக்கொண்டிருந்த பிரபஞ்சம் தத்வஞானத்தால் அக்ஞானம் விலகியதும் மறைந்துவிடுகிறது. ஆகவே அக்ஞானம் மூலமான பிரபஞ்சம் வாஸ்தவத்தில் முக்காலுமில்லெ ப்ரஹ்மம்தான் முக்காலுமுள்ளது என்பது தீர்மானம் இதுவரை எனக்கு கிளிஞ்சல் வெள்ளியாக தோன்றிக்கொண்டிருந்தது. ஒரு சந்திரன் இரண்டாகத் தோன்றியது என்று சொல்லும் இடத்தில் தோன்றியபோதிலும் கிளிஞ்சலும், இரு சந்திரர்களும் முக்காலுமில்லெ என்பதை அனுபவத்தில் தீர்மானிக்கிறேம்.

(**அவதாரிகை**) இதுவரை சொல்லிவந்த விஷயத்திற்கு யுக்தி, அனுபவம் மாத்திரம் பிரமாணமென்பதில்லை, வேதமே பிரமாணம்; அதையனுஸரித்துத்தான் யுக்தியும் அனுபவமும் இருக்கிறது என்கிறுர்: -

**मायामात्रमिदं द्वैतमद्वैतं परमार्थतः ।**
**इति ब्रूते श्रुतिः साक्षात्सुषुप्तावनुभूयते ॥ ४०५॥**

**மாயாமாத்ரமித³ம் த்³வைதமத்³வைதம் பரமார்த²த: ।**
**இதி ப்³ரூதே ஶ்ருதி: ஸாக்ஷாத்ஸுஷுப்தாவனுபூ⁴யதே ॥ 405॥**

**इदं** = இந்த (பார்க்கப்படுகிற),

**இத³ம்**

**द्वैतं** = இரண்டாயிருக்கும் தன்மை,

**த்³வைதம்**

**मायामात्रं** = வெறும் மாயைதான்,

**மாயாமாத்ரம்**

**अद्वैतं** = இரண்டற்று இருக்கும் தன்மைதான்,

**அத்³வைதம்**

**परमार्थतः** = வாஸ்தவமாயுள்ளது,

**பரமார்த²த:**

**इति** = என்று,

**இதி**

**श्रुतिः** = வேதம்,

**ஶ்ருதி:**

**साक्षात्** = நேராகவே,

**ஸாக்ஷாத்**

| | | |
|---|---|---|
| **ब्रूते** <br> **ப்³ரூதே** | = | சொல்கிறது. (அதுவேதான்), |
| **सुषुप्तौ** <br> **ஸுஷுப்தௌ** | = | நல்ல தூக்கத்தில், |
| **अनुभूयते** <br> **அனுபூ⁴யதே** | = | அனுபவிக்கப்படுகிறது. (புருஷனால் இயற்றப் படாமல் ஸ்வதஸ்ஸித்தமான நித்யமான வேதத்தையொட்டி நம் அனுபவம் இருக்கிற படியால் இதுபற்றி விவாதத்திற்கு இடமில்லை.) |

**(அவதாரிகை)** ஸுஷுப்தியில் எல்லாம் மறைந்தபோதிலும் அங்கு அக்ஞானம் இருப்பதாக,

**सुषुप्तिकाले सकले विलीने तमोऽभिभूतः सुखरूपमेति ॥**

**ஸுஷுப்திகாலே ஸகலே விலீனே தமோ(அ)பி⁴பூ⁴த: ஸுக²ரூபமேதி ॥**

என்று கைவல்யோபநிஷத்தில் கூறியிருப்பதால் ஸுஷுப்தியில் அத்வைதம் எப்படி தீர்மானிக்கமுடியும் என்ற கேள்விக்கு அந்த அக்ஞானம் அதிஷ்டானமான பிரஹ்மத்தில் கல்பிதமானதால் அதிஷ்டானத்தைக்காட்டிலும் ஆரோபித வஸ்து வேறல்லவாதலாலும் ஸமாதியில் அந்த அக்ஞானம் இல்லாத படியாலும், அத்வைதத்திற்கு விரோதமில்லை என்பதைக் கூறுகிறார்: -

**अनन्यत्वमधिष्ठानादारोप्यस्य निरीक्षितम् ।**
**पण्डितै रज्जुसर्पादौ विकल्पो भ्रान्तिजीवनः ॥ ४०८ ॥**

**அனன்யத்வமதி⁴ஷ்டா²நாதா³ரோப்யஸ்ய நிரீக்ஷிதம் ।**
**பண்டி³தை ரஜ்ஜுஸர்பாதௌ³ விகல்போ ப்⁴ராந்திஜீவன: ॥ 408 ॥**

| | | |
|---|---|---|
| **आरोप्यस्य** <br> **ஆரோப்யஸ்ய** | = | மேல் ஏற்றப்பட்ட (கல்பிக்கப்பட்ட) வஸ்துவிற்கு, |
| **अधिष्ठानात्** <br> **அதி⁴ஷ்டா²னத்** | = | அடிப்டை (அதிஷ்டான) பதார்த்தத்திலிருந்து, |
| **अनन्यत्वं** <br> **அனன்யத்வம்** | = | வேறுபடாத் தன்மையானது, |
| **पण्डितैः** <br> **பண்டி³தை:** | = | பண்டிதர்களால், |
| **रज्जुसर्पादौ** <br> **ரஜ்ஜுஸர்பாதௌ³** | = | கயிற்றில் தோன்றும் பாம்பு முதலிய விடங்களில், |
| **निरीक्षितं** <br> **நிரீக்ஷிதம்** | = | நன்கு பார்க்கப்பட்டிருக்கிறது, |

| | | |
|---|---|---|
| विकल्पः<br>விகல்ப: | = | விகல்பம் (தோற்றம்) என்பது, |
| भ्रान्तिजीवनः<br>ப்⁴ராந்திஜீவன: | = | பிராந்தியினுலேயே உயிரேற்பட்டுப் பிழைத்துக் கொண்டிருக்கிறது. (408) |

**चित्तमूलो विकल्पोऽयं चित्ताभावे न कश्चन ।**
**अतश्चित्तं समाधेहि प्रत्यग्रूपे परात्मनि ॥ ४०९ ॥**

**சித்தமூலோ விகல்போ(அ)யம் சித்தாபா⁴வே ந கஶ்சன ।**
**அதஶ்சித்தம் ஸமாதே⁴ஹி ப்ரத்யக்³ரூபே பராத்மனி ॥ 409 ॥**

| | | |
|---|---|---|
| अयं<br>அயம் | = | இந்த, |
| विकल्पः<br>விகல்ப: | = | விகல்பமானது, |
| चित्तमूलः<br>சித்தமூல: | = | சித்தத்தை மூலமாக (வேராக) உடையது, |
| चित्ताभावे<br>சித்தாபா⁴வே | = | சித்தம் இல்லையானுல் (வேலை செய்யவில்லை யானுல்), |
| कश्चन<br>கஶ்சன | = | எவ்வித விகல்பமும், |
| न<br>ந | = | கிடையாது, |
| अतः<br>அத: | = | ஆகையால், |
| प्रत्यग्रूपे<br>ப்ரத்யக்³ரூபே | = | உள்ளுள்ள ஆத்மஸ்வரூபமாயிருக்கும், |
| परात्मनि<br>பராத்மனி | = | பரபிரஹ்மத்தினிடத்தில், |
| चित्तं<br>சித்தம் | = | சித்தத்தை, |
| समाधेहि<br>ஸமாதே⁴ஹி | = | நன்கு வை (ஸமாதிநிலையில் இரு). (409) |

(**அவதாரிகை**) அவ்விதம் ஏற்படக்கூடிய ஸமாதி நிலையை வர்ணிக்கிறுர். இதுவரை சொல்லிவந்த ஸமாதியில் இரண்டாவது வஸ்து தோன்றும், ஆனுல் அது வாஸ்தவமில்லையென்ற ஞானமும் கூடவேயிருக்குமாதலால், அந்த ஸமாதியை "திருச்யானு வித்தம்" என்பார்கள். இப்பொழுது சொல்லும் ஸமாதியில் இரண்டாவது தோன்றுமல் ஆத்ம ஸ்வரூபானு ஸந்தானம் மாத்திரமிருப்பதால், இதை

**"சப்தானுவித்தம்"** என்பார்கள். இரண்டுவித ஸமாதிகளின் ஸ்வரூபம், பிரயோஜனம், இவை எல்லாம் **"ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம்"** என்கிற பிரகரண த்தில் 829 முதல் 872 வரை சுலோகங்களில் விஸ்தாரமாக ஸ்ரீமத் ஆசார்யாரவர்களே வர்ணித்திருக்கிறுர்கள்: -

**किमपि सततबोधं केवलानन्दरूपं**
**निरुपममतिवेलं नित्यमुक्तं निरीहम् ।**
**निरवधि गगनाभं निष्कलं निर्विकल्पं**
**हृदि कलयति विद्वान्ब्रह्म पूर्णं समाधौ ॥ ४१० ॥**

**கிமபி ஸததபோ³த⁴ம் கேவலானந்த³ரூபம்**
**நிருபமமதிவேலம் நித்யமுக்தம் நிரீஹம் ।**
**நிரவதி⁴ க³க³நாப⁴ம் நிஷ்கலம் நிர்விகல்பம்**
**ஹ்ருதி³ கலயதி வித்³வான்ப்³ரஹ்ம பூர்ணம் ஸமாதௌ⁴ ॥ 410 ॥**

**किं अपि** = ஏதோவொரு (வர்ணிக்கமுடியாததாய்),
**கிம் அபி**
**सततबोधं** = நித்யமான ஞான ஸ்வரூபமாய்,
**ஸததபோ³த⁴ம்**
**केवल आनन्दरूपं** = (துக்கக்கலப்பில்லாத) தனித்த ஆனந்த
**கேவல ஆனந்த³ரூபம்** ஸ்வருபமாய்,
**निरुपमं** = உபமானமற்றதாய்,
**நிருபமம்**
**आतिवेलं** = கரை கடந்ததாய் (பிரபஞ்சத்திற்கு மேல்பட்டதாய்),
**ஆதிவேலம்**
**नित्यमुक्तं** = எப்பொழுதும் (ஸம்ஸாரத்திலிருந்து)
**நித்யமுக்தம்** விடுபட்டதாய்,
**निरीहं** = (செயற்கையற்றதாய்) ஆசையற்றதாய்,
**நிரீஹம்**
**निरवधि** = (தேசம், காலம், வஸ்து என்னும் மூவித)
**நிரவதி⁴** எல்ஐலயற்றதாய்,
**गगनाभं** = ஆகாசம்போல் அஸங்கமாயும் நிர்மலமாயும்
**க³க³நாப⁴ம்** உள்ளதாய்,
**निष्कलं** = அவயவங்கள் அற்றதாய்,
**நிஷ்கலம்**
**निर्विकल्पं** = விகல்பங்களற்றதாய்,
**நிர்விகல்பம்**

**पूर्णं** = நிறைந்ததாய் உள்ள,

**பூர்ணம்**

**ब्रह्म** = பிரஹ்மத்தை,

**ப்³ரஹ்ம**

**विद्वान्** = அறிந்தவர்,

**வித்³வான்**

**समाधौ** = ஸமாதிநிஜலயில்,

**ஸமாதௌ⁴**

**हृदि** = ஹ்ருதயத்தில்,

**ஹ்ருதி³**

**कलयति** = அனுபவிக்கிறுர்.

**கலயதி** **(410)**

**प्रकृतिविकृतिशून्यं भावनातीतभावं**
**समरसं असमानं मानसंबन्धदूरम् ।**
**निगमवचनसिद्धं नित्यं अस्मत्प्रसिद्धं**
**हृदि कलयति विद्वान् ब्रह्म पूर्णं समाधौ ॥ ४११ ॥**

**ப்ரக்ருதிவிக்ருதிஶூன்யம் பா⁴வனுதீதபா⁴வம்**
**ஸமரஸம் அஸமானம் மானஸம்ப³ந்த⁴தூ³ரம் ।**
**நிக³மவசனஸித்³த⁴ம் நித்யம் அஸ்மத்ப்ரஸித்³த⁴ம்**
**ஹ்ருதி³ கலயதி வித்³வான் ப்³ரஹ்ம பூர்ணம் ஸமாதௌ⁴ ॥ 411 ॥**

**प्रकृतिविकृतिशून्यं** = காரணத்திற்கும் கார்யத்திற்கும் வேறுய்,

**ப்ரக்ருதிவிக்ருதிஶூன்யம்**

**भावनातीतभावं** = பாவஜனக்குமேல் போன ஸ்வபாவமுள்ளதாய்

**பா⁴வனுதீதபா⁴வம்** (தர்க்கத்திஞல் மட்டும் அறியமுடியாததாய்),

**समरसं** = ஸமரஸமாய் (எப்பொழுதும் ஒரே

**ஸமரஸம்** நிஜலயிலிருப்பதாய்)

**असमानं** = ஈடற்றதாய்,

**அஸமானம்**

**मानसंबन्धदूरं** = (பிரத்யக்ஷம் முதலான) பிரமாணங்களின்

**மானஸம்ப³ந்த⁴தூ³ரம்** ஸம்பந்தத்திலிருந்து வெகு தூரத்திலிருப்பதாய்,

**निगमवचनसिद्धं** = வேதத்தின் வாக்கியங்களிஞலேயே இருப்பதாக

**நிக³மவசனஸித்³த⁴ம்** தீர்மானிக்கப்பட்டிருப்பதாய்,

**नित्यं** = எப்பொழுதும் (அல்லது, நித்யமாய்),

**நித்யம்**

**अस्मत्प्रसिद्धं** = 'நான்' என்று பிரஸித்தமாய்,

**அஸ்மத்ப்ரஸித்³த⁴ம்**

**पूर्णं** = நிறைந்ததாய் உள்ள,

**பூர்ணம்**

**ब्रह्म** = பிரஹ்மத்தை,

**ப்³ரஹ்ம**

**विद्वान्** = அறிந்தவர்,

**வித்³வான்**

**समाधौ** = ஸமாதி தசையில்,

**ஸமாதௌ⁴**

**हृदि** = ஹ்ருதயத்தில்,

**ஹ்ருதி³**

**कलयति** = அனுபவிக்கிறுர்.

**கலயதி** **(411)**

**अजरममरमस्ताभास वस्तुस्वरूपं**
**स्तिमितसलिलराशि प्रख्य माख्याविहीनम् ।**
**शमितगुणविकारं शाश्वतं शान्तमेकं**
**हृदि कलयति विद्वान्ब्रह्म पूर्णं समाधौ ॥ ४१२ ॥**

**அஜரமமரமஸ்தாபா⁴ஸ வஸ்துஸ்வரூபம்**
**ஸ்திமிதஸலிலராஶி ப்ரக்²ய மாக்²யாவிஹீனம் ।**
**ஶமிதகு³ணவிகாரம் ஶாஶ்வதம் ஶாந்தமேகம்**
**ஹ்ருதி³ கலயதி வித்³வான்ப்³ரஹ்ம பூர்ணம் ஸமாதௌ⁴ ॥ 412 ॥**

**अजरं** = ஜரை (குறைவு) இல்லாததாய்,

**அஜரம்**

**अमरं** = மரணமில்லாததாய்,

**அமரம்**

**अस्ताभासवस्तुस्वरूपं** = தோற்றமெல்லாம் நீங்கி வாஸ்தவமாய்

**அஸ்தாபா⁴ஸவஸ்துஸ்வரூபம்** இருக்கும் ஸ்வரூபத்தை யுடையதாய்

**स्तिमितसलिलराशि प्रख्यं** = அசைவற்றிருக்கும் ஸமுத்திரத்தைப்

**ஸ்திமிதஸலிலராஶி ப்ரக்²யம்** போலுள்ளதாய்,

**आख्याविहीनं** = எவ்வித பெயரும் அற்றதாய்,

**ஆக்²யாவிஹீனம்**

**शमितगुणविकारं** = குணமும் மாறுதலும் விலகினதாய்,

**ஶமிதகு³ணவிகாரம்**

**शाश्वतं** = என்றுமிருப்பதாய்,

**ஶாஶ்வதம்**

**शान्तं** = அடங்கினதாய்,

**ஶாந்தம்**

**एकं** = ஒன்ருகவே யிருப்பதாய்,

**ஏகம்**

**पूर्णं** = நிறைந்ததாய் உள்ள,

**பூர்ணம்**

**ब्रह्म** = பிரஹ்மத்தை,

**ப்³ரஹ்ம**

**समाधौ** = ஸமாதிநிஜலயில்,

**ஸமாதௌ⁴**

**विद्वान्** = ஞானியானவர்,

**வித்³வான்**

**हृदि** = ஹ்ருதயத்தில்,

**ஹ்ருதி³**

**कलयति** = அனுபவிக்கிருர்.

**கலயதி** **(412)**

**(அவதாரிகை)** வித்வான் இவ்விதம் அனுபவிப்பதுபோல் நீயும் ஸமாதி செய்து அனுபவிக்கலாமென்று சிஷ்யனை சொல்கிருர்: -

**समाहितान्तःकरणः स्वरूपे विलोकयात्मानमखण्डवैभवम् ।**
**विच्छिन्द्धि बन्धं भवगन्धगन्धिलं यत्तेन पुंस्त्वं सफली कुरुष्व ॥ ४१३ ॥**

**ஸமாஹிதாந்த꞉கரண꞉ ஸ்வரூபே**
**விலோகயாத்மானமக²ண்ட³வைப⁴வம் ।**
**விச்சி²ந்த்³தி⁴ ப³ந்த⁴ம் ப⁴வக³ந்த⁴க³ந்தி⁴லம்**
**யத்தேன பும்ஸ்த்வம் ஸப²லீ குருஷ்வ ॥ 413 ॥**

**स्वरूपे** = ஸ்வஸ்வரூபத்தில்,

**ஸ்வரூபே**

**समाहितान्तःकरणः** = அசைவில்லாமல் நன்கு நிறுத்தி வைக்கப்பட்ட

**ஸமாஹிதாந்த꞉கரண꞉** அந்த꞉கரணத்தை யுடையவனுய்,

**अखण्डवैभवं** = துண்டுபடாத மேன்மையுடைய,

**அக²ண்ட³வைப⁴வம்**

**आत्मानं** = ஆத்மதத்வத்தை,

**ஆத்மானம்**

| | | |
|---|---|---|
| **विलोकय** | = | நன்கு பார்த்து அனுபவி, |
| **விலோகய** | | |
| **भवगन्धगन्धिलं** | = | ஸம்ஸார வாஸனையோடு கூடிய, |
| **ப³ந்த⁴ம் ப⁴வக³ந்த⁴க³ந்தி⁴லம்** | | |
| **बन्धं** | = | பந்தத்தை, |
| **ப³ந்த⁴ம்** | | |
| **विच्छिन्द्धि** | = | நன்கு அறுத்து விடு, |
| **விச்சி²ந்த்³தி⁴** | | |
| **पुंस्त्वं** | = | (முன் 2, 4, 5 சுலோகங்களில் சொன்னபடி |
| **பும்ஸ்த்வம்** | | எவ்வளவோ புண்ணியம் செய்து சிரமப்பட்டு ஸம்பாதிக்கப்பட்டிருக்கிற) புருஷத்தன்மையை, |
| **यत्तेन** | = | பிரயாஸை எடுத்துக்கொண்டு, |
| **யத்தேன** | | |
| **सफली कुरुष्व** | = | பிரயோஜனமுள்ளதாகச் செய்துகொள். |
| **ஸப²லீ குருஷ்வ** | | **(413)** |

**सर्वोपाधिविनिर्मुक्तं सच्चिदानन्दमद्वयम् ।**
**भावयात्मानमात्मस्थं न भूयः कल्पसेऽध्वने ॥ ४१४ ॥**

**ஸர்வோபாதி⁴விநிர்முக்தம் ஸச்சிதா³னந்த³மத்³வயம் ।**
**பா⁴வயாத்மானமாத்மஸ்த²ம் ந பூ⁴ய꞉ கல்பஸே(அ)த்⁴வனே ॥ 414 ॥**

| | | |
|---|---|---|
| **सर्वोपाधिविनिर्मुक्तं** | = | (காரண சரீரம், ஸூக்ஷ்மசரீரம், ஸ்தூல சரீரம் |
| **ஸர்வோபாதி⁴விநிர்முக்தம்** | | ஆகிய) எல்லா உபாதிகளிலிருந்தும் (அவைகளின் வாஸனைகளிலிருந்தும்) நன்கு விடுபட்டதாய், |
| **सत् चित् आनन्दं** | = | ஸத் (எப்பொழுதுமுள்ளதாய்) சித் |
| **ஸத் சித் ஆனந்த³ம்** | | (ஞானஸ்வரூபமாய்) ஆனந்தம் (துக்கமே கலக்காத ஆனந்தமாய்) உள்ள, |
| **अद्वयं** | = | இரண்டற்ற, |
| **அத்³வயம்** | | |
| **आत्मानं** | = | ஆத்மாவை, |
| **ஆத்மானம்** | | |
| **आत्मस्थं** | = | தன்னிடத்திலேயே இருப்பதாக, |
| **ஆத்மஸ்த²ம்** | | |
| **भावय** | = | தெரிந்து அனுபவி, |
| **பா⁴வய** | | |
| **भूयः** | = | மறுபடியும், |
| **பூ⁴ய꞉** | | |

**अध्वने** = ஸம்ஸாரவழிக்கு,

**அத்⁴வனே**

**न कल्पसे** = வரமாட்டாய்.

**ந கல்பஸே** **(414)**

### 34. சரீரத்தை கவனிக்காதே

(**அவதாரிகை**) இவ்வித ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டபிறகும் பிராரப்த கர்மத்தினுல் சரீரம் இருக்கத்தான் இருக்கும். ஆனுல் ஒருவன் வெளிச்சத்தில் நிற்கும்போது கீழே விழும் நிழல் அவஜனப்போலவே கை கால் உள்ளதாகத் தோன்றின போதிலும் அந்த நிழலில் "நான்" என்ற எண்ணம் கொள்வதில்ஜல. அதுபோல ஞானி இந்த சரீரத்தில் கொஞ்சமேனும் அபிமானம் வைக்கமாட்டான் என்று 5 சுலோகங்களில் எடுத்துக் காட்டுகிருர்: -

**छायेव पुंसः परिदृश्यमानमाभासरूपेण फलानुभूत्या ।**
**शरीरमाराच्छववन्निरस्तं पुनर्न संधत्त इदं महात्मा ॥ ४१५ ॥**

**சா²யேவ பும்ஸః பரித்³ருஶ்யமானமாபா⁴ஸரூபேண ப²லானுபூ⁴த்யா ।**
**ஶரீரமாராச்ச²வவந்நிரஸ்தம் புனர்ன ஸந்த⁴த்த இத³ம் மஹாத்மா ॥ 415 ॥**

**महात्मा** = (ஆத்ம ஸாக்ஷாத்கார மடைந்திருக்கும்) மஹான்,

**மஹாத்மா**

**फलानुभूत्या** = உத்தமபலஞகிய ஸ்வரூப சைதன்யத்தை

**ப²லானுபூ⁴த்யா** அனுபவித்துவரும் காரணத்தினுல்,

**पुंसः** = மனிதனுடைய,

**பும்ஸः**

**छाया इव** = நிழஜலப்போல,

**சா²யா இவ**

**आभासरूपेण** = வெறும் தோற்றமான ரூபத்துடன்,

**ஆபா⁴ஸரூபேண**

**परिदृश्यमानं** = தோன்றி காணப்பட்டுக்கொண்டிருப்பதும்,

**பரித்³ருஶ்யமானம்**

**शववत्** = சவம் போலவே,

**ஶவவத்**

**आरात्** = தூரத்திலேயே,

**ஆராத்**

**निरस्तं** = போட்டுவிடப்பட்டதாயுமுள்ள,

**நிரஸ்தம்**

| | | |
|---|---|---|
| **इदं**<br>**இத³ம்** | = | இந்த, |
| **शरीरं**<br>**ஶரீரம்** | = | சரீரத்தை, |
| **पुनः**<br>**புன:** | = | மறுபடியும், |
| **न संधत्ते**<br>**ந ஸந்த⁴த்தே** | = | ('நான்' என்று) நினைத்துப் பார்க்கமாட்டார். |

பிராரப்த கர்மா முடிந்து சரீரம் விழும் வரை சரீரம் தோன்றிக் கொண்டிருந்த போதிலும். பாம்பால கழட்டப்பட்ட பாம்புச் சட்டையைப் போலும் நிழலைப்போலும் அதில் ஞானிக்கு அபிமானம் இருக்காது. **(415)**

**सततविमलबोधानन्दरूपं स्वमेत्य त्यज जडमलरूपोपाधिमेतं सुदूरे ।**
**अथ पुनरपि नैव स्मर्यतां वान्तवस्तु स्मरण विषयभूतं कल्पते कुत्सनाय ॥ ४१६ ॥**

**ஸததவிமலபோ³தா⁴னந்த³ரூபம் ஸ்வமேத்ய த்யஜ**
**ஜட³மலரூபோபாதி⁴மேதம் ஸுதூ³ரே ।**
**அத² புனரபி நைவ ஸ்மர்யதாம் வாந்தவஸ்து ஸ்மரண**
**விஷயபூ⁴தம் கல்பதே குத்ஸனாய ॥ 416 ॥**

| | | |
|---|---|---|
| **सततविमलबोधानन्दरूपं**<br>**ஸததவிமலபோ³தா⁴னந்த³ரூபம்** | = | எப்பொழுதும் நிர்மலமாயுள்ள ஞான ஸ்வரூபமாயும் ஆனந்தஸ்வரூபமாயுமுள்ள, |
| **स्वं**<br>**ஸ்வம்** | = | தன்னை, |
| **एत्य**<br>**ஏத்ய** | = | அடைந்து (அறிந்து), |
| **जडमलरूपोपाधिं**<br>**ஜட³மலரூபோபாதி⁴ம்** | = | மாம் மலமாய் இருக்கும் தன்மையுள்ள உபாதியாகிய, |
| **एतं**<br>**ஏதம்** | = | இந்த சரீரத்தை, |
| **सुदूरे**<br>**ஸுதூ³ரே** | = | வெகு தூரத்திலேயே, |
| **त्यज**<br>**த்யஜ** | = | விட்டுவிடு, |
| **अथ**<br>**அத²** | = | அதன் பிறகு, |

| | | |
|---|---|---|
| **पुनः अपि** <br> **புன: அபி** | = | மறுபடியும் (அது), |
| **न एव स्मर्यतां** <br> **ந ஏவ ஸ்மர்யதாம்** | = | நினைக்கப்படவே கூடாது, |
| **वान्तवस्तु** <br> **வாந்தவஸ்து** | = | (தானோ, வேறொருவரோ) வாயிலெடுத்த பதார்த்தம், |
| **स्मरण विषयभूतं** <br> **ஸ்மரண விஷயபூ⁴தம்** | = | ஞாபகத்திற்கு விஷயமாக ஆனால், |
| **कुत्सनाय** <br> **குத்ஸனாய** | = | வெறுப்புக்கே, |
| **कल्पते** <br> **கல்பதே** | = | காரணமாகும். |

சரீரத்தில் நான் என்றோ, என்னுடையது என்றோ சிறிதும் அபிமானமில்லாமல் இதைப்பற்றிய நினைவேயில்லாமல் இருக்க வேண்டும். **(416)**

**(அவதாரிகை)** ஆத்ம ஸாக்ஷாத்காரம் மேலும், பலப்பட்டு பிரஹ்மவித் வரிஷ்ட நிலை ஏற்படும்போது அவர் பிரஹ்மத்திலேயே லயித்திருப்பதினால் இந்த சரீரம் இருந்தபோதிலும் அவருக்கு இருப்பதாகவே தோன்றாது என்கிறார்: -

**समूलमेतं परिदाह्य वह्नौ सदात्मनि ब्रह्मणि निर्विकल्पे ।**
**ततः स्वयं नित्यविशुद्धबोधानन्दात्मना तिष्ठति विद्वरिष्ठः ॥ ४१७ ॥**

**ஸமூலமேதம் பரிதா³ஹ்ய வஹ்னௌ ஸதா³த்மனி**
**ப்³ரஹ்மணி நிர்விகல்பே ।**
**தத: ஸ்வயம் நித்யவிஶுத்³த⁴போ³தா⁴னந்தா³த்மனா**
**திஷ்ட²தி வித்³வரிஷ்ட²: ॥ 417 ॥**

| | | |
|---|---|---|
| **सदात्मनि** <br> **ஸதா³த்மனி** | = | எக்காலத்திலும் பாதிக்கப்படாமலிருக்கும் தன்மையுள்ள, |
| **निर्विकल्पे** <br> **நிர்விகல்பே** | = | எவ்வித விகல்பமற்ற, |
| **ब्रह्मणि** <br> **ப்³ரஹ்மணி** | = | ப்ரஹ்மமாகிற, |
| **वह्नौ** <br> **வஹ்னௌ** | = | அக்னியில், |
| **एतं** <br> **ஏதம்** | = | இந்த சரீரத்தை, |

| | | |
|---|---|---|
| **समूलं**<br>**ஸமூலம்** | = | (அக்ஞான மாகிற) வேருடன், |
| **परिदाह्य**<br>**பரிதா³ஹ்ய** | = | நன்கு எரித்துவிட்டு, |
| **ततः**<br>**ததः** | = | அதன்பிறகு, |
| **नित्यविशुद्वबोधानन्दात्मना**<br>**நித்யவிஶுத்³வபோ³தா⁴னந்தா³த்மனு** | = | நித்யமாய் நன்கு சுத்தமாயுள்ள ஞான ஆனந்தஸ்வரூபமாகவே, |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தானே, |
| **विद्वरिष्ठः**<br>**வித்³வரிஷ்ட²ः** | = | பிரஹ்மவித்துக்களுக்குள் மிகவும் மேலானவர், |
| **तिष्ठति**<br>**திஷ்ட²தி** | = | நிலைத்திருப்பார். |

(417)

## प्रारब्धसूत्रग्रथितं शरीरं प्रयातु वा तिष्ठतु गोवि स्रक् ।
## न तत्पुनः पश्यति तत्त्ववेत्ताऽऽनन्दात्मना ब्रह्मणि लीनवृत्तिः ॥ ४१८ ॥

**ப்ராரப்³த⁴ஸூத்ரக்³ரதி²தம் ஶரீரம் ப்ரயாது வா**
**திஷ்ட²து கோ³வி ஸ்ரக் ।**
**ந தத்புனः பஶ்யதி தத்த்வவேத்தா(ஆ) நந்தா³த்மனு**
**ப்³ரஹ்மணி லீனவ்ருத்திः ॥ 418 ॥**

| | | |
|---|---|---|
| **गोः**<br>**கோ³ः** | = | பசுமாட்டுக்கு, |
| **स्रक्**<br>**ஸ்ரக்** | = | தும்பு (அல்லது அலங்காரத்திற்காக கழுத்தில் போடப்பட்டிருக்கும் மாலை) எப்படியோ, |
| **इव**<br>**இவ** | = | அதைப்போல, |
| **प्रारब्ध सूत्र ग्रथितं**<br>**ப்ராரப்³த⁴ ஸூத்ர க்³ரதி²தம்** | = | பிராரப்த கர்மாவாகிற கயிற்றில் கட்டப்பட்டிருக்கிற, |
| **शरीरं**<br>**ஶரீரம்** | = | சரீரமானது, |
| **प्रयातु**<br>**ப்ரயாது** | = | போகட்டும் (மரணமடையட்டும்), |
| **तिष्ठतु वा**<br>**திஷ்ட²து வா** | = | அல்லது இருக்கட்டும் (ஜீவித்திருக்கட்டும்), |

| | | |
|---|---|---|
| **तत्** | = | அதை, |
| **தத்** | | |
| **तत्त्व वेत्ता** | = | தத்வத்தை அறிந்தவராய், |
| **தத்த்வ வேத்தா** | | |
| **आनन्दात्मना** | = | ஆனந்தஸ்வரூபமாய், |
| **ஆனந்தா³த்மனு** | | |
| **ब्रह्मणि** | = | பிரஹ்மத்தினிடத்தில், |
| **ப்³ரஹ்மணி** | | |
| **लीनवृत्तिः** | = | லயமடைந்த விருத்தியுள்ளவராயிருப்பவர், |
| **லீனவ்ருத்தி꞉** | | |
| **पुनः** | = | மறுபடியும், |
| **புன꞉** | | |
| **न पश्यति** | = | பார்க்கமாட்டார். |
| **ந பஶ்யதி** | | |

பசுமாடு தன் கழுத்தில் போடப்பட்டிருக்கும் கயிறையோ அலங்கார மாலைகளையோ, தன்னுடையதாக எண்ணுது இது போல ஞானி பிராரப்தகர்மாவினுல் இயங்கிக் கொண்டிருக்கும் இந்த சரீரம் இருந்தாலும், போனுலும் இதை கவனிக்க மாட்டான். ஆனுல் உலகத்தார் இந்த சரீரத்தை ஞானியைச் சேர்ந்ததாகவும் இதனுல் அவன் ஸுகதுக்கங்களையடைவதாகவும் எண்ணுவார்கள். ஸுகத்தையடைவதற்காகத்தான் மனம் வெளியில் செல்கிறது. ஞானிக்கு நித்ய ஸுகம் கிடைத்து ஆனந்தஸ்வரூபமாகவே விளங்குவதால் அவன் மனம் வெளியில் செல்லாது. **(418)**

## अखण्डानन्दमात्मानं विज्ञाय स्वस्वरूपतः ।
## किमिच्छत्कस्य वा हेतोर्देहं पुष्णाति तत्त्ववित् ॥ ४१९ ॥

**அக²ண்டா³னந்த³மாத்மானம் விஜ்ஞாய ஸ்வஸ்வரூபத꞉ ।**
**கிமிச்ச²த்கஸ்ய வா ஹேதோர்தே³ஹம் புஷ்ணுதி தத்த்வவித் ॥ 419 ॥**

| | | |
|---|---|---|
| **अखण्डानन्दं** | = | பரிபூர்ண ஆனந்தரூபமான, |
| **அக²ண்டா³னந்த³ம்** | | |
| **आत्मानं** | = | ஆத்மாவை, |
| **ஆத்மானம்** | | |
| **स्वस्वरूपतः** | = | தன்னுடைய ஸ்வரூபமாக, |
| **ஸ்வஸ்வரூபத꞉** | | |
| **विज्ञाय** | = | நன்கு அறிந்துகொண்ட பிறகு, |
| **விஜ்ஞாய** | | |

| | | |
|---|---|---|
| **तत्त्ववित्**<br>**தத்த்வவித்** | = | வாஸ்தவத் தன்மையை அறிந்தவர், |
| **किं**<br>**கிம்** | = | எதை, |
| **इच्छन्**<br>**இச்ச²ன்** | = | விரும்பி, |
| **कस्य**<br>**கஸ்ய** | = | எந்த, |
| **हेतोर्बा**<br>**ஹேதோர்பா³** | = | காரணத்திற்காக (பிரயோஜனத்தை உததேசித்துத்) தான், |
| **देहं**<br>**தே³ஹம்** | = | சரீரத்தை, |
| **पुष्णाति**<br>**புஷ்ணாதி த** | = | போஷணை செய்வார்? |

அக்ஞானி ஸுகத்தையடைய சரீரத்தைக்கொண்டே முயற்சிக்கவேண்டியிருப்பதனுல் சரீரத்தை போஷிப்பான். ஞானி ஸுகத்தை அடைந்துவிட்டபடியால் முயற்சிக்கு தேவையில்லை. இதனுல் ஞானி சரீரத்தை போஷிக்க மாட்டான். **(419)**

## 36. ஜீவன்முக்த லக்ஷணம்

**संसिद्धस्य फलं त्वेतज्जीवन्मुक्तस्य योगिनः ।**
**बहिरन्तः सदानन्दरसास्वादनमात्मनि ॥ ४२० ॥**

**ஸம்ஸித்³த⁴ஸ்ய ப²லம் த்வேதஜ்ஜீவன்முக்தஸ்ய யோகி³னঃ ।**
**ப³ஹிரந்தঃ ஸதா³னந்த³ரஸாஸ்வாத³னமாத்மனி ॥ 420 ॥**

| | | |
|---|---|---|
| **योगिनः**<br>**யோகி³னঃ** | = | ஸாதனங்களை கிரமப்படி அனுஷ்டித்து வந்தவராய், |
| **संसिद्धस्य**<br>**ஸம்ஸித்³த⁴ஸ்ய** | = | நன்கு ஸித்தியடைந்திருக்கும், |
| **जीवन्मुक्तस्य**<br>**ஜீவன்முக்தஸ்ய** | = | ஜீவித்திருக்கும்போதே முக்தியடைந்திருப்பவருக்கு, |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | தன்னிடத்தில், |
| **बहिः**<br>**ப³ஹிঃ** | = | வெளியிலும் (ஸமாதி நிலையிலிருந்து வெளியில் வந்தபோதும்), |

**अन्तः** = உள்ளேயும் (ஸமாதி நிலையிலிருக்கும் போதும்),

**அந்தঃ**

**सदा** = எப்பொழுதும்,

**ஸதா³**

**आनन्दरसास्वादनं** = ஆனந்த ரஸத்தை அனுபவிப்பதாகிய,

**ஆனந்த³ரஸாஸ்வாத³னம்**

**एतत् तु** = இதுவே,

**ஏதத் து**

**फलं** = பலன்.

**ப²லம்**

விவேகம் வைராக்யம் முதலான நான்கு ஸாதனங்களையும் கைக்கொண்டு குருவையண்டி வேதாந்த சிரவண மன்ன நிதித்யாஸனங்களை அனுஷ்டித்து ஆத்மானுபவம் பெற்று அதிலேயே மனதை நிலைநிறுத்தி ஜீவித்துக்கொண்டு இருக்கும்பொழுதே முக்தனான ஞானிக்கு எப்பொழுதும் ஸமாதியிலும் வியுத்தான நிலையிலும் ஆனந்தானுபவம் இருக்கும். அக்ஞானம் நீங்கிவிட்டபடியால் அவனுக்கு வியுத்தான நிலையிலும் ஆனந்தம் மறையாது. உலகத்தாரும் அவனைக்கண்டு புன்சிரிப்பு, பார்வை முதலியவைகளைக் கொண்டு பூர்ணானந்தம் அனுபவிப்பதைத் தெரிந்து கொள்வார்கள். **(420)**

(**அவதாரிகை**) முன் 376, 377, 378 சுலோகங்களில் வைராக்கியமும் ஞானமும், பக்ஷிக்கு இரண்டு இரக்கைகள்போல, மோக்ஷமடைவதற்கு முக்கிய ஸாதனங்கள் என்றும் 379ல் அவ்விரண்டும் ஏற்பட்டால் ஸகலவிதமான கிரியைகளையும் விட்டு விட்டிருக்கும் நிலை ஏற்படுமென்றும் சொல்லப்பட்டு இருக்கிறது. இம் மூன்றும் தனித்தனியான ஸமமான காரணம் அல்லவென்பதையும், இம் மூன்றுக்குள்ளும் ஒன்றுக்கொன்று காரியகாரணபாவம் உள்ளது என்பதையும் இங்கு தெளிவாய்ச் சொல்லி, அந்த கிரியைகளிலிருந்து நிவிருத்தியினால் மேலே கண்ட ஆனந்தானுப வம் ஏற்பட்டு உத்கிருஷ்டமான சாந்தியேற்படுகிறது என்கிறார்: -

**वैराग्यस्य फलं बोधो बोधस्योपरतिः फलम् ।**
**स्वानन्दानुभवाच्छान्तिरेषैवोपरतेः फलम् ॥ ४२१ ॥**

**வைராக்³யஸ்ய ப²லம் போ³தோ⁴ போ³த⁴ஸ்யோபரதிঃ ப²லம் ।**
**ஸ்வானந்தா³னுப⁴வாச்சா²ந்திரேஷைவோபரதேঃ ப²லம் ॥ 421 ॥**

**वैराग्यस्य** = வைராக்கியத்தினுடைய,

**வைராக்³யஸ்ய**

**फलं** = பலன் (பிரயோஜனம்),

**ப²லம்**

| | | |
|---|---|---|
| बोधः<br>போ³த⁴: | = | ஆத்மதத்வ ஞானம், |
| बोधस्य<br>போ³த⁴ஸ்ய | = | ஞானத்தினுடைய, |
| फलं<br>ப²லம் | = | பலன், |
| उपरतिः<br>உபரதி: | = | வெளி விஷயங்களிலிருந்து நிவிருத்தியாதல், |
| उपरतेः<br>உபரதே: | = | அந்த நிவிருத்தியின், |
| फलं<br>ப²லம் | = | பலன், |
| स्वानन्दानुभवात्<br>ஸ்வானந்தா³னுப⁴வாத் | = | தன் ஸ்வரூப ஆனந்தத்தை அனுபவிப்பதனுல் ஏற்படும், |
| एषा<br>ஏஷா | = | இந்த, |
| शान्तिः<br>ஶாந்தி: | = | சாந்தி (அடங்குதல்), |
| एव<br>ஏவ | = | தான். |

ஆரம்பத்தில் கூறப்பட்ட விவேகம் முதலான ஸாதன சதுஷ்டயத்திலும் வைராக்யம், உபரதி, சாந்தி இவை காணப்படுகிறது. ஆனுல் ப்ரஹ்மவிசாரத்திற்கு ஸாதனமான அந்த வைராக்யமும் உபரதியும் சாந்தியும் அப்பொழுது ஸாமான்ய மாக இருந்தாலும் போதும்.இப்பொழுதுதான் அவை பூர்ணமாகின்றன. முன்னுல் முயற்சியுடன் ஸம்பாதிக்கவேண்டிய ஸாதனங்கள் இப்பொழுது தானுகவே நிலை பெற்றுவிடுகின்றன விசாரம் செய்யும்பொழுது விஷயங்களில் ஆசைய யற்றிருப்பது தான் வைராக்யம் என்பது. இப்பொழுது வாஸனையும் விலகும் பொழுது வைராக்யம் பூர்ணமாகி ஏற்படுகிறது. வைராக்யாதி ஸாதனங்களுடன் ஒருவன் விசாரம் செய்தும் ஞானம் ஏற்படவில்லையானுல் அவனுக்கு வைராக்யம் பூர்ணமாகவில்லை யென்ற தான் சொல்லவேண்டும். இவன் வைராக்யம் நிலைபெற முயற்சி செய்யவேண்டும். வைராக்யம் பூர்ணமானுல் கட்டாயம் ஞானம் ஏற்பட்டே தீரும். ஆகவே பூர்ணமான வைராக்யத்தின் பலன் போதம். ஆத்ம ஸாக்ஷாத்காரம்.

ஞானத்தின் பலன் உபரதி ஸாதன சதுஷ்டயத்திலும் சமாதிஷட்கத்தில் உபரதி காணப்படுகிறது. வெளிப்பதார்த்தங்களின் எண்ணம் மனதில் ஏற்படாமலிரு ப்பதுதான் உபரதி. விசாரம் செய்யும்பொழுது போக்யவஸ்துக்களை நினையாமல் இருக்கலாமேதவிற வெளிச் சிந்தையே இல்லாமலிருக்க முடியாது. இப்பொழுது நிதித்யாஸனத்தால் மனதில் அநாத்மவிருத்தி இல்லாமல் செய்துவிடலாம். ஆகவே

பூர்ணமான உபரதி ஞானத்தின்பலன் ஸாமான்யமான உபரதி ஞானத்திற்கு ஸாதனம். இத்தகைய உபரதியின் பலன் ஆத்மாநந்தத்தால் ஏற்படும் சாந்தி. முன்னுல் சமம் (சாந்தி) தமம் இவைகளின் பலனுக உபரதி கூறப்பட்டது. இங்கு உபரதி பூர்ணமானபிறகு இதன் பலனுக சாந்தி கூறப்படுகிறது. இது போல் முன்னுல் விவேகம் பரோக்ஷமாக இருந்தது. இப்பொழுது விவேகம் அபரோக்ஷமாகிவிடுகிறது. ஆகவே பூர்ணமான வைராக்யம் ஏற்பட்டு வாஸனையும் விலகியவுடன் ஆத்ம ஞானம் வந்து பூர்ணமான உபரதியும் அதன்மூலம் ஆநந்தானுபவமும் சாந்தியும் ஏற்படுகிறது. **(421)**

**(அவதாரிகை)** ஆத்மஞானத்தின் பலன் உபரதியென்றும் உபரதியின் பலன் ஆனந்தானுபவமூலமாய் சாந்தியென்றும் சொன்னதையே கொஞ்சம் விஸ்தரித்து நான்கு சுலோகங்களில் சொல்கிருர்: -

**निवृत्तिः परमा तृप्तिरानन्दोऽनुपमः स्वतः ।**
**दृष्टदुःखेष्वनुद्वेगो विद्यायाः प्रस्तुतं फलम् ॥ ४२२ ॥**

**நிவ்ருத்திः பரமா த்ருப்திரானந்தோ³(அ)னுபமः ஸ்வதः ।**
**த்³ருஷ்டது³ःகே²ஷ்வனுத்³வேகோ³ வித்³யாயாः ப்ரஸ்துதம் ப²லம் ॥ 422 ॥**

**विद्यायाः** = ஆத்மஸாக்ஷாத்காரத்தினுடைய,
**வித்³யாயாः**

**प्रस्तुतं** = பிரஸித்தமாகக் காணப்படுகின்ற,
**ப்ரஸ்துதம்**

**फलं** = பலன்: -
**ப²லம்**

(1) **निवृत्तिः நிவ்ருத்திः** எல்லா வெளி வியாபாரங்களிலிருந்து நிவிருத்தி யடைவது, (செய்யவேண்டியது ஒன்றும் பாக்கியில்லாததால் ஒன்றும் செய்யாமலிருத்தல்),

(2) **परमा பரமா** உத்தமமான, **तृप्तिः த்ருப்தி**: (இனிமேல் செய்யவேண்டியதோ அடையவேண்டியதோ யாதொன்றும் கிடையாது. செய்யவேண்டியதைச் செய்தாய் விட்டது. அடைய வேண்டியதை அடைந்தாய்விட்டது. நான் தன்யன் என்று எண்ணி அதனால் ஏற்படும் ஸுகம்.

(3) **स्वतः ஸ்வதः** தாளுகவே (வேறு விஷயத்தையோ, நிமித்தத்தையோ கருவி யையோ எதிர்பாராமல் ஏற்படும்), **अनुपमः அனுபமः** நிகரற்ற, **आनन्दः ஆனந்த³ः** ஆனதானுபவம்,

(4) **दृष्टदुःखेषु த்³ருஷ்டது³ःகே²ஷு** (பிராரப்த கர்ம வசத்தினுல்) தென்படும் துக்கங்கள் ஏற்படும்போது), **अनुद्वेगः அனுத்³வேகः** பதட்டமில்லாமை (கவலைப் படாமலிருத்தல்.)

தத்வஞானத்திற்கு நான்கு பலன்கள். 1. நிவிருத்தி 2. பரமதிருப்தி 3. ஒப்பற்ற ஆனந்தம் 4. துக்கங்களைக் கண்டு மனதில் தாபம் ஏற்படாத நிலை.

1. ஞானிக்கு செய்யவேண்டியது பாக்கி ஒன்றும் இல்லாததால் ஒரு காரியத்தி லும் ஈடுபடாமல் ஒதுங்கியிருத்தல் நிவிருத்தி.

2. செய்யவேண்டியதைச் செய்துவிட்டேன். அடைய வேண்டியதை அடைந்து விட்டேன். இனி எனக்கு செய்ய வேண்டியதோ, அடையவேண்டியதோ ஒன்றும் பாக்கியில்லை. நான் தன்யன் என்ற மனநிறைவு பரமதிருப்தி.

3. விஷயத்தை எதிர்பாராமல் தானுகவே ஏற்படும் அழிவற்ற, எல்லையற்ற ஸுகம் ஒப்பற்ற ஆனந்தம்.

4. பிராரப்த கர்மாக்களால் துக்கம் ஏற்படும்பொழுது மனதில் தாபம் இல்லாமை.

அக்ஞானி துக்கம் வரும்பொழுது "ஐயோ! நான் மஹாபாபி. துன்பத்தை யனுபவிக்கிறேன். என்னை என்ன செய்ய" என்று அலறுவான் இது விவேகம்போல் தோன்றலாம். ஆனுலும் இந்த விவேகம் முற்பிறவிகளில் இருக்குமானுல் பாபத்தைச் செய்யாமலிருப்பான். இந்த நிலை வந்திருக்காது. இந்த விவேகம் பயனுள் ளதாக ஆகும். பாபங்களை தைரியமாகச்செய்து விட்டு இப்போது வருந்துவதில் என்ன பயன். ஆகையால் இது தமோகுணத்தின் காரியமான பிராந்தி. இது ஞானிக்கு ஏற்படாது. **(422)**

**यत्कृतं भ्रान्तिवेलायां नानाकर्म जुगुप्सितम् ।**
**पश्चान्नरो विवेकेन तत्कथं कर्तुमर्हति ॥ ४२३ ॥**

**யத்க்ருதம் ப்⁴ராந்திவேலாயாம் நானாகர்ம ஜுகு³ப்ஸிதம் ।**
**பஶ்சான்னரோ விவேகேன தத்கத²ம் கர்துமர்ஹதி ॥ 423 ॥**

**भ्रान्तिवेलायां** = பிராந்தியிருக்கும் ஸமயத்தில்,
**ப்⁴ராந்திவேலாயாம்**

**जुगुप्सितं** = லஜ்ஜைப்படக்கூடியதாக,
**ஜுகு³ப்ஸிதம்**

**नाना** = பலவிதமாக,
**நானு**

| | | |
|---|---|---|
| यत्<br>யத் | = | எந்த, |
| कर्म<br>கர்ம | = | கார்யம், |
| कृतं<br>க்ருதம் | = | செய்யப்பட்டதோ, |
| तत्<br>தத் | = | அதை, |
| पश्चात्<br>பஶ்சாத் | = | பின்னால், |
| विवेकेन<br>விவேகேன | = | விவேகத்துடனேயே, |
| नरः<br>நர: | = | மனிதன், |
| कर्तु<br>கர்து | = | செய்வதற்கு, |
| कथं<br>கத²ம் | = | எப்படி, |
| अर्हति<br>அர்ஹதி | = | முடியும்? (423) |

**(அவதாரிகை)** அவிவேகத்திற்கும் விவேகத்திற்கும் இத்தனை வித்யாஸம் இருக்கும்பொழுது விவேகத்தின் பலனான ஞானத்திற்கும் அக்ஞானத்திற்கும் எத்தனை வித்யாஸம் இருக்கும் என்பதைக் கூறுகிறார்: -

**विद्याफलं स्यादसतो निवृत्तिः प्रवृत्तिरज्ञानफलं तदीक्षितम् ।**
**तज्ज्ञाज्ञयोर्यन्मृगतृष्णिकादौ नो चेद्विदो दृष्टफलं किमस्मात् ॥ ४२४ ॥**

**வித்³யாப²லம் ஸ்யாத³ஸதோ நிவ்ருத்தி:**
**ப்ரவ்ருத்திரஜ்ஞானப²லம் ததீ³க்ஷிதம் ।**
**தஜ்ஜ்ஞாஜ்ஞயோர்யன்ம்ருக³வ்ருஷ்ணிகாதௌ³**
**நோ சேத்³விதோ³ த்³ருஷ்டப²லம் கிமஸ்மாத் ॥ 424 ॥**

| | | |
|---|---|---|
| विद्याफलं<br>வித்³யாப²லம் | = | ஞானத்தின் பலன், |
| असतः<br>அஸத: | = | வாஸ்தவமில்லாத (அநாத்ம) பதார்த்தத்திலிருந்து, |

| | | |
|---|---|---|
| **निवृत्तिः**<br>**நிவ்ருத்திः** | = | விலகுவதே, |
| **स्यात्**<br>**ஸ்யாத்** | = | ஆகும், |
| **यत्**<br>**யத்** | = | அக்ஞானத்தின் பலன், |
| **प्रवृत्तिः**<br>**ப்ரவ்ருத்திः** | = | பிரவிருத்தி (ஆகும்), |
| **यत्**<br>**யத்** | = | எது (எந்த வித்யாஸம்), |
| **मृगवृष्णिकादौ**<br>**ம்ருக³வ்ருஷ்ணிகாதௌ³** | = | கானல் ஜலம் (கயிற்றில பாம்பு, சிப்பியில் வெள்ளி) முதலியவிடங்களில் (பார்க்கப் பட்டு இருக்கிறதோ), |
| **तत्**<br>**தத்** | = | அதுவே (பொதுவாக), |
| **तज्ज्ञ अज्ञयोः**<br>**தஜ்ஜ்ஞ அஜ்ஞயோः** | = | பதார்த்த ததவத்தை அறிந்தவனுக்கும் அறியாதவனுக்கும் (உள்ளதாக), |
| **ईक्षितं**<br>**ஈக்ஷிதம்** | = | பார்க்கப்பட்டிருக்கிறது, |
| **नो चेत्**<br>**நோ சேத்** | = | அவ்விதம் இல்லையானல், |
| **विदः**<br>**வித³ः** | = | அறிந்தவனுக்கு, |
| **अस्मात्**<br>**அஸ்மாத்** | = | இதைவிட, |
| **दृष्टफलं**<br>**த்³ருஷ்டப²லம்** | = | அறியப்படும் பலன், |
| **किं**<br>**கிம்** | = | வேறு என்ன உண்டு? |

கானல் (ஸூரியகிரணம்) தான் ஜலமாகத் தோன்றுகிறது. வாஸ்தவத்தில் இங்கு தண்ணீர் இல்லை என்பதை அறிந்தவன் தண்ணீரைத்தேடி அங்கு அலைய மாட்டான். அறியாதவன் தான் அங்கு செல்வான். இவனுக்கு அலைச்சல்தான மிச்சமே தவிற தண்ணீர் கிடைக்காது. இதுபோல் ஆத்மஸ்வரூப ஆனந்தத்தை அறியாதவன் உலகை உண்மை என்று எண்ணி ஸுகமடைவதற்காக எத்தனையோ காரியங்களைச் செய்கிறன். ஒன்றிலும் நித்யஸுகம் கிடைப்பதில்லை. ஸ்வரூபானந்ததை அறிந்தவன் உலகைப் பொய் என்று எண்ணுவதால் அதில் முனையமாட்டான். (424)

**(அவதாரிகை)** ஞானிக்கு பிரவிருத்திக்குக் காரணமில்லாததாலும் அவன் பிரவர்த்திக்காமல் ஒதுங்கிவிடுகிறான் என்பதைக் கூறுகிறுர்: -

**अज्ञानहृदयग्रन्थेर्विनाशो यद्यशेषतः ।**
**अनिच्छोर्विदुषः किं नु प्रवृत्तेः कारणं स्वतः ॥ ४२५ ॥**

**அஜ்ஞானஹ்ருத³யக்³ரந்தே²ர்விநாஶோ யத்³யஶேஷத: ।**
**அனிச்சோ²ர்வித³ுஷ: கிம் நு ப்ரவ்ருத்தே: காரணம் ஸ்வத: ॥ 425 ॥**

**अज्ञानहृदय ग्रन्थे:** = அக்ஞனத்தினால் புத்தியில் ஏற்படும் முடிச்சுக்கு
**அஜ்ஞானஹ்ருத³ யக்³ரந்தே²** (அத்யாஸத்திற்கு),
**विनाश:** = நாசமானது,
**விநாஶ:**
**अशेषत:** = மீதமன்னியில்,
**அஶேஷத:**
**यदि** = ஏற்பட்டிருக்குமேயாஞல், (அப்பொழுது),
**யதி³**
**स्वत:** = தாஞக,
**ஸ்வத:**
**अनिच्छो:** = (அத்யாஸத்திஞல் ஏற்படக்கூடிய) ஆசையற்ற,
**அனிச்சோ²:**
**विदुष:** = அறிவாளிக்கு,
**வித³ுஷ:**
**प्रवृत्ते:** = பிரவிருத்தி செய்வதற்கு,
**ப்ரவ்ருத்தே:**
**कारणं** = காரணம்,
**காரணம்**
**किं नु** = ஏதேனும் இருக்கமுடியுமா?
**கிம் நு**

உலகில் நல்ல காரியமோ, கெட்டகாரியமோ எதிலும் பிரவர்த்திப்பதற்கு இச்சைதான் காரணம்.

**प्रयोजनमनुद्दिश्य न मन्दोपि प्रवर्तते**

**ப்ரயோஜனமனுத்³தி³ஶ்ய ந மந்தோ³பி ப்ரவர்ததே**

(பலஊ விரும்பாமல் முட்டாளும் காரியம் செய்யமாட்டான்) என்று கூறுவது வழக்கம். மோக்ஷத்தில் இச்சையுள்ளவன்தான் விசாரம் செய்கிறன். முமுக்ஷுத்வ மும் (மோக்ஷத்தில் இச்சையும்) ஸாதனமாக கூறப்பட்டிருக்கிறது. ஆத்மானந்தத்

தையறியாதவன் விஷய ஸுகத்தில் ஆசையால் அதையடைய முயற்சிக்கிறுன். விஷயங்கள் மூலம் ஸுகம் கிடைக்காது என்பதையறிந்து வைராக்யம் ஏற்பட்டபின் வெளி விஷயங்களில் ஆசை நீங்கிவிட்டதால் வெளி பிரவிருத்தி நின்றுவிடுகிறது. ஆனுலும் மோக்ஷ இச்சையும் இருப்பதால் சாஸ்த்ரீயமான சிரவண மனன நிதித் யாஸனுதி காரியங்களில் பிரவர்த்திக்கிறுன். ஆகவே மோக்ஷ இச்சையும் முக்தி ஸாதனங்களில் பிரவர்த்திப்பதும் அக்ஞான தசையில்தான் இச்சை என்பது அந்தக் கரணதர்மம். இது அத்யாஸத்தால் ஏற்படுகிறது. ஆத்மஞானம் ஏற்பட்டு அக்ஞானம் விலகி அத்யாஸம் நீங்கி ஆத்மானந்தமடைந்தபின் பலன் ஏற்பட்டு விட்டபடியால் இவனுக்கு மோக்ஷ இச்சையும் இல்லாதபடியால் அந்த பிரவிருத்தியுமில்ஜல. உள் விஷயமாகவோ வெளிவிஷயமாகவோ பிரவிருத்திக்குக் காரணமான இச்சை யா தொன்று மில்லாததால் ஒரு பிரவிருத்தியுமில்லாமல் நிஷ்க்ரியமான ஆத்ம ஸ்வரூ பமாகவே இருப்பது என்ற நிவிருத்தி பிரஹ்ம வித்யையின் திருஷ்டபலன். **(425)**

**(அவதாரிகை)** முன் 421 வது சுலோகத்தில் கண்ட வைராக்கியம், ஞானம், உபரதி இவைகள் பரிபூர்ணமாய் ஏற்பட்டு விட்டது. என்று எப்படி தன்ஞலேயே அறிந்துகொள்ளமுடியும் என்பதை காட்டுகிறுர்: -

**वासनानुदयो भोग्ये वैराग्यस्य तदावधिः ।**
**अहंमावोदयाभावो बोधस्य परमावधिः ।**
**लीनवृतेरनुत्पत्तिर्मर्यादो परतेस्तु सा ॥ ४२६ ॥**

**வாஸனுநுத³யோ போ⁴க்³யே வைராக்³யஸ்ய ததா³வதி⁴ঃ ।**
**அஹம்மாவோத³யாபா⁴வோ போ³த⁴ஸ்ய பரமாவதி⁴ঃ ।**
**லீனவ்ருதேரனுத்பத்திர்மர்யாதோ³ பரதேஸ்து ஸா ॥ 426 ॥**

(எப்பொழுது),

| | | |
|---|---|---|
| **भोग्ये** | = | போகத்திற்கு விஷயமான பதார்த்தம் |
| **போ⁴க்³யே** | | இருக்கும்போது, |
| **वासना अनुदयः** | = | (நல்லது, கெட்டது என்ற) வாஸஜன |
| **வாஸனு அனுத³யঃ** | | ஏற்படாமலிருக்கிறதோ, |
| **तदा** | = | அப்பொழுதுதான், |
| **ததா³** | | |
| **वैराग्यस्य** | = | வைராக்யத்திற்கு, |
| **வைராக்³யஸ்ய** | | |
| **अवधिः** | = | எல்ஜல, |
| **அவதி⁴ঃ** | | |
| **अहं माव उदय अभावः** | = | 'நான்' என்கிற எண்ணத்தின் கிளம்புதல் |
| **அஹம் மாவ உத³ய அபா⁴வঃ** | | இல்லாமலிருப்பது, |

| | | |
|---|---|---|
| **बोधस्य**<br>**போ³த⁴ஸ்ய** | = | ஆத்மக்ஞானத்தின், |
| **परमावधिः**<br>**பரமாவதி⁴:** | = | மேலான எல்லே, |
| **लीनवृतेः**<br>**லீனவ்ருதே:** | = | (பிரஹ்மத்தில்) லயமான விருத்திக்கு, |
| **अनुत्पत्तिः**<br>**அனுத்பத்தி:** | = | (மறுபடியும் வேறு விஷயத்தில்) வெளிக் கிளம்பாமலிருப்பது (எதுவோ), |
| **सा तु**<br>**ஸா து** | = | அதுதான், |
| **उपरते**<br>**உபரதே** | = | உபரதியின், |
| **मर्यादा**<br>**மர்யாதா³** | = | எல்லே. |

நான் என்ற எண்ணம் தோன்றுமலிருப்பது ஞானத்தின் எல்லே. ஞானிக்கு பிரஹ்மத்தில் நான் என்ற எண்ணம் தோன்றுகிறதே எனில் அப்படியல்ல.

**अहं ब्रह्मास्मि**

**அஹம் ப்³ரஹ்மாஸ்மி**

என்பதற்கு நான் பிரஹ்மம் என்று அர்த்தமல்ல. "திருடன் என்று எதை எண்ணி னேனே அது மரக்கட்டை" என்பது போல் 'நான்' என்று எதை எண்ணினேனே அது பிரஹ்மம் என்று பொருள். ஆகையால் ஞானிக்கு ஒன்றிலும் 'நான்' என்ற எண்ணம் கிடையாது. அல்லது பஞ்சகோசங்களில் நான் என்ற எண்ணம் தோன்றுவதில்லே என்பதாகப் பொருள் கூறலாம். பால், தயிருகி, வெண்ணேயாகி நெய்யாகிறது. பின்னுல் இந்த நெய் பாலாக மாறுமா? இதுபோல் ப்ரஹ்மானந்தஸ்வரூபத்தில் லயமடைந்த மனம் விஷயத்தை நோக்கி கிளம்புவதில்லே. இதுதான் உபரதியின் எல்லே. **(426)**

**(அவதாரிகை)** இம் மூன்றும் ஸித்தித்து பிரஹ்மாநந்தானுபவம் ஏற்பட்டிரு க்கும் ஞானியின் நிலேயை வர்ணிக்கிருர்: -

**ब्रह्माकारतया सदा स्थिततया निर्मुक्तवाह्यार्थी-**
**रन्यावेदितभोग्यभोगकलनो निद्रालुवद्बालवत् ।**
**स्वप्नालोकितलोकवज्जगदिदं पश्यन्क्वचिल्लब्धधी-**
**रास्ते कश्चिदनन्तपुण्यफलमुग्धन्यः स मान्यो भुवि ॥ ४२७ ॥**

**ப்³ரஹ்மாகாரதயா ஸதா³ ஸ்தி²ததயா நிர்முக்தவாஹ்யார்தீ²-**
**ரன்யாவேதி³தபோ⁴க்³யபோ⁴க³கலனோ நித்³ராலுவத்³பா³லவத் ।**
**ஸ்வப்னலோகிதலோகவஜ்ஜக³தி³த³ம் பஶ்யன்க்வசில்லப்³த⁴தீ⁴-**
**ராஸ்தே கஶ்சித³னந்தபுண்யப²லமுக்³த⁴ன்ய: ஸ மான்யோ பு⁴வி ॥ 427 ॥**

| | | |
|---|---|---|
| **ब्रह्माकारतया** ப்³ரஹ்மாகாரதயா | = | பிரஹ்மஸ்வரூபமாகவே, |
| **सदा** ஸதா³ | = | எப்பொழுதும், |
| **स्थिततया** ஸ்தி²ததயா | = | நிலைத்திருக்கும் தன்மையினால், |
| **निर्मुक्तवाह्यार्थधीः** நிர்முக்தவாஹ்யார்த²தீ⁴: | = | வெளிப்பதார்த்தங்களிலிருந்து விலகிய புத்தியுடன் கூடினவராய், |
| **निद्रालुवत्** நித்³ராலுவத் | = | தூங்குகிறவன் போலும், |
| **बालवत्** பா³லவத் | = | குழந்தைபோலும், |
| **अन्यावेदित भोग्यभोगकलनः** அன்யாவேதி³த போ⁴க்³யபோ⁴க³கலன: | = | மற்றவர்களாலேயே தெரிவிக்கப்பட்ட போக்ய வஸ்துக்களால் ஏற்பட்ட போகத்தின் ஸம்பந்தம் உள்ளவராய், |
| **क्वचित्** க்வசித் | = | சில ஸமயங்களில், |
| **लब्धधीः** லப்³த⁴தீ⁴: | = | பரமாத்ம நிஷ்டை அடைந்த புத்தியுடன் (அல்லது சில ஸமயங்களில் வெளி பதார்த்தங்களில் ஏற்படும் புத்தியுடன்) இருந்துகொண்டு, |
| **स्वप्नालोकित लोकवत्** ஸ்வப்னலோகித லோகவத் | = | ஸ்வப்னத்தில் காணப்பட்ட உலகத்தைப் போலவே, |
| **इदं** இத³ம் | = | இந்த, |
| **जगत्** ஜக³த் | = | வெளி உலகத்தையும், |
| **पश्यन्** பஶ்யன் | = | (மித்யை என்று) பார்த்துக் கொண்டு, |
| **कश्चित्** கஶ்சித் | = | அபூர்வமாய் யாரோ ஒருவர், |
| **आस्ते** ஆஸ்தே | = | இருக்கிறார், |

| | | |
|---|---|---|
| **स:** <br> ஸ: | = | அவர் (ஆரம்பத்தில் 2 - வது சுலோகத்தில் சொன்னபடி), |
| **अनन्तपुण्यफलमुक** <br> **அனந்தபுண்யப²லமுக** | = | எல்லையற்ற புண்யங்களின் பலனை அனுபவிப்பவர். (அல்லது, தைத்திரீய உபநிஷத்தில் சொன்னபடி, எல்லையற்றதாய் என்னவெல்லாம் புண்ய பலன்க ளுண்டோ அவை எல்லாவற்றையும் சேர்த்து ஒரே ஸமயத்தில் அனுபவிப்பவர்), (அவரே), |
| **धन्य:** <br> **த⁴ன்யঃ** | = | மிகவும் பாக்யசாலி, (அவரே), |
| **भुवि** <br> **பு⁴வி** | = | உலகத்தில், |
| **मान्य:** <br> **மான்யঃ** | = | பகுமானிக்கத் தகுந்தவர். |

இரவில் சாப்பிடாமல் தூங்கும் குழந்தைக்கு தாய் சாதத்தை ஊட்டுகிறாள். தூங்குகின்ற பெரியவனும் தூக்கக் கலக்கத்தில் தான் அறியாமலேயே பாலை வாங்கி குடிக்கிறான். இங்கு தானாக ஒரு முயற்சியும் செய்வதில்லை. நான் உணவு அருந்துகிறேன் என்ற எண்ணமுமில்லை. இதுபோல் ஞானி பிரஹ்மஸ்வரூபத்தி லேயே நிலைபெற்று வெளித் தோற்றமே இல்லாத நிலையில் இவன் வாழ்வதற்காக பிராரப்த கர்மபலத்தால் இவன் வாயில் பிறர் போடுகிற அன்னத்தை சாப்பிடுகிறான். இவன் இதற்காக ஒரு பிரயத்னமும் செய்கிறதில்லை. நான் சாப்பிடுகிறேன் என்ற தோற்றமும் இல்லை.

**सोते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चितेति.**

**ஸோதே ஸர்வான் காமான் ஸஹ ப்³ரஹ்மணா விபஶ்சிதேதி.**

ப்ரஹ்மஸ்வரூபமாக இருக்கும் முக்தன் எல்லா ஆனந்தங்களையும் (புண்ய பலன்களையும்) ஒரேஸமயத்தில் அனுபவிக்கிறான். மற்றவர் கிரமமாக ஒவ்வொன்றா கத்தான் அனுபவிக்க முடியும். இங்கு முக்தன் விஷயானந்தத்தை அனுபவிக்கிறான் என்பது இதன் பொருளல்ல. ப்ரஹ்மானந்தத்தில் எல்லா விஷயானந்தங்களும் உள்ள டங்கியுள்ளபடியால் ப்ரஹ்மானந்தத்தை அனுபவிப்பதாலேயே மற்ற ஆனந்தங்களை அனுபவிப்பதுபோல் ஆகிறது. ப்ரஹ்மானந்தத்தின் லவலேசம்தான் எல்லா விஷயா னந்தங்களும். **(427)**

**(அவதாரிகை)** இவ்வித அனுபவமுள்ளவரைத்தான் ஸ்ரீமத் பகவத் கீதை 2 வது அத்யாயத்தில் "ஸ்திதப்பிரஜ்ஞர்" என்று சொல்லப்பட்டிருக்கிறது என்று ஸ்திதப்ரஜ்ஞ லக்ஷணத்தை ஸூத்ரம் மாதிரி ஸங்கிரஹமாகக் கூறுகிறார்: -

**स्थितप्रज्ञो यतिरयं यः सदानन्दमश्नुते ।**
**ब्रह्मण्येव विलीनात्मा निर्विकारो विनिष्क्रियः ॥ ४२८ ॥**

**ஸ்தி²தப்ரஜ்ஞோ யதிரயம் ய: ஸதா³னந்த³மஶ்னுதே ।**
**ப்³ரஹ்மண்யேவ விலீனாத்மா நிர்விகாரோ விநிஷ்க்ரிய: ॥ 428 ॥**

| | | |
|---|---|---|
| **यः** <br> **ய:** | = | எவர், |
| **सदा** <br> **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **ब्रह्मणि एव** <br> **ப்³ரஹ்மணி ஏவ** | = | பிரஹ்மத்தினிடத்திலேயே, |
| **विलीनात्मा** <br> **விலீனாத்மா** | = | நன்கு லயித்த மனஸுடன், |
| **निर्विकारः** <br> **நிர்விகார:** | = | எவ்வித விகாரமும் (மாறுபாடும்) அன்னியில், |
| **विनिष्क्रियः** <br> **விநிஷ்க்ரிய:** | = | எவ்வித சேஷ்டையுமன்னியில், |
| **सदा** <br> **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **आनन्दं** <br> **ஆனந்த³ம்** | = | ஆநந்தத்தை, |
| **अश्नुते** <br> **அஶ்னுதே** | = | அனுபவிக்கிறாரோ, |
| **अयं** <br> **அயம்** | = | இந்த, |
| **यतिः** <br> **யதி:** | = | ஸன்னியாஸி, |
| **स्थितप्रज्ञः** <br> **ஸ்தி²தப்ரஜ்ஞ:** | = | "ஸ்திதப்பிரக்ஞன்" (எனப்படுவான்) இது ஜீவன் முக்தனின் சுருக்கமான லக்ஷணம். பின்னால் ஒவ்வொன்றும் விவரிக்கப்படுகிறது. |

**(428)**

(அவதாரிகை) "ஸ்திதப்பிரச்ஞன்" என்ற பெயர் எப்படி ஏற்பட்டது என்பதைக் கூறி அவனேதான் ஜீவன்முக்தன் என்று கூறுகிறார்: -

**ब्रह्मात्मनोः शोधितयोरेकभावावगाहिनी ।**
**निर्विकल्पा च चिन्मात्रा वृत्तिः प्रज्ञेति कथ्यते ।**
**सा सर्वदा भवेद्यस्य स जीवन्मुक्त इष्यते ॥ ४२९ ॥**

| | | |
|---|---|---|
| **गृह धर्मा:** | = | வீட்டினுடைய தர்மங்கள், |
| **க்³ருஹ த⁴ர்மா:** | | |
| **प्रदीपवत्** | = | (அவ்வீட்டைப் பிரகாசப்படுத்தும்) தீபத்தை |
| **ப்ரதீ³பவத்** | | (எப்படித் தொடாதோ அதே) போல, |
| **देहे इन्द्रियमनोधर्मा:** | = | சரீரம், இந்திரியங்கள், மனஸ் இவைகளின் |
| **தே³ஹே இந்த்³ரியமனோத⁴ர்மா:** | | தர்மங்கள், |
| **अविकारं** | = | எவ்வித விகாரமுமற்றதாய், |
| **அவிகாரம்** | | |
| **उदासीनं** | = | எவ்விதப் பற்றுதலுமன்னியில் உதாஸீனமாய் |
| **உதா³ஸீனம்** | | இருக்கும், |
| **आत्मानं** | = | ஆத்மாவை, |
| **ஆத்மானம்** | | |
| **न एव स्पृशन्ति** | = | தொடவே தொடாது, |
| **ந ஏவ ஸ்ப்ருஶந்தி** | | |
| **अहो** | = | ஆச்சர்யம்! |
| **அஹோ** | | |

நம் உடம்பின் நிழல் நெருப்பில் விழுந்ததால் நெருப்பின் சூடு உடம்புக்கு வருவதில்லை. இதுபோல் நம் நிழல் குளிர்ந்த ஜலத்திலும், சுத்தமான வஸ்துவிலும், அசுத்த வஸ்துவிலும் விழுந்ததால் சரீரத்திற்குக் குளிர்ச்சியோ, சுத்தமோ, அசுத்தமோ ஏற்படுகிறதில்லை. இதுபோல அந்த: கரண ப்ரதிபிம்பமான ஜீவனுக்கு அந்த:கரண தர்மமான புண்ய பாப ஸுக துக்கங்கள் ஏற்பட்டாலும ஞானிக்கு அக்ஞானம் விலகி, ஜீவத்தன்மை நீங்கி ப்ரஹ்மபாவம் ஏற்பட்டபின் அந்த:கரண தர்மமான புண்ய பாபங்கள் அவனுக்குக் கிடையாது. வீட்டிற்குள் தீபம் எரிந்துகொண்டு வீட்டைப் பிரகாசப்படுத்துகிறது. ஆனால் அவ்வீட்டிலுள்ள விசேஷங்கள் ஒளியுடன் சேருவதில்லை. இதுபோல தேஹ முதலானவற்றை பிரகாசப்படுத்திக் கொண்டு அவைகளுக்கு ஸாக்ஷியாகவுள்ள ஆத்மாவில் தேஹாதி தர்மங்கள் ஒட்டாது. **(507)**

**(அவதாரிகை)** ஆத்மா பற்றுதலற்றவர் என்பதை இன்னம் மூன்று திருஷ்டாந்தங்களைச் சொல்லி தெளிவுபடுத்துகிறார்: -

**रवेर्यथा कर्मणि साक्षिभावो वह्नेर्यथा वाऽयसि दाहकत्वम् ।**
**रज्जोर्यथाऽऽरोपितवस्तुसङ्गः तथैव कूटस्थचिदात्मनो मे ॥ ५०८ ॥**

**ரவேர்யதா² கர்மணி ஸாக்ஷிபா⁴வோ வஹ்னேர்யதா²**
**வா(அ)யஸி தா³ஹகத்வம் ।**
**ரஜ்ஜோர்யதா²(ஆ)ரோபிதவஸ்துஸங்க³: ததை²வ**
**கூடஸ்த²சிதா³த்மனோ மே ॥ 508 ॥**

| | | |
|---|---|---|
| रवे<br>ரவே | = | ஸூர்யனுக்கு, |
| कर्मणि<br>கர்மணி | = | (பிராணிகள் செய்யும்) கர்மாவில், |
| यथा<br>யதா² | = | எப்படி, |
| साक्षि भाव:<br>ஸாக்ஷி பா⁴வ: | = | ஸாக்ஷியாய் இருக்கும் தன்மையோ (மாத்திரமே தவிற அந்தக் கர்மாவில் பற்றுதல் கிடையாதோ), |
| वन्हें:<br>வன்ஹேம்ः | = | அக்நியினுடைய, |
| दाहकत्वं<br>தா³ஹகத்வம் | = | சுடும்தன்மை, |
| यथा वा<br>யதா² வா | = | எப்படி, |
| अयसि<br>அயஸி | = | (பழுககக் காய்ச்சின) இரும்பிலுள்ளதாகக் (கல்பிக்கப்படுகிறதோ), |
| रज्जो:<br>ரஜ்ஜோ: | = | கயிற்றிற்கு, |
| आरोपितवस्तुसङ्ग:<br>ஆரோபிதவஸ்துஸங்க³ः | = | (பிராந்தியினால்) கல்பிக்கப்பட்ட (பாம்பு முதலான) பதார்த்ததுடன (ஒன்றுயிருக்கும் தன்மையாகிற) ஸம்பந்தம், |
| यथा<br>யதா² | = | எப்படி (கலபிக்கப்படுகிறதோ), |
| तथा एव<br>ததா² ஏவ | = | அதைப்போலவே, |
| कूटस्थचिदात्मन:<br>கூடஸ்த²சிதா³த்மனः | = | எவ்வித மாறுதலுமற்று ஞானஸ்வரூபியாயிருக்கும், |
| मे<br>மே | = | எனக்கு ஸாக்ஷியாயிருக்கும் தன்மை, செய்கிறவனுயிருக்கும தன்மை, ஒன்றுயிருக்கும் தன்மை எல்லாம் கலபக்கப்படுகின்றன.) **(508)** |

**कर्तापि वा कारयितापि नाहं भोक्तापि वा भोजयितापि नाहम्।**
**द्रष्टापि वा दर्शयितापि नाहं सोऽहं स्वयंज्योतिरनीद्यगात्मा ॥ ५०९ ॥**

**கர்தாபி வா காரயிதாபி நாஹம் போ⁴க்தாபி**
**வா போ⁴ஜயிதாபி நாஹம் ।**
**த்³ரஷ்டாபி வா த³ர்ஶயிதாபி நாஹம் ஸோ(அ)ஹம்**
**ஸ்வயஞ்ஜ்யோதிரனீத்³யகா³த்மா ॥ 509 ॥**

| | | |
|---|---|---|
| अहं<br>அஹம் | = | நான், |
| कर्ता अपि वा<br>கர்தா அபி வா | = | செய்கிறவனுகவாவது, |
| कारयिता अपि<br>காரயிதா அபி | = | செய்விக்கிறவனுகவாவது, |
| न<br>ந | = | இல்லை, |
| अहं<br>அஹம் | = | நான், |
| भोक्ता अपि वा<br>போ⁴க்தா அபி வா | = | அனுபவிக்கிறவனுகவாவது, |
| भोजयिता अपि<br>போ⁴ஜயிதா அபி | = | அனுபவிக்கும்படி செய்பவனுகவாவது, |
| न<br>ந | = | இல்லை, |
| अहं<br>அஹம் | = | நான், |
| द्रष्टा अपि वा<br>த்³ரஷ்டா அபி வா | = | பார்க்கிறவனுகவாவது, |
| दर्शयिता अपि<br>த³ர்ஶயிதா அபி | = | பார்க்கும்படிச் செய்கிறவனுகவாவது, |
| न<br>ந | = | இல்லை, |
| सः<br>ஸ: | = | அந்த, |
| आत्मा<br>ஆத்மா | = | ஆத்மாவாகிய, |
| अहं<br>அஹம் | = | நான், |
| स्वयंज्योतिः<br>ஸ்வயஞ்ஜ்யோதி: | = | (வேறு எதையும் எதிர்பாராமல்) தானே பிரகாசிக்கிறவன், |
| अनीद्यक्<br>அனீத்³யக் | = | (செய்கிறவன் முதலானதான்) இவ்விதம் இல்லாதவன். (509) |

**(அவதாரிகை)** அவ்விதமிருந்தால் உலகத்தில் ஜனங்கள் தங்களை செய்கிற வன், அனுபவிக்கிறவன், என்று ஏன் நினைக்கிறுர்கள்? என்று கேட்டால் “தத்வமறியாமல் பிராந்தியினுல் தூன்” என்று தான் பதில் சொல்லவேண்டும் ஜலத்தில் ஸுர்யன் பிரதிபிம்பிக்கும்போது ஜலத்தின் அசைவினுல் பிரதிபிம்பம் அசைவதைப் பார்த்து பிராந்தியினுல் சூரியனே அசைவதாக எண்ணுவதில்லையா? அதுபோலத்தான் ஆத்மாவிடத்தில் செய்யும் தன்மை, அனுபவிக்கும் தன்மை, முதலிய இருப்பது போல் நினைப்பது பிராந்தியினுல் என்கிறுர் வாஸ்தவத்தில் பிரதி பிம்பம் அசைவதாக எண்ணுவதே பிராந்திதான். அப்படியிருக்க பிம்பம் அசைவதாக எண்ணுவது பிராந்தி என்பதைச் சொல்லவும் வேண்டுமா?: -

**चलत्युपाधौ प्रतिबिम्बलौल्यमौपाधिकं मूढधियो नयन्ति ।**
**स्वबिम्बभूतं रविवद्विनिष्क्रियं कर्तास्मि भोक्तास्मि हतोऽस्मि हेति ॥ ५१० ॥**

**சலத்யுபாதௌ⁴ ப்ரதிபி³ம்ப³லௌல்யமௌபாதி⁴கம்**
**மூட⁴தி⁴யோ நயந்தி ।**
**ஸ்வபி³ம்ப³பூ⁴தம் ரவிவத்³விநிஷ்க்ரியம் கர்தாஸ்மி**
**போ⁴க்தாஸ்மி ஹதோ(அ)ஸ்மி ஹேதி ॥ 510 ॥**

| | | |
|---|---|---|
| **उपाधौ** <br> **உபாதௌ⁴** | = | (புத்தி, சரீரம் முதலிய) உபாதியானது, |
| **चलति** <br> **சலதி** | = | சலிக்கும்போது, |
| **आपाधिकं** <br> **ஆபாதி⁴கம்** | = | அந்த உபாதியினுலேயே ஏற்பட்ட (வாஸ்தவமில்லாத தோற்றமான), |
| **प्रतिबिम्बलौल्यं** <br> **ப்ரதிபி³ம்ப³லௌல்யம்** | = | (அந்த உபாதியில் தோன்றும் ஜீவனுகிய) பிரதி பிம்பத்தில் தெரியும் சலனத்தை, |
| **मूढधियः** <br> **மூட⁴தி⁴யঃ** | = | மோஹத்தை யடைந்த புத்தியுள்ளவர்கள், |
| **रविवत्** <br> **ரவிவத்** | = | ஸூர்யனிடம்போல, |
| **विनिष्क्रियं** <br> **விநிஷ்க்ரியம்** | = | எவ்வித விகாரமுமில்லாத, |
| **स्वबिम्बभूतं** <br> **ஸ்வபி³ம்ப³பூ⁴தம்** | = | தனக்குப் பிம்பமாயுள்ள ஆதமாவினிடம், |
| **कर्ता** <br> **கர்தா** | = | செய்கிறவனுக, |
| **अस्मि** <br> **அஸ்மி** | = | இருக்கிறேன், |

| | | |
|---|---|---|
| **भोक्ता** <br> **போ⁴க்தா** | = | அனுபவிக்கிறவனுக, |
| **अस्मि** <br> **அஸ்மி** | = | இருக்கிறேன், |
| **इतः अस्मि** <br> **இத: அஸ்மி** | = | அடிபட்டுவிட்டவனுக இருத்கிறேன், |
| **हा** <br> **ஹா** | = | ஐயோ! |
| **इति** <br> **இதி** | = | என்று, |
| **नयन्ति** <br> **நயந்தி** | = | கொண்டு போய்ச் சேர்க்கிறுர்கள். (510) |

(**அவதாரிகை**) ஸ்தூலசரீரத்திற்கு ஏற்படும் தர்மங்கள் சுத்தமான ஆத்மாவில் ஓட்டாது என்கிறுர் -

**जले वापि स्थले वापि लुठत्वेष जडात्मकः ।**
**नाहं विलिप्ये तद्धर्मैर्घटधर्मैर्नभो यथा ॥ ५११ ॥**

**ஜலே வாபி ஸ்த²லே வாபி லுட²த்வேஷ ஜடா³த்மக: ।**
**நாஹம் விலிப்யே தத்³த⁴ர்மைர்க⁴டத⁴ர்மைர்னபோ⁴ யதா² ॥ 511 ॥**

| | | |
|---|---|---|
| **जले वा अपि** <br> **ஜலே வா அபி** | = | ஜலத்திலேதாஞே, |
| **स्थले वा अपि** <br> **ஸ்த²லே வா அபி** | = | தரையிலே தாஞே, |
| **एषः** <br> **ஏஷ:** | = | இந்த, |
| **जडात्मकः** <br> **ஜடா³த்மக:** | = | ஜடஸ்வரூபமான சரீரம், |
| **लुठतु** <br> **லுட²து** | = | புரளட்டும், |
| **नभः** <br> **நப:** | = | ஆகாசமானது, |
| **घट धर्मैः** <br> **க⁴ட த⁴ர்மை:** | = | (அதிலுள்ள) குடத்தின் தர்மங்களால் (அல்லது, குடத்திலுள்ள ஆகாசமானது குடத்தின் தர்மங்களால்), |

| | | |
|---|---|---|
| **यथा**<br>**யதா²** | = | எப்படி (ஒட்டுவதில்லையோ அப்படியே), |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **तत् धर्मैः**<br>**தத் த⁴ர்மை:** | = | அந்த சரீரத்தின் தர்மங்களால், |
| **न विलिप्ये**<br>**ந விலிப்யே** | = | ஒட்டப்படுவதில்லை. |

(511)

**(அவதாரிகை)** அவ்விதமே ஸூக்ஷ்ம சரீரத்தில் ஸம்பந்தித்த தர்மங்களும் ஆத்மாவில் ஒட்டாது என்கிறார்: -

**कर्तृत्वभोक्तृत्वखलत्वमत्तताजडत्वबद्धत्वविमुक्ततादयः ।**
**बुद्धेर्विकल्पा न तु सन्ति वस्तुतः स्वस्मिन्परे ब्रह्मणि केवलेऽद्वये ॥ ५१२ ॥**

**கர்த்ருத்வபோ⁴க்த்ருத்வக²லத்வமத்ததாஜட³த்வ**
**ப³த்³த⁴த்வவிமுக்ததாத³ய: ।**
**பு³த்³தே⁴ர்விகல்பா ந து ஸந்தி வஸ்துத:**
**ஸ்வஸ்மின்பரே ப்³ரஹ்மணி கேவலே(அ)த்³வயே ॥ 512 ॥**

| | | |
|---|---|---|
| **कर्तृत्व**<br>**கர்த்ருத்வ** | = | செய்கிறவன் என்ற தன்மை, |
| **भोक्तृत्व**<br>**போ⁴க்த்ருத்வ** | = | அனுபவிக்கிறவன் என்ற தன்மை, |
| **खलत्व**<br>**வக²லத்வ** | = | துஷ்டன் என்கிற தன்மை, |
| **मत्तता**<br>**மத்ததா** | = | மதம் பிடித்தவன் என்ற தன்மை, |
| **जडत्व**<br>**ஜட³த்வ** | = | புத்தி ஒட்டமில்லாதவன் என்ற தன்மை, |
| **बद्धत्व**<br>**ப³த்³த⁴த்வ** | = | கட்டுப்பட்டவன் என்ற தன்மை, |
| **विमुक्तता**<br>**விமுக்ததா** | = | விடுபட்டவன் என்ற தன்மை, |
| **आदयः**<br>**ஆத³ய:** | = | முதலானவைகள், |
| **बुद्धेः**<br>**பு³த்³தே⁴:** | = | புத்தியினால் (புத்தியை 'நான்' என்று எண்ணினதினால்) ஏற்படும் |

| | | |
|---|---|---|
| **विकल्पाः**<br>**விகல்பா:** | = | பலவித கற்பனைகள்; அவைகள், |
| **वस्तुतः**<br>**வஸ்துத:** | = | வாஸ்தவத்தில், |
| **केवले**<br>**கேவலே** | = | சுத்தமாய், |
| **अद्वये**<br>**அத்³வயே** | = | இரண்டற்றதாய், |
| **परे**<br>**பரே** | = | மேலானதாய், |
| **ब्रह्मणि**<br>**ப்³ரஹ்மணி** | = | பிரஹ்மமாய் இருக்கும், |
| **स्वस्मिन्**<br>**ஸ்வஸ்மின்** | = | தன்னிடத்தில், |
| **न तु सन्ति**<br>**ந து ஸந்தி** | = | கிடையவே கிடையாது. |

**(512)**

**सन्तु विकाराः प्रकृतेर्दशधा शतधा सहस्रधा वापि ।**
**तैः किं मेऽसङ्गचितेर्न धम्बुदडम्बरोऽम्बरं स्पृशति ॥ ५१३ ॥**

**ஸந்து விகாரா: ப்ரக்ருதேர்த³ஶதா⁴ ஶததா⁴**
**ஸஹஸ்ரதா⁴ வாபி ।**
**தை: கிம் மே(அ)ஸங்க³சிதேர்ன த⁴ம்பு³த³ட³ம்ப³ரோ(அ)ம்ப³ரம்**
**ஸ்ப்ருஶதி ॥ 513 ॥**

| | | |
|---|---|---|
| **प्रकृते**<br>**ப்ரக்ருதே** | = | மாயையினுடைய, |
| **विकाराः**<br>**விகாரா:** | = | மாறுபாடுகள், |
| **दशधा**<br>**த³ஶதா⁴** | = | பத்துவிதமாக, |
| **शतधा**<br>**ஶததா⁴** | = | நூறு விதமாக, |
| **सहस्रधा वा अपि**<br>**ஸஹஸ்ரதா⁴ வா அபி** | = | ஆயிரவிதமாகத்தான், |
| **सन्तु**<br>**ஸந்து** | = | இருக்கட்டுமே, |

| | | |
|---|---|---|
| **असङ्गचितेः**<br>**அஸங்க³சிதேঃ** | = | எவ்வித பற்றுமில்லாத ஞானஸ்வரூபியான, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **तैः**<br>**தைঃ** | = | அவைகளினுல், |
| **किं**<br>**கிம்** | = | என்ன (ஏற்பட முடியும்)?, |
| **अम्बुदडम्बरः**<br>**அம்பு³த³ட³ம்ப³ரঃ** | = | மேகத்தினுடைய (இடிமின்னல் முதலிய) ஆடம்பரம், |
| **अम्बरं**<br>**அம்ப³ரம்** | = | ஆகாசத்தை, |
| **न हि स्पृशति**<br>**ந ஹி ஸ்ப்ருஶதி** | = | தொடுவதில்ஜலயே (ஒன்றும் செய்யாதே)! (513) |

**अव्यक्तादि स्थूलपर्यन्तमेतद्विश्वं यत्राभासमात्रं प्रतीतम् ।**
**व्योमप्रख्यं सूक्ष्ममाद्यन्तहीनं ब्रह्माद्वैतं यत्तदेवाहमस्मि ॥ ५१४ ॥**

**அவ்யக்தாதி³ ஸ்தூ²லபர்யந்தமேதத்³விஶ்வம்**
**யத்ராபா⁴ஸமாத்ரம் ப்ரதீதம் ।**
**வ்யோமப்ரக்²யம் ஸூக்ஷ்மமாத்³யந்தஹீனம்**
**ப்³ரஹ்மாத்³வைதம் யத்ததே³வாஹமஸ்மி ॥ 514 ॥**

| | | |
|---|---|---|
| **अव्यक्तादि स्थूल पर्यन्तं**<br>**அவ்யக்தாதி³ ஸ்தூ²ல பர்யந்தம்** | = | அவ்யக்தமென்ற மாயை முதல் (பஞ்சீகிருக) ஸ்தூல பதார்த்தம் வரையிலுள்ள, |
| **एतत्**<br>**ஏதத்** | = | இந்த, |
| **विश्वं**<br>**விஶ்வம்** | = | ஜகத் (எல்லாம், |
| **यत्र**<br>**யத்ர** | = | எதினிடத்தில், |
| **आभासमात्रं**<br>**ஆபா⁴ஸமாத்ரம்** | = | (கல்பிக்கப்பட்டு) தோற்றம் மாத்திரமாக தென்படுகிறதோ, |
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **व्योमप्रख्यं**<br>**வ்யோமப்ரக்²யம்** | = | ஆகாசத்தைப் போலுள்ளதாய், |

| | | |
|---|---|---|
| सूक्ष्मं<br>ஸூக்ஷ்மம் | = | ஸூக்ஷ்மமாய், |
| आदि अन्तहीनं<br>ஆதி³ அந்தஹீனம் | = | ஆதியும் அந்தமும் அற்றதாய், |
| अद्वैतं<br>அத்³வைதம் | = | இரண்டற்றதாய் இருக்கிறதோ, |
| तत्<br>தத் | = | அந்த, |
| ब्रह्म एव<br>ப்³ரஹ்ம ஏவ | = | பிரஹ்மமாகவேதான், |
| अहं<br>அஹம் | = | நான், |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன். (514) |

सर्वाधारं सर्ववस्तुप्रकाशं सर्वाकारं सर्वगं सर्वशून्यम् ।
नित्यं शुद्धं निष्कलं निर्विकल्पं ब्रह्माद्वैतं यत्तदेवाहमस्मि ॥ ५१५ ॥

ஸர்வாதா⁴ரம் ஸர்வவஸ்துப்ரகாஶம் ஸர்வாகாரம்
ஸர்வக³ம் ஸர்வஶூன்யம் ।
நித்யம் ஶுத்³த⁴ம் நிஷ்கலம் நிர்விகல்பம்
ப்³ரஹ்மாத்³வைதம் யத்தே³வாஹமஸ்மி ॥ 515 ॥

| | | |
|---|---|---|
| यत्<br>யத் | = | எந்த, |
| ब्रह्म<br>ப்³ரஹ்ம | = | பிரஹ்மமானது, |
| सर्वाधारं<br>ஸர்வாதா⁴ரம் | = | எல்லாவற்றிற்கும் ஆதாரமாய், |
| सर्ववस्तु प्रकाशं<br>ஸர்வவஸ்து ப்ரகாஶம் | = | எல்லா பதார்த்தங்களையும் விளங்கச் செய்வதாய், |
| सर्वाकारं<br>ஸர்வாகாரம் | = | எல்லா ரூபமாய், |
| सर्वगं<br>ஸர்வக³ம் | = | எல்லாவற்றிலும் இருப்பதாய், |
| सर्वशून्यं<br>ஸர்வஶூன்யம் | = | எல்லாம் அற்றதாய், |

| | | |
|---|---|---|
| **नित्यं**<br>**நித்யம்** | = | நித்யமாய், |
| **शुद्धं**<br>**ஶுத்³த⁴ம்** | = | நிர்மலமாய், |
| **निष्कलं**<br>**நிஷ்கலம்** | = | அவயவங்களில்லாததாய், |
| **निर्विकल्पं**<br>**நிர்விகல்பம்** | = | எவ்வித கற்பனையுமற்றதாய், |
| **अद्वैतं**<br>**அத்³வைதம்** | = | இரண்டற்றதாய் இருக்கிறதோ, |
| **तत् एव**<br>**தத் ஏவ** | = | அந்த பிரஹ்மமாகவே, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **अस्मि**<br>**அஸ்மி** | = | இருக்கிறேன். |

**(515)**

**यत्प्रत्यस्ताशेषमायाविशेषं प्रत्यग्रूपं प्रत्ययागम्यमानम् ।**
**सत्यज्ञानानन्तमानन्दरूपं ब्रह्माद्वैतं यत्तदेवाहमस्मि ॥ ५१६ ॥**

**யத்ப்ரத்யஸ்தாஶேஷமாயாவிஶேஷம் ப்ரத்யக்³ரூபம்**
**ப்ரத்யயாக³ம்யமானம் ।**
**ஸத்யஜ்ஞானானந்தமானந்த³ரூபம் ப்³ரஹ்மாத்³வைதம்**
**யத்ததே³வாஹமஸ்மி ॥ 516 ॥**

| | | |
|---|---|---|
| **यस्मिन्**<br>**யஸ்மின்** | = | எதனிடத்தில், |
| **अशेषं माया**<br>**அஶேஷம் மாயா** | = | எல்லா மாயையும், |
| **अस्ता**<br>**அஸ்தா** | = | கிடையாதோ, |
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **अविशेषं**<br>**அவிஶேஷம்** | = | எவ்வித விசேஷம மில்லாததாய், |
| **प्रत्यग् रूपं**<br>**ப்ரத்யக்³ ரூபம்** | = | பிரக்யகாத்ம ஸ்வரூபமாய், |

| | | |
|---|---|---|
| प्रत्यय अगम्यमानं<br>ப்ரத்யய அக³ம்யமானம் | = | (பிரஹ்மாகார விருத்தியைத்தவிர வேறு) எந்த விருத்தியினுலும் அறியமுடியாததாய், |
| सत्य ज्ञान अनन्तं<br>ஸத்ய ஜ்ஞான அனந்தம் | = | ஸத்தியம் ஞானம் எல்லையற்றதென்ற ஸ்வரூபமாய், |
| आनन्द रूपं<br>ஆனந்த³ ரூபம் | = | ஆனந்த ஸ்வரூபமாய், |
| अद्वैतं<br>அத்³வைதம் | = | இரண்டற்றதாய் இருக்கிறதோ, |
| तत्<br>தத் | = | அந்த, |
| ब्रह्म<br>ப்³ரஹ்ம | = | பிரஹ்மமாகவே, |
| एव<br>ஏவ | = | தான், |
| अहं<br>அஹம் | = | நான், |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன். (516) |

**निष्क्रियोऽस्म्यविकारोऽस्मि निष्कलोऽस्मि निराकृतिः ।**
**निर्विकल्पो ऽस्मिनित्योऽस्मि निरालम्बोऽस्मि निर्द्वया ॥ ५१७ ॥**

**நிஷ்க்ரியோ(அ)ஸ்ம்யவிகாரோ(அ)ஸ்மி நிஷ்கலோ(அ)ஸ்மி நிராக்ருதி: ।**
**நிர்விகல்போ (அ)ஸ்மிநித்யோ(அ)ஸ்மி நிராலம்போ³(அ)ஸ்மி நிர்த்³வயா ॥ 517 ॥**

| | | |
|---|---|---|
| निष्क्रियः<br>நிஷ்க்ரிய: | = | எவ்வித கிரியையுமில்லாதவனுக, |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன், |
| अविकारः<br>அவிகார: | = | எவ்வித மாறுபாடுமில்லாதவனுக, |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன், |
| निष्कलः<br>நிஷ்கல: | = | எவ்வித அவயவங்களுமில்லாதவனுக, |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன், |

| | | |
|---|---|---|
| निराकृतिः<br>நிராக்ருதி꞉ | = | எவ்விதரூபமும் இல்லாதவனாக (இருக்கிறேன்), |
| निर्विकल्पः<br>நிர்விகல்ப꞉ | = | எவ்வித விகல்பமும் இல்லாதவனாக, |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன், |
| नित्यः<br>நித்ய꞉ | = | நித்யமாய் (என்றைக்கும் உள்ளவனாய்) |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன், |
| निरालम्बः<br>நிராலம்ப³꞉ | = | வேறு எவ்வித பிடிப்பும் இல்லாதவனாய், |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன், |
| निर्द्वयः<br>நிர்த்³வய꞉ | = | இரண்டாவது எதுவுமில்லாதவனாய் (இருக்கிறேன்). (517) |

**सर्वात्मकोऽहं सर्वो ऽहं सर्वातीतोऽहमद्वयः ।**
**केवलाखण्डबोधोऽहमानन्दोऽहं निरन्तरः ॥ ५१८ ॥**

**ஸர்வாத்மகோ(அ)ஹம் ஸர்வோ (அ)ஹம் ஸர்வாதீதோ(அ)ஹமத்³வய꞉ ।**
**கேவலாக²ண்ட³போ³தோ⁴(அ)ஹமானந்தோ³(அ)ஹம் நிரந்தர꞉ ॥ 518 ॥**

| | | |
|---|---|---|
| सर्व आत्मकः<br>ஸர்வ ஆத்மக꞉ | = | எல்லா ஸ்வரூபமாயிருப்பது, |
| अहं<br>அஹம் | = | நானே, |
| सर्वः<br>ஸர்வ꞉ | = | எல்லா பதார்த்தங்களும், |
| अहं<br>அஹம் | = | நானே, |
| सर्व अतीतः<br>ஸர்வ அதீத꞉ | = | எல்லாவற்றையும் கடந்திருப்பவன், |
| अहं<br>அஹம் | = | நான், |
| अद्वयः<br>அத்³வய꞉ | = | இரண்டற்றிருப்பவன் (நான்), |

**अहं** = நான்,

**அஹம்**

**अद्वय:** = (வேறு எதுவும் ஸம்பந்தப்படாமல்) தனித்திருக்கும்

**அத்³வய:** பூர்ணமான அறிவு ஸ்வரூபன்,

**अहं** = நான்,

**அஹம்**

**आनन्द:** = ஆனந்த ஸ்வரூபன்,

**ஆனந்த³:**

**निरन्तर:** = இடைவெளியில்லாதவன்.

**நிரந்தர:** **(518)**

(**அவதாரிகை**) இவ்விதமாக சிஷ்யன் தனக்கேற்பட்டுள்ள பிரஹ்மானந்த அனுபவத்தை குருவினிடம் தெரிவித்துவிட்டு இவ்வனுபலம் ஏற்படும்படி அனுக்ர ஹித்த குருவினிடம் தனக்குள்ள நன்றியையும் தெரிவித்துக்கொண்டு நமஸ்கரிக் கிறார்: -

**स्वाराज्यसाम्राज्यविभूतिरेषा भवत्कृपाश्रीमहिमप्रसादात् ।**
**प्राप्ता मया श्रीगुरवे महात्मने नमो नमस्तेऽस्तु पुनर्नमोऽस्तु ॥ ५१९ ॥**

**ஸ்வாராஜ்யஸாம்ராஜ்யவிபூ⁴திரேஷா**
**ப⁴வத்க்ருபாஶ்ரீமஹிமப்ரஸாதா³த் ।**
**ப்ராப்தா மயா ஶ்ரீகு³ரவே மஹாத்மனே**
**நமோ நமஸ்தே(அ)ஸ்து புனர்நமோ(அ)ஸ்து ॥ 519 ॥**

**भवत् कृपा श्रीमहित प्रसादात्** = தங்களுடைய கருணையாகிற ஸம்பத்தினுல்

**ப⁴வத் க்ருபா ஶ்ரீமஹித ப்ரஸாதா³த்** பெருமைவாய்ந்த பிரஸாதத்தினுல்,

**मया** = என்னுல்,

**மயா**

**एषा** = இவ்விதமான,

**ஏஷா**

**स्वाराज्य साम्राज्य विभूति:** = தனக்குத்தானே அரசனுயிருக்கும் தன்மை (தனக்கு

**ஸ்வாராஜ்ய ஸாம்ராஜ்ய** மேலாக எவரும் இல்லாதிருக்கும் தன்மை)

**விபூ⁴தி:** உத்தமமான ராஜத்தன்மை (எல்லாவற்றையும் ஆளக்கூடிய தன்மை) ஆகிய வைபவமானது,

**प्राप्ता** = அடையப்பட்டுவிட்டது,

**ப்ராப்தா**

**महात्मने** = மஹாத்மாவாய்,

**மஹாத்மனே**

| | | |
|---|---|---|
| श्रीगुरवे<br>ஸ்ரீகு³ரவே | = | எல்லா ஸம்பத்தும் பொருந்திய குருவாய் இருக்கும், |
| ते<br>தே | = | தங்களுக்கு, |
| नमः<br>நம: | = | நமஸ்காரம், |
| नमः<br>நம: | = | (என்) நமஸ்காரம், |
| अस्तु<br>அஸ்து | = | இருக்கட்டும், |
| पुनः<br>புன: | = | மறுபடியும் மறுபடியும், |
| नमः<br>நம: | = | நமஸ்காரம், |
| अस्तु<br>அஸ்து | = | இருக்கட்டும், (519) |

महास्वप्ने मायाकृतजनिजरामृत्युगहने
भ्रमन्तं क्लिश्यन्तं बहुलतरतापैरनुकलम् ।
अहंकारव्याघ्रव्यथितमिममत्यन्तकृपया
प्रबोध्य प्रस्वापात्परमवितवान्मामसि गुरो ॥ ५२० ॥

**மஹாஸ்வப்னே மாயாக்ருதஜநிஜராம்ருத்யுக³ஹனே**
**ப்⁴ரமந்தம் க்லிஶ்யந்தம் ப³ஹுலதரதாபைரனுகலம் ।**
**அஹங்காரவ்யாக்⁴ரவ்யதி²தமிமமத்யந்தக்ருபயா**
**ப்ரபோ³த்⁴ய ப்ரஸ்வாபாத்பரமவிதவான்மாமஸி கு³ரோ ॥ 520 ॥**

| | | |
|---|---|---|
| महास्वप्ने<br>மஹாஸ்வப்னே | = | (அவித்யையாகிற) பெரிய ஸ்வப்னத்தில், |
| मायाकृत<br>மாயாக்ருத | = | மாயையினுல் ஏற்படுத்தப்பட்ட, |
| जनि<br>ஜநி | = | பிறப்பு, |
| जरा<br>ஜரா | = | மூப்பு, |
| मृत्यु<br>ம்ருத்யு | = | இறப்பு ஆகிய, |

| | | |
|---|---|---|
| गहने<br>க³ஹனே | = | அடர்ந்த காட்டில், |
| भ्रमन्तं<br>ப்⁴ரமந்தம் | = | அலைகிறவனாய், |
| बहुलतरतापैः<br>ப³ஹுலதரதாபை: | = | மிகவும் அதிகமான தாபங்களினால், |
| अनुकलं<br>அனுகலம் | = | ஒவ்வொரு க்ஷணமும், |
| क्लिश्यन्तं<br>க்லிஶ்யந்தம் | = | துன்பமடைகிறவனாய், |
| अहंकार व्याघ्रव्यथितं<br>அஹங்கார வ்யாக்⁴ரவ்யதி²தம் | = | (நான் என்று எண்ணுவதாகிய) அஹங்காரம் என்ற வேங்கையினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த, |
| इमं<br>இமம் | = | இந்த, |
| मां<br>மாம் | = | என்னை, |
| गुरो<br>கு³ரோ | = | ஹே குரோ! (தாங்கள்), |
| अत्यन्त कृपया<br>அத்யந்த க்ருபயா | = | எல்லை மீறின கருணையினால், |
| प्रस्वापात्<br>ப்ரஸ்வாபாத் | = | நல்ல தூக்கத்திலிருந்து, |
| प्रबोध्य<br>ப்ரபோ³த்⁴ய | = | நன்கு எழுப்பி விழிப்பு வரும்படிச்செய்து, |
| परं<br>பரம் | = | நன்றாக, |
| अवितवान्<br>அவிதவான் | = | ரக்ஷித்துக் கொடுத்தவராக, |
| असि<br>அஸி | = | இருக்கிறீர்கள். (520) |

**नमस्तस्मै सदेकस्मै नमश्चिन्महसे मुहुः ।**
**यदेतद्विश्वरूपेण राजते गुरुराज ते ॥ ५२१ ॥**

**நமஸ்தஸ்மை ஸதே³கஸ்மை நமஶ்சின்மஹஸே முஹு: ।**
**யதே³தத்³விஶ்வரூபேண ராஜதே கு³ருராஜ தே ॥ 521 ॥**

**सत् एकस्मै** = எப்பொழுதும் இருப்பதாயும் ஒன்றுகவே
**ஸத் ஏகஸ்மை** இருப்பதுமாகிய,
**तस्मै** = அந்த (தங்களுக்கு),
**தஸ்மை**
**नमः** = நமஸ்காரம்,
**நம꞉**
**यत्** = எது,
**யத்**
**एतत्** = இந்த உலகம் என்ற ரூபத்துடன்,
**ஏதத்**
**राजते** = பிரகாசிக்கிறதோ (அந்த),
**ராஜதே**
**चित् महसे** = ஞானமாகிற தேஜஸையுடைய,
**சித் மஹஸே**
**ते** = தங்களுக்கு,
**தே**
**गुरुराज** = ஹே குருராஜனே!
**கு³ருராஜ**
**मुहुः** = அடிக்கடி,
**முஹு꞉**
**नमः** = நமஸ்காரம்,
**நம꞉**

## 42. ஜீவன் முக்தி நிலை

**(அவதாரிகை)** இவ்விதம் சிஷ்யன் சொன்னதைக்கேட்டு, தான் உபதேசித்த தத்வத்தை சிஷ்யன் அனுபவத்திற்குக் கொண்டு வந்திருப்பதைப் பார்த்து, குருவும் மிகவும் ஸந்தோஷமடைந்து மேலால் சில உபதேச வாக்கியங்களைச் சொல்லி விசேஷமாக அனுக்ரஹிக்கிறுர்: -

**इति नतमवलोक्य शिष्यवर्यं समधिगतात्मसुखं प्रबुद्धतत्त्वम् ।**
**प्रमुदितंहृदयः स देशिकेन्द्रः पुनरिदमाह वचः परं महात्मा ॥ ५२२ ॥**

**இதி நதமவலோக்ய ஶிஷ்யவர்யம் ஸமதி⁴க³தாத்மஸுக²ம்**
**ப்ரபு³த்³த⁴தத்த்வம் ।**
**ப்ரமுதி³தம்ஹ்ருத³ய꞉ ஸ தே³ஶிகேந்த்³ர꞉ புனரித³மாஹ**
**வச꞉ பரம் மஹாத்மா ॥ 522 ॥**

**इति** = இவ்விதம் சொல்லி,
**இதி**

| | | |
|---|---|---|
| **नतं**<br>**நதம்** | = | நமஸ்கரித்த, |
| **शिष्यवर्यं**<br>**ஶிஷ்யவர்யம்** | = | உத்தமமான சிஷ்யன், |
| **प्रबुद्ध तत्त्वम्**<br>**ப்ரபு³த்³த⁴ தத்த்வம்** | = | நன்கு தத்வத்தை அறிந்தவனாக, |
| **समधिगत आत्म सुखं**<br>**ஸமதி⁴க³த ஆத்ம ஸுக²ம்** | = | நன்கு ஸாக்ஷாத்காரம் செய்யப்பட்ட ஆத்ம ஆனந்தமுள்ளவனாக (இருக்கிறான் என்பதை), |
| **अवलोक्य**<br>**அவலோக்ய** | = | பார்த்து, |
| **सः**<br>**ஸः** | = | அந்த, |
| **महात्मा**<br>**மஹாத்மா** | = | மஹாத்மாவான, |
| **देशिकेन्द्रः**<br>**தே³ஶிகேந்த்³ரः** | = | குரு சிரேஷ்டர், |
| **प्रमुदित हृदयः**<br>**ப்ரமுதி³த ஹ்ருத³யः** | = | மிகவும் ஸந்தோஷமடைந்த ஹ்ருதயமுள்ளவராய், |
| **पुनः**<br>**புனः** | = | மறுபடியும், |
| **इदं**<br>**இத³ம்** | = | இந்த, |
| **परं**<br>**பரம்** | = | உத்தமமான, |
| **वचः**<br>**வசः** | = | வார்த்தையை, |
| **आह**<br>**ஆஹ** | = | சொன்னார். |

(522)

**ब्रह्मप्रत्यय संततिर्जगदतो ब्रह्मैव सत्सर्वतः**
**पश्याध्यात्मदृशा प्रशान्तमनसा सर्वास्ववस्थास्वपि ।**
**रूपादन्यदवेक्षितं किमभितश्चक्षुष्मतां विद्यते**
**तद्वद्ब्रह्मविदः सतः किमपरं बुद्धेर्विहारास्पदम् ॥ ५२३ ॥**

**ப்³ரஹ்மப்ரத்யய ஸந்ததிர்ஜக³த³தோ ப்³ரஹ்மைவ ஸத்ஸர்வதः**
**பஶ்யாத்⁴யாத்மத்³ருஶா ப்ரஶாந்தமனஸா ஸர்வாஸ்வவஸ்தா²ஸ்வபி ।**
**ரூபாத³ன்யத³வேக்ஷிதம் கிமபி⁴தஶ்சக்ஷுஷ்மதாம் வித்³யதே**
**தத்³வத்³ப்³ரஹ்மவித³ः ஸதः கிமபரம் பு³த்³தே⁴விஹாராஸ்பத³ம் ॥ 523 ॥**

| | | |
|---|---|---|
| जगत्<br>ஜக³த் | = | உலகம் என்பது, |
| ब्रह्म प्रत्यय संतति:<br>ப்³ரஹ்மப்ரத்யய ஸந்ததி: | = | பிரஹ்மத்தை விஷயீகரிக்கும் அறிவின் துடர்ச்சி (தான்), |
| अत:<br>அத: | = | ஆகையினுல், |
| सर्वत:<br>ஸர்வத: | = | எங்கேயும், |
| सर्वासु<br>ஸர்வாஸு | = | எல்லா, |
| अवस्थासु<br>அவஸ்தா²ஸு | = | நிஜலகளிலும், |
| अपि<br>அபி | = | கூட, |
| प्रशान्त मनसा<br>ப்ரஶாந்த மனஸா | = | (சித்தவிருத்திகளெல்லாம்) நன்கு அடங்கின மனஸுடன், |
| अध्यात्म दृशा<br>அத்⁴யாத்ம த்³ருஶா | = | ஆத்ம விஷயமான பார்வையினுல், |
| ब्रह्म एव<br>ப்³ரஹ்ம ஏவ | = | பிரஹ்மம் தான், |
| सत्<br>ஸத் | = | (என்றைக்கும் எங்கும் எல்லாவற்றிலும்) இருக்கும் வஸ்து என்று, |
| पश्य<br>பஶ்ய | = | பார் (அனுபவி), |
| चक्षुष्मतां<br>சக்ஷுஷ்மதாம் | = | நன்கு கண் உள்ளவர்களுக்கு, |
| अवेक्षितुं<br>அவேக்ஷிதும் | = | பார்ப்பதற்கு, |
| रूपात्<br>ரூபாத் | = | ரூபத்தைத்தவிர, |
| अन्यत्<br>அன்யத் | = | வேறு, |
| किं<br>கிம் | = | எது, |
| अभित:<br>அபி⁴த: | = | நாலா பக்கத்திலும், |

**विद्यते** = இருக்க முடியும்?,

**வித்³யதே**

**तद्वत्** = அதைப் போலவே,

**தத்³வத்**

**ब्रह्मविदः** = பிரஹ்மத்தை அறிந்தவருடைய,

**ப்³ரஹ்மவித³:**

**बुद्धेः** = புத்திக்கு,

**பு³த்³தே⁴:**

**विहार आस्पदं** = வியவஹரிப்பதற்கு (செல்லுவதற்கு) விஷயம்,

**விஹார ஆஸ்பத³ம்**

**सतः** = ஸத்தாகிய பிரஹ்மத்தைத்தவிர,

**ஸத:**

**अपरं** = வேறு,

**அபரம்**

**किं** = எது?

**கிம்** **(523)**

(**அவதாரிகை**) பிரஹ்மவித்தினுடைய புத்தி வேறு விஷயத்தில் செல்லுவ தற்கு நிமித்தமேயில்லையென்பதையும் காட்டுகிறார்: -

**कस्तां परानन्दरसानुभूति उत्सृज्य शून्येषु रमेत विद्वान् ।**

**चन्द्रे महाह्लादिनि दीप्यमाने चित्रेन्दुमालोकयितुं क इच्छेत् ॥ ५२४ ॥**

**கஸ்தாம் பரானந்த³ரஸானுபூ⁴தி உத்ஸ்ருஜ்ய**
**ஶூன்யேஷு ரமேத வித்³வான் ।**
**சந்த்³ரே மஹாஹ்லாதி³னி தீ³ப்யமானே**
**சித்ரேந்து³மாலோகயிதும் க இச்சே²த் ॥ 524 ॥**

**तां** = அந்த,

**தாம்**

**पर आनन्द रस अनुभूतिं** = உத்தமமான ஆனந்தத்தின் ரஸத்தை

**பர ஆனந்த³ ரஸ அனுபூ⁴திம்** அனுபவிப்பதை,

**उत्सृज्य** = விட்டு விட்டு,

**உத்ஸ்ருஜ்ய**

**विद्वान्** = அறிவாளியான,

**வித்³வான்**

**कः** = எவன்,

**க:**

शून्येषु = எவ்வித பிரயோஜனமுமற்ற பதார்த்தங்களில்,
ஶூன்யேஷு
रमेत = ரமிப்பான்?
ரமேத
महाह्लादिनि = வெகு ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடிய,
மஹாஹ்லாதி³னி
चन्द्रे = சந்திரன்,
சந்த்³ரே
दीप्यमाने = நன்கு பிரகாசித்துக்கொண்டிருக்கும்போது,
தீ³ப்யமானே
चित्र इन्दुं = சித்திரத்தில் காணும் சந்திரனை,
சித்ர இந்து³ம்
आलोकयितुं = பார்ப்பதற்கு,
ஆலோகயிதும்
कः = எவன் தான்,
கঃ
इच्छेत् = விரும்புவான்?
இச்சே²த் (524)

असत्पदार्थानुभवेन किञ्चित् न ह्यस्ति तृप्तिः न च दुःखहानिः ।
तदद्वयानन्दरसानुभूत्या तृप्तः सुखं तिष्ठ तिष्ठ सदात्मनिष्ठया ॥ ५२५ ॥

அஸத்பதா³ர்தா²னுப⁴வேன கிஞ்சித் ந ஹ்யஸ்தி
த்ருப்திঃ ந ச து³ঃக²ஹானிঃ ।
தத³த்³வயானந்த³ரஸானுபூ⁴த்யா த்ருப்தঃ
ஸுக²ம் திஷ்ட² ஸதா³த்மநிஷ்ட²யா ॥ 525 ॥

असत् = (வாஸ்தவமில்லாத அல்லது) ஸத்தான
அஸத் பிரஹ்மத்தை விட்டு வேறுபட்டதான,
पदार्थ = பதார்த்தத்தின்,
பதா³ர்த²
अनुभवेन = அனுபவத்தினுல்,
அனுப⁴வேன
किञ्चित् = கொஞ்சமேனும்,
கிஞ்சித்
तृप्तिः = போது மென்கிற திருப்தி,
த்ருப்திঃ

| | | |
|---|---|---|
| **न अस्ति** | = | கிடையாது என்பது, |
| **ந அஸ்தி** | | |
| **हि** | = | பிரஸித்தம், |
| **ஹி** | | |
| **दुःख हानिः च** | = | துக்கத்திற்கு நாசமும், |
| **து³ஃக² ஹானிஃ ச** | | |
| **न** | = | ஏற்படாது, |
| **ந** | | |
| **तत्** | = | ஆகையினுல், |
| **தத்** | | |
| **अद्वय आनन्दरस अनुभूत्या** | = | இரண்டற்ற ஆனந்த ரஸத்தின் அனுபவத்தினுல், |
| **அத்³வய ஆனந்த³ரஸ அனுபூ⁴த்யா** | | |
| **तृप्तः** | = | திருப்தியடைந்தவனுக, |
| **த்ருப்தஃ** | | |
| **सत् आत्म निष्ठया** | = | ஸத்தாகிய ஆத்மாவிடத்திலேயே நிஜலத்திருந்து |
| **ஸத் ஆத்ம நிஷ்ட²யா** | | கொண்டு (அல்லது **सदा ஸதா³** - எப்பொழுதும் **आत्म निष्ठया ஆத்ம நிஷ்ட²யா** - ஆத்ம நிஷ்டையுடன்), |
| **सुखं** | = | ஆனந்தமாக, |
| **ஸுக²ம்** | | |
| **तिष्ठ** | = | இருந்துவா. |
| **திஷ்ட²** | | (525) |

**स्वमेव सर्वतः पश्यन् मन्यमानः स्वं अद्वयम् ।**
**स्वानन्दं अनुभुञ्जानः कालं नय महामते ॥ ५२६ ॥**

**ஸ்வமேவ ஸர்வதஃ பஶ்யன் மன்யமானஃ ஸ்வம் அத்³வயம் ।**
**ஸ்வானந்த³ம் அனுபு⁴ஞ்ஜானஃ காலம் நய மஹாமதே ॥ 526 ॥**

| | | |
|---|---|---|
| **महामते** | = | ஹே உத்தமமான புத்தியுள்ளவனே, |
| **மஹாமதே** | | |
| **सर्वतः** | = | எல்லா பக்கத்திலும் (எல்லாவற்றிலும்), |
| **ஸர்வதஃ** | | |
| **स्वं एव** | = | தன்ஜனயே (ஆத்ம ஸ்வரூபத்தையே), |
| **ஸ்வம் ஏவ** | | |
| **पश्यन्** | = | பார்த்துக் கொண்டு, |
| **பஶ்யன்** | | |

| | | |
|---|---|---|
| **स्वं** | = | தன்னை, |
| **ஸ்வம்** | | |
| **अद्वयं** | = | இரண்டாவதற்றதாக, |
| **அத்³வயம்** | | |
| **मन्यमानः** | = | அறிந்துகொண்டு, |
| **மன்யமான:** | | |
| **स्वं आनन्दं** | = | தன் ஸ்வரூப ஆனந்தத்தை, |
| **ஸ்வம் ஆனந்த³ம்** | | |
| **अनुभुञ्जानः** | = | இடைவிடாது அனுபவித்துக்கொண்டு, |
| **அனுபு⁴ஞ்ஜான:** | | |
| **कालं** | = | வாழ்நாளை, |
| **காலம்** | | |
| **नय** | = | நடத்து. |
| **நய** | | **(526)** |

**अखण्डबोधात्मनि निर्विकल्पे विकल्पनं व्योम्नि पुरप्रकल्पनम् ।**
**तदद्वयानन्दमयात्मना सदा शान्तिं परामेत्य भजस्व मौनम् ॥ ५२७ ॥**

**அக²ண்ட³போ³தா⁴த்மனி நிர்விகல்பே விகல்பனம்**
**வ்யோம்னி புரப்ரகல்பனம் ।**
**தத³த்³வயானந்த³மயாத்மனா ஸதா³ ஶாந்திம்**
**பராமேத்ய ப⁴ஜஸ்வ மௌனம் ॥ 527 ॥**

| | | |
|---|---|---|
| **अखण्ड बोध आत्मनि** | = | எல்லையற்ற ஞான ஸ்வரூபமாய், |
| **அக²ண்ட³ போ³த⁴ ஆத்மனி** | | |
| **निर्विकल्पे** | = | எவ்வித கல்பனையுமற்றதாயுள்ளதில் |
| **நிர்விகல்பே** | | (ஆத்மாவிடத்தில்), |
| **विकल्पनं** | = | பலவிதமாய் கல்பனை செய்வது, |
| **விகல்பனம்** | | |
| **व्योम्नि** | = | ஆகாசத்தில், |
| **வ்யோம்னி** | | |
| **पुरः** | = | நகரத்தை, |
| **புர:** | | |
| **प्रकल्पनं** | = | கல்பனை செய்வது (போலத்தான்), |
| **ப்ரகல்பனம்** | | |
| **तत्** | = | ஆகையினால், |
| **தத்** | | |

| | | |
|---|---|---|
| **अद्वय आनन्दमयात्मना** | = | இரண்டற்ற ஆனந்த மயமான ஆத்ம |
| **அத்³வய ஆனந்த³மயாத்மனா** | | ஸ்வரூபமாக (இருந்துகொண்டு), |
| **सदा** | = | எப்பொழுதும், |
| **ஸதா³** | | |
| **परां** | = | உத்தமமான, |
| **பராம்** | | |
| **शान्तिं** | = | சாந்தியை, |
| **ஶாந்திம்** | | |
| **एत्य** | = | அடைந்து, |
| **ஏத்ய** | | |
| **मौनं** | = | மௌனத்தை, |
| **மௌனம்** | | |
| **भजस्व** | = | கைக்கொள். |
| **ப⁴ஜஸ்வ** | | **(527)** |

(**அவதாரிகை**) முன் சுலோகத்தில் கூறிய மௌனத்தை விளக்குகிறார்: -

**तूष्णीमवस्था परमोपशान्तिः बुद्धेरसत्कल्प विकल्पहेतो ।**
**ब्रह्मात्मनो ब्रह्मविदो महात्मनो यत्राद्वयानन्दसुखं निरन्तरम् ॥ ५२८ ॥**

**தூஷ்ணீமவஸ்தா² பரமோபஶாந்தி: பு³த்³தே⁴ரஸத்கல்ப**
**விகல்பஹேதோ ।**
**ப்³ரஹ்மாத்மனோ ப்³ரஹ்மவிதோ³ மஹாத்மனோ**
**யத்ராத்³வயானந்த³ஸுக²ம் நிரந்தரம் ॥ 528 ॥**

| | | |
|---|---|---|
| **असत्कल्पविकल्पहेतोः** | = | அஸத்போலவேயுள்ள விகல்பங்களுக்கு |
| **அஸத்கல்பவிகல்பஹேதோ:** | | காரணமான, |
| **बुद्धेः** | = | புத்திக்கு, |
| **பு³த்³தே⁴:** | | |
| **परमा** | = | உத்தமமான, |
| **பரமா** | | |
| **उपशान्तिः** | = | உபசாந்தி, |
| **உபஶாந்தி:** | | |
| **तूष्णीमवस्था** | = | மௌன நிலை, |
| **தூஷ்ணீமவஸ்தா²** | | |
| **यत्र** | = | எந்த மௌன நிலையில், |
| **யத்ர** | | |

ब्रह्मविद = பிரஹ்மத்தையறிந்த,
ப்³ரஹ்மவித³

ब्रह्मात्मन: = பிரஹ்மஸ்வரூபமாயிருக்கிற,
ப்³ரஹ்மாத்மன:

महात्मन: = மஹாத்மாவிற்கு,
மஹாத்மன:

निरन्तरं = இடைவெளி இல்லாமல்,
நிரந்தரம்

अद्वयानन्दसुखं = இரண்டற்ற ஆனந்தானுபவத்தின் ஸுகம்
அத்³வயானந்த³ஸுக²ம் (இருக்குமோ).

முயல் கொம்பு, மலடிமகன் முதலியவை அஸ்த் வஸ்துக்கள் இவைகளுக்கு தோற்றமும் மறைவும் கிடையாது. பிரபஞ்சத்திற்கு தோற்றமும் மறைவும் உள்ளன. ஆகையால் பிரபஞ்சம் அஸத்து அல்ல அஸத் கல்பம். **(528)**

**(அவதாரிகை)** இங்கு வாக்கினுல் பேசாமலிருக்கும் மௌனத்தை சொல்ல வில்ஜல. மனஸினுல் பிரஹ்மத்திற்கு வேருன எதையும் நிஜனக்காமலிருப்பது தான் நல்ல மௌனம். அதில்தான் பிரஹ்மானந்த அனுபவம் ஏற்படும் என்பதை விளக்குகிருர்: -

**नास्ति निर्वासनात् मौनात् परं सुखकृदुत्तमम् ।**
**विज्ञातात्मस्वरूपस्य स्वानन्दरसपायिनः ॥ ५२९ ॥**

**நாஸ்தி நிர்வாஸனாத் மௌனுத் பரம் ஸுக²க்ருது³த்தமம் ।**
**விஜ்ஞாதாத்மஸ்வரூபஸ்ய ஸ்வானந்த³ரஸபாயின: ॥ 529 ॥**

विज्ञात आत्म स्वरूपस्य = ஆத்மாவின் ஸ்வரூபத்தை நன்கு அறிந்தவராய்,
விஜ்ஞாத ஆத்ம ஸ்வரூபஸ்ய

स्व आनन्द रस पायिन: = தன் ஸ்வரூப ஆனந்தத்தின் ரஸத்தை
ஸ்வ ஆனந்த³ ரஸ பாயின: பருகிக்கொண்டிருப்பவருக்கு,

निर्वासनात् = எவ்வித வாசஜனயுமற்ற,
நிர்வாஸனுத்

मौनात् = மௌனத்தைவிட,
மௌனுத்

परं = வேறு (மேலான),
பரம்

उत्तमं = உத்தமமான,
உத்தமம்

**सुखकृत्** = ஸுகத்தைக்கொடுப்பது,
**ஸுக²க்ருத்**

**न अस्ति** = எதுவும் கிடையாது.
**ந அஸ்தி**

**गच्छन् तिष्ठन् उपविशन् शयानो वाऽन्यथाऽपि वा ।**
**यथेच्छया वसेत् विद्वान् आत्मारामः सदा मुनिः ॥ ५३० ॥**

**க³ச்ச²ன் திஷ்ட²ன் உபவிஶன் ஶயானோ வா(அ)ன்யதா²(அ)பி வா ।**
**யதே²ச்ச²யா வஸேத் வித்³வான் ஆத்மாராமঃ ஸதா³ முனிঃ ॥ 530 ॥**

**गच्छन्** = போய்கொண்டும்,
**க³ச்ச²ன்**

**तिष्ठन्** = நின்றுகொண்டும்,
**திஷ்ட²ன்**

**उपविशन्** = உட்கார்ந்து கொண்டும்,
**உபவிஶன்**

**शयानो वा** = படுத்துக் கொண்டாலும்,
**ஶயானோ வா**

**अन्यथा अपि वा** = வேறு விதத்தில் இருந்தாலும்,
**அன்யதா² அபி வா**

**विद्वान्** = ஞானியானவன்,
**வித்³வான்**

**आत्म आरामः** = ஆத்மாவிடத்திலேயே ரமித்தவனாக,
**ஆத்ம ஆராமঃ**

**सदा** = எப்பொழுதும்,
**ஸதா³**

**मुनिः** = முனியாக (மௌனத்துடனிருந்து கொண்டு),
**முனிঃ**

**यथेच्छया** = இஷ்டப்படி,
**யதே²ச்ச²யா**

**वसेत्** = இருந்துவரலாம்.
**வஸேத்** **(530)**

**(அவதாரிகை)** ஜபம் பூஜை முதலானவைகளுக்கு ஏற்பட்டிருக்கும் நியமங்கள் யாதொன்றும் ஆத்ம ஸக்ஷாத்கார விஷயத்தில் கிடையாது என்பதைக் குறிப்பிடு கிறார் மூன்று சுலோகங்களால்: -

**न देशकालासनदिग्यमादि लक्ष्याद्यपेक्षा प्रतिबद्धवृत्तेः ।**
**संसिद्धतत्वस्य महात्मनोऽस्ति स्ववेदने का नियमाद्यवस्था ॥ ५३१ ॥**

**ந தே³ஶகாலாஸனதி³க்³யமாதி³ லக்ஷ்யாத்³யபேக்ஷா**
**ப்ரதிப³த்³த⁴வ்ருத்தே: ।**
**ஸம்ஸித்³த⁴தத்வஸ்ய மஹாத்மனோ(அ)ஸ்தி**
**ஸ்வவேத³னே கா நியமாத்³யவஸ்தா² ॥ 531 ॥**

| | | |
|---|---|---|
| **प्रतिबद्ध वृत्तेः** **ப்ரதிப³த்³த⁴ வ்ருத்தே:** | = | எல்லா மனோவிருத்திகளையும் நன்கு தடுத்து, |
| **संसिद्ध तत्वस्य** **ஸம்ஸித்³த⁴ தத்வஸ்ய** | = | நன்கு அடைந்துள்ள தத்வ ஞானத்தையுடைய, |
| **महात्मनः** **மஹாத்மன:** | = | மஹாத்மாவிற்கு, |
| **देश काल आसन दिग्यमादि लक्ष्यादि अपेक्षा** **தே³ஶ கால ஆஸன தி³க்³யமாதி³ லக்ஷ்யாதி³ அபேக்ஷா** | = | இடம் நேரம் ஆஸனம் திக் வியவஸ்தை யமம் முதலியது குறி முதலியதின் அபேக்ஷை, |
| **न** **ந** | = | கிடையாது, |
| **स्व वेदने** **ஸ்வ வேத³னே** | = | தன்னைத்தான் அறிந்துகொள்வதில், |
| **नियमादि अवस्था** **நியமாதி³ அவஸ்தா²** | = | நியமம் முதலான நிலை, |
| **का** **கா** | = | எது, |
| **अस्ति** **அஸ்தி** | = | இருக்கமுடியும்? |

(531)

**घटोऽयमिति विज्ञातुं नियमः को न्वपेक्ष्यते ।**
**विना प्रमाणसुष्टुत्वं यस्मिन् सति पदार्थधीः ॥ ५३२ ॥**

**க⁴டோ(அ)யமிதி விஜ்ஞாதும் நியம: கோ ந்வபேக்ஷ்யதே ।**
**வினா ப்ரமாணஸுஷ்டுத்வம் யஸ்மின் ஸதி பதா³ர்த²தீ⁴: ॥ 532 ॥**

| | | |
|---|---|---|
| **यस्मिन्** **யஸ்மின்** | = | எது, |

| | | |
|---|---|---|
| **सति** | = | இருந்ததேயானுல், |
| **ஸதி** | | |
| **पदार्थधीः** | = | பதார்த்தத்தின் ஞானம் (ஏற்பட்டுவிடுமோ அந்த), |
| **பதா³ர்த²தீ⁴:** | | |
| **प्रमाण सुष्टत्वं** | = | (ஞானஸாதனமான) பிரமாணம் நன்ருயிருப்பதை, |
| **ப்ரமாண ஸுஷ்டுத்வம்** | | |
| **विना** | = | தவிர (முன்னுல் வெளிச்சமும் தனக்கு |
| **விநா** | | சுண்ணும் இருந்ததேயானுல்), |
| **अयं** | = | இது, |
| **அயம்** | | |
| **घटः** | = | குடம், |
| **க⁴ட:** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **विज्ञातुं** | = | அறிந்துகொள்வதற்கு, |
| **விஜ்ஞாதும்** | | |
| **को नु** | = | என்னதான், |
| **கோ நு** | | |
| **नियमः** | = | நியமம், |
| **நியம:** | | |
| **अपेक्ष्यते** | = | தேவைப்படுகிறது? |
| **அபேக்ஷ்யதே** | | **(532)** |

**अयमात्मा नित्यसिद्धः प्रमाणे सति भासते ।**
**न देशं नापि वा कालं न शुद्धिं वाप्यपेक्षते ॥ ५३३ ॥**

**அயமாத்மா நித்யஸித்³த⁴: ப்ரமாணே ஸதி பா⁴ஸதே ।**
**ந தே³ஶம் நாபி வா காலம் ந ஶுத்³தி⁴ம் வாப்யபேக்ஷதே ॥ 533 ॥**

| | | |
|---|---|---|
| **अयं** | = | இந்த, |
| **அயம்** | | |
| **आत्मा** | = | ஆத்மா, |
| **ஆத்மா** | | |
| **नित्य सिद्धः** | = | எப்பொழுதும் ஸித்தமாயிருப்பவர், |
| **நித்ய ஸித்³த⁴:** | | |
| **प्रमाणे** | = | பிரமாணம் (வாஸனையற்று சுத்தமான |
| **ப்ரமாணே** | | அந்தக்கரணம்), |

| | | |
|---|---|---|
| **सति**<br>**ஸதி** | = | இருக்குமேயானுல், |
| **भासते**<br>**பா⁴ஸதே** | = | (தானே) பிரகாசிக்கும், |
| **देशं**<br>**தே³ஶம்** | = | இடத்தை, |
| **न**<br>**ந** | = | அபேக்ஷிக்காது, |
| **कालं वा अपि**<br>**காலம் வா அபி** | = | காலத்தையும், |
| **न**<br>**ந** | = | அபேக்ஷிக்காது, |
| **शुद्धिं वा अपि**<br>**ஶுத்³தி⁴ம் வா அபி** | = | சுத்தியையும்கூட, |
| **न अपेक्षते**<br>**ந அபேக்ஷதே** | = | அபேக்ஷிக்காது (வெளிசுத்தியை என்று தாத்பர்யம்). **(538)** |

**(அவதாரிகை)** 531-வது சுலோகத்தில் தன்ஊனத்தான் அறிய நியமம் எதற்கு என்று சொன்னதை விளக்கிக்காட்டுகிருர்: -

**देवदत्तोऽहमित्येतद्विज्ञानं निरपेक्षकम् ।**
**तद्ब्रह्मविदोऽप्यस्य ब्रह्माहमिति वेदनम् ॥ ५३४ ॥**

**தே³வத³த்தோ(அ)ஹமித்யேதத்³விஜ்ஞானம் நிரபேக்ஷகம் ।**
**தத்³ப்³ரஹ்மவிதோ³(அ)ப்யஸ்ய ப்³ரஹ்மாஹமிதி வேத³னம் ॥ 534 ॥**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **देवदत्तः**<br>**தே³வத³த்த:** | = | தேவதத்தன், |
| **इति**<br>**இதி** | = | என்ற, |
| **एतत्**<br>**ஏதத்** | = | இந்த, |
| **विज्ञानं**<br>**விஜ்ஞானம்** | = | அறிதல், |

| | | |
|---|---|---|
| निरपेक्षकत् | = | வேறு எதையும் எதிர் பார்த்து ஏற்படுவதில்லை. |
| நிரபேக்ஷகத் | | |
| तदूत् | = | அதைப்போலவே, |
| ததூ³த் | | |
| अस्य | = | இந்த, |
| அஸ்ய | | |
| ब्रह्मविद: अपि | = | பிரஹ்மவித்திற்கும், |
| ப்³ரஹ்மவித³: அபி | | |
| अहं | = | நான், |
| அஹம் | | |
| ब्रह्म | = | பிரஹ்மம், |
| ப்³ரஹ்ம | | |
| इति | = | என்ற, |
| இதி | | |
| वेदनं | = | அறிதல் (வேறு எதையும் |
| வேத³னம் | | அபேக்ஷிக்கிறதில்லை.) (534) |

**भानुनेव जगत्सर्वं भासते यस्य तेजसा ।**
**अनात्मक मसतुच्छं किं नु तस्यावभासकम् ॥ ५३५ ॥**

**பா⁴னுனேவ ஜக³த்ஸர்வம் பா⁴ஸதே யஸ்ய தேஜஸா ।**
**அனாத்மக மஸதுச்ச²ம் கிம் நு தஸ்யாவபா⁴ஸகம் ॥ 535 ॥**

| | | |
|---|---|---|
| अनात्मकं | = | வாஸ்தவ ஸ்வரூபமில்லாததாய், |
| அனாத்மகம் | | |
| असत् | = | எக் காலமும் இருக்கும் தன்மையற்றதாய், |
| அஸத் | | |
| तुच्छं | = | வெறும் தோற்றமாய் உள்ள, |
| துச்ச²ம் | | |
| जगत् | = | உலகம், |
| ஜக³த் | | |
| सर्वं | = | எல்லாம், |
| ஸர்வம் | | |
| यस्य | = | எவருடைய, |
| யஸ்ய | | |
| तेजसा | = | பிரகாசத்தினால், |
| தேஜஸா | | |

**भानुना** = ஸூர்யனுல் போல,
**பா⁴னுனு**
**भासते** = பிரகாசிக்கிறதோ,
**பா⁴ஸதே**
**तस्य** = அந்த பிரஹ்மத்தை,
**தஸ்ய**
**अवभासकं** = பிரகாசிக்கும்படிச்செய்வது,
**அவபா⁴ஸகம்**
**किं नु** = எது இருக்கமுடியும்?
**கிம் நு** (535)

## वेदशास्त्रपुराणानि भूतानि सकलान्यपि ।
## येनार्थवन्ति तं किं नु विज्ञातारं प्रकाशयेत् ॥ ५३६ ॥

**வேத³ஶாஸ்த்ரபுராணுனி பூ⁴தானி ஸகலான்யபி ।**
**யேனுர்த²வந்தி தம் கிம் நு விஜ்ஞாதாரம் ப்ரகாஶயேத் ॥ 536 ॥**

**वेद शास्त्र पुराणानि** = வேதம் சாஸ்திரங்கள் புராணங்கள்,
**வேத³ ஶாஸ்த்ர புராணுனி**
**भूतानि** = பூதங்கள்,
**பூ⁴தானி**
**सकलानि अपि** = எல்லாமே,
**ஸகலானி அபி**
**येन** = எதினுல்,
**யேன**
**अर्थवन्ति** = பிரயோஜனமுள்ளதாக இருக்கின்றதோ,
**அர்த²வந்தி**
**तं** = அந்த,
**தம்**
**विज्ञातारं** = (அவைகளையெல்லாம்) அறிகிறவனை,
**விஜ்ஞாதாரம்**
**किं नु** = எது தான்,
**கிம் நு**
**प्रकाशयेत्** = பிரகாசிக்கச் செய்ய முடியும்?
**ப்ரகாஶயேத்** (536)

**एष स्वयञ्ज्योतिरनन्तशक्तिः आत्माऽप्रमेयः सकलानुभूतिः ।**
**यमेव विज्ञाय विमुक्तबन्धः जयत्ययं ब्रह्मविदुत्तमोत्तमः ॥ ५३७ ॥**

**ஏஷ ஸ்வயஞ்ஜ்யோதிரனந்தஶக்தி: ஆத்மா(அ)ப்ரமேய: ஸகலானுபூ⁴தி: ।**
**யமேவ விஜ்ஞாய விமுக்தப³ந்த⁴: ஜயத்யயம் ப்³ரஹ்மவிது³த்தமோத்தம: ॥ 537 ॥**

| | | |
|---|---|---|
| **एषः** ஏஷ: | = | இந்த, |
| **आत्मा** ஆத்மா | = | ஆத்மா, |
| **स्वयञ्ज्योतिः** ஸ்வயஞ்ஜ்யோதி: | = | தானே பிரகாசிக்கிறவர், |
| **अनन्त शक्तिः** அனந்த ஶக்தி: | = | எல்லையற்ற சக்தியுள்ளவர், |
| **अप्रमेयः** அப்ரமேய: | = | பிரமாணங்களுக்கு விஷயமாகாதவர், |
| **सकल अनुभूतिः** ஸகல அனுபூ⁴தி: | = | எல்லாருடைய அனுபவத்திற்கும் விஷயமானவர் (அல்லது எல்லா அனுபவமுமுள்ளவர்), |
| **यं एव** யம் ஏவ | = | எவரையே, |
| **विज्ञाय** விஜ்ஞாய | = | நன்கு அறிந்து, |
| **विमुक्त बन्धः** விமுக்த ப³ந்த⁴: | = | ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவராய், |
| **अयं** அயம் | = | இந்த, |
| **ब्रह्म वित्** ப்³ரஹ்ம வித் | = | பிரஹ்மத்தை அறிந்தவர், |
| **उत्तमः उत्तमः** உத்தம: உத்தம: | = | மேலானவர்களுக்கெல்லாம் மேலானவராய், |
| **जयति** ஜயதி | = | ஸர்வோத்கிருஷ்டராய் விளங்குகிறார். **(537)** |

**न खिद्यते नो विषयैः प्रमोदते न सज्जते नापि विरज्यते च ।**
**स्वस्मिन्सदा क्रीडति नन्दति स्वयं निरन्तरानन्दरसेन तृप्तः ॥ ५३८ ॥**

**ந கி²த்³யதே நோ விஷயைঃ ப்ரமோத³தே ந**
**ஸஜ்ஜதே நாபி விரஜ்யதே ச ।**
**ஸ்வஸ்மின்ஸதா³ க்ரீட³தி நந்த³தி ஸ்வயம்**
**நிரந்தரானந்த³ரஸேன த்ருப்தঃ ॥ 538 ॥**

| | | |
|---|---|---|
| **विषयैः** விஷயைঃ | = | விஷயங்களினுல், |
| **न खिद्यते** ந கி²த்³யதே | = | (இவர்) வருத்தத்தை யடைவதில்லை, |
| **नो प्रमोदते** நோ ப்ரமோத³தே | = | ஸந்தோஷப்படுகிறதுமில்லை, |
| **न सज्जते** ந ஸஜ்ஜதே | = | (அவைகளில்) பற்றுவதும் கிடையாது, |
| **न अपि विरज्यते च** ந அபி விரஜ்யதே ச | = | (அவைகளை) வெறுப்பதுமில்லை, |
| **निरन्तर आनन्द रसेन** நிரந்தர ஆனந்த³ ரஸேன | = | இடைவிடாது ஆனந்த ரஸத்தினுல் (ரஸத்தை அனுபவிப்பதினுல்), |
| **तृप्तः** த்ருப்தঃ | = | திருப்தியடைந்தவராய், |
| **सदा** ஸதா³ | = | எப்பொழுதும், |
| **स्वस्मिन्** ஸ்வஸ்மின் | = | தன்னிடத்திலேயே, |
| **कीडति** கீட³தி | = | விளையாடுகிறுர், |
| **स्वयं** ஸ்வயம் | = | தாஞகவே, |
| **नन्दति** நந்த³தி | = | ஆனந்திக்கிறுர். |

**(538)**

**क्षुधां देहव्यथां त्यक्त्वा बालः क्रीडति वस्तुनि ।**
**तथैव विद्वान् रमते निर्ममो निरहं सुखी ॥ ५३९ ॥**

**க்ஷுதா⁴ம் தே³ஹவ்யதா²ம் த்யக்த்வா பா³லঃ க்ரீட³தி வஸ்துனி ।**
**ததை²வ வித்³வான் ரமதே நிர்மமோ நிரஹம் ஸுகீ² ॥ 539 ॥**

| | | |
|---|---|---|
| **बालः** பா³லঃ | = | சிறுவன், |

| | | |
|---|---|---|
| **क्षुधां** | = | பசியையும், |
| **க்ஷுதா⁴ம்** | | |
| **देह व्यथां** | = | சரீர சிரமத்தையும், |
| **தே³ஹ வ்யதா²ம்** | | |
| **त्यक्त्वा** | = | விட்டுவிட்டு (கவனிக்காமல்), |
| **த்யக்த்வா** | | |
| **कीडति** | = | விளையாடுகிறன், |
| **கீட³தி** | | |
| **तथा एव** | = | அப்படியே தான், |
| **ததா² ஏவ** | | |
| **विद्वान्** | = | பிரஹ்மத்தை அறிந்தவன், |
| **வித்³வான்** | | |
| **निर्मम:** | = | "என்னுடையது" என்றில்லாமல், |
| **நிர்மம:** | | |
| **निरहं** | = | 'நான்' என்றில்லாமல், |
| **நிரஹம்** | | |
| **सुखी** | = | ஆனந்தமுடையவனுய், |
| **ஸுகீ²** | | |
| **वस्तुनि** | = | வாஸ்தவமாய் இருக்கும் வஸ்துவான |
| **வஸ்துனி** | | பிரஹ்மத்தில், |
| **रमते** | = | ரமித்துக்கொண்டிருக்கிறன். |
| **ரமதே** | | **(539)** |

**चिन्ताशून्यम दैन्य भैक्षमशनं पानं सरिद्वारिषु**
**स्वातन्त्र्येण निरङ्कुशा स्थितिरभीर्निद्रा श्मशाने वने ।**
**वस्त्रं क्षालनशोषणादिरहितं दिग्वास्तु शय्या मही**
**संचारो निगमान्तवीथिषु विदां क्रीडा परे ब्रह्मणि ॥ ५४० ॥**

**ஸிந்தாஶூன்யம தை³ன்ய பை⁴க்ஷமஶனம் பானம் ஸரித்³வாரிஷு**
**ஸ்வாதந்த்ர்யேண நிரங்குஶா ஸ்தி²திரபீ⁴ர்நித்³ரா ஶ்மஶானே வனே ।**
**வஸ்த்ரம் க்ஷாலனஶோஷணாதி³ரஹிதம் தி³க்³வாஸ்து ஶய்யா மஹீ**
**ஸஞ்சாரோ நிக³மாந்தவீதி²ஷு விதா³ம் க்ரீடா³ பரே ப்³ரஹ்மணி ॥ 540 ॥**

| | | |
|---|---|---|
| **विदां** | = | பிரஹ்மவித்துக்களுக்கு, |
| **விதா³ம்** | | |
| **अशनं** | = | போஜனம், |
| **அஶனம்** | | |

| | | |
|---|---|---|
| **चिन्ताशून्यं**<br>**சிந்தாஶூன்யம்** | = | கவலையற்று, |
| **अदैन्य भैक्षं**<br>**அதை³ன்ய பை⁴க்ஷம்** | = | தைன்யமன்னியில் கிடைக்கும் பிக்ஷன்னம், |
| **पानं**<br>**பானம்** | = | குடிக்கத் தண்ணீர், |
| **सरिद् वारिषु**<br>**ஸரித்³ வாரிஷு** | = | நதீ ஜலங்களில், |
| **स्वातन्त्र्येण**<br>**ஸ்வாதந்த்ர்யேண** | = | ஸ்வதந்திரமாக (யாருக்கும் கட்டுப்படாமல்), |
| **निरङ्कुशा**<br>**நிரங்குஶா** | = | எவ்வித கட்டுப்பாடுமில்லாமல், |
| **अभी:**<br>**அபீ⁴:** | = | பயமன்னியில், |
| **स्थिति:**<br>**ஸ்தி²தி:** | = | இருந்து வருதல், |
| **निद्रा**<br>**நித்³ரா** | = | தூங்குவது, |
| **श्मशाने**<br>**ஶ்மஶானே** | = | மயானத்தில் (அல்லது), |
| **वने**<br>**வனே** | = | காட்டில், |
| **वस्त्रं**<br>**வஸ்த்ரம்** | = | ஆடை, |
| **क्षालन शोषण आदि रहितं**<br>**க்ஷாலன ஶோஷண ஆதி³ ரஹிதம்** | = | துவைப்பதோ உலர்த்துவதோ முதலிய எதுவும் இல்லாதது, |
| **दिक् वा अस्तु**<br>**தி³க் வா அஸ்து** | = | அல்லது திசையே வஸ்திரமாக இருக்கும், |
| **शय्या**<br>**ஶய்யா** | = | படுக்கை, |
| **मही**<br>**மஹீ** | = | பூமியே, |
| **संचार:**<br>**ஸஞ்சார:** | = | ஸஞ்சாரம் (நடை), |
| **निगमान्त वीथिषु**<br>**நிக³மாந்த வீதி²ஷு** | = | உபநிஷத்துக்களாகிற தெருக்களில், |

| | | |
|---|---|---|
| **कीडा**<br>**கீடா³** | = | விளையாடுவது, |
| **परे**<br>**பரே** | = | மேலாயுள்ள, |
| **ब्रह्मणि**<br>**ப்³ரஹ்மணி** | = | பிரஹ்மத்தினிடத்தில். |

**(540)**

**विमानमालम्ब्य शरीरमेतद् भुनक्त्यशेषान्विषयानुपस्थितान् ।**
**परेच्छया बालवदात्मवेत्ता योऽव्यक्तलिङ्गोऽननुषक्तबाह्यः ॥ ५४१ ॥**

**விமானமாலம்ப்³ய ஶரீரமேதத்³**
**பு⁴னக்த்யஶேஷான்விஷயானுபஸ்தி²தான் ।**
**பரேச்ச²யா பா³லவதா³த்மவேத்தா**
**யோ(அ)வ்யக்தலிங்கோ³(அ)னனுஷக்தபா³ஹ்யः ॥ 541 ॥**

| | | |
|---|---|---|
| **यः**<br>**யः** | = | எவர், |
| **अव्यक्त लिङ्गः**<br>**அவ்யக்த லிங்க³ः** | = | (ஜாதி, ஆசிரமம், யோக்கியதை முதலியதைக் காட்டக்கூடிய எவ்வித) அடையாளமும் வியக்தமாய் தெரியாதவராயும், |
| **अननुषक्तबाह्यः**<br>**அனனுஷக்தபா³ஹ்யः** | = | வெளிப், பதார்த்தங்களில் எவ்வித பற்றுதலற்றவ ராயும் இருக்கிறரோ (அந்த), |
| **आत्म वेत्ता**<br>**ஆத்ம வேத்தா** | = | ஆத்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்காரம் செய்த ஞானியானவர், |
| **विमानं**<br>**விமானம்** | = | ("நான்" என்று எவ்வித) அபிமானமுமியில்லாத, |
| **एतत्**<br>**ஏதத்** | = | இந்த, |
| **शरीरं**<br>**ஶரீரம்** | = | சரீரத்தை, |
| **आलम्ब्य**<br>**ஆலம்ப்³ய** | = | அவலம்பித்துக் கொண்டு, |
| **पर इच्छया**<br>**பர இச்ச²யா** | = | மற்றவர்களுடைய விருப்பத்தினுல், |
| **उपस्थितान्**<br>**உபஸ்தி²தான்** | = | ஸமீபத்தில் வந்திருக்கும், |

| | | |
|---|---|---|
| **अशेषान्**<br>**அஶேஷான்** | = | எல்லா, |
| **विषयान्**<br>**விஷயான்** | = | விஷயங்களையும், |
| **बालवत्**<br>**பா³லவத்** | = | குழந்தையைப் போலவே, |
| **भुनवित**<br>**பு⁴னவித** | = | அனுபவிக்கிறுன். |

சிறு குழந்தை தானுக உண்பதில்லை. தாயார் ஊட்டும் உணவைச் சாப்பிடுகிறது. அதற்கு ஆசையோ, அபிமானமோ ஒன்றுமில்லாவிட்டாலும் தாயாரின் விருப்பப்படிதான் நடக்கிறது. இதுபோல்தான் ஞானியும் பிறர் விருப்பப்படி அனுபவிக்கிறுன். **(541)**

**(அவதாரிகை)** “குழந்தைபோல” என்று சொன்ஞேம்; அப்படியேதான் இருப்பார் என்பதில்லை. பைத்தியம் பிடித்தவன் போலும் காண்பார்; பார்ப்பதற்கே வெறுக்கத் தக்கவராகவும் பயங்கரராகவும் இருக்கலாம் என்கிறுர்: -

**दिगम्बरो वापि च साम्बरो वात्वगम्बरो वापि चिदम्बरस्य: ।**
**उन्मत्तवद्वापि च बालवद्वा पिशाचवद्वापि चरत्यवन्याम् ॥ ५४२ ॥**

**தி³க³ம்ப³ரோ வாபி ச ஸாம்ப³ரோ வாத்வக³ம்ப³ரோ வாபி சித³ம்ப³ரஸ்யঃ ।**
**உன்மத்தவத்³வாபி ச பா³லவத்³வா பிஶாசவத்³வாபி சரத்யவன்யாம் ॥ 542 ॥**

| | | |
|---|---|---|
| **दिगम्बर: वा अपि च**<br>**தி³க³ம்ப³ரঃ வா அபி ச** | = | திக்கை வஸ்திரமாக உடையவராகவோ (வஸ்திரமில்லாமலோ), |
| **साम्बर: वा**<br>**ஸாம்ப³ரঃ வா** | = | வஸ்திரம் தரிப்பவராகவோ, |
| **त्वक् अम्बर: अपि**<br>**த்வக் அம்ப³ரঃ அபி** | = | (மான் முதலியதின்) தோலை வஸ்திரமாக தரிப்பவராகவோ (இருந்தாலும் எப்பொழுதும்), |
| **चित् अम्बरस्य:**<br>**சித் அம்ப³ரஸ்யঃ** | = | ஞான ஸ்வரூபமான ஆகாசத்தில் இருப்பவராக, |
| **उन्मत्तवत् वा अपि च**<br>**உன்மத்தவத் வா அபி ச** | = | பைத்தியம் பிடித்தவன் போலேயோ, |
| **बालवत् वा**<br>**பா³லவத் வா** | = | குழந்தையைப் போலேயோ, |
| **पिशाचवत् वा अपि**<br>**பிஶாசவத் வா அபி** | = | பிசாசுபோலவேயோ, |

| | | |
|---|---|---|
| **अवन्यां**<br>**அவன்யாம்** | = | பூமியில், |
| **चरति**<br>**சரதி** | = | ஸஞ்சரித்துக்கொண்டிருப்பார். |

**कामान्नी कामरूपी संश्चरत्येकचरो मुनिः ।**
**स्वात्मनैव सदा तुष्टः स्वयं सर्वात्मना स्थितः ॥ ५४३ ॥**

**காமான்னீ காமரூபீ ஸம்ஶ்சரத்யேகசரோ முனிঃ ।**
**ஸ்வாத்மனைவ ஸதா³ துஷ்டঃ ஸ்வயம் ஸர்வாத்மனா ஸ்தி²தঃ ॥ 543 ॥**

| | | |
|---|---|---|
| **कामान्नी**<br>**காமான்னீ** | = | இஷ்டம்போல் அன்னம் கிரஹிப்பவராய், |
| **कामरूपी**<br>**காமரூபீ** | = | இஷ்டம் போல் ரூபம் தரிக்கிறவராய், |
| **सन्**<br>**ஸன்** | = | இருந்துகொண்டு, |
| **एकचरः**<br>**ஏகசரঃ** | = | தனியாகவே ஸஞ்சரிப்பவராய், |
| **स्व आत्मना एव**<br>**ஸ்வ ஆத்மனா ஏவ** | = | தன்னுடைய ஆத்ம ஸ்வரூபமாயிருத்தலினாலேயே, |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **तुष्टः**<br>**துஷ்டঃ** | = | ஸந்தோஷமடைந்தவராய், |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தானே, |
| **सर्वा आत्मना**<br>**ஸர்வா ஆத்மனா** | = | எல்லா ஸ்வரூபமாக, |
| **स्थितः**<br>**ஸ்தி²தঃ** | = | இருப்பவராய், |
| **मुनिः**<br>**முனிঃ** | = | ஞானியானவர், |
| **चरति**<br>**சரதி** | = | ஸஞ்சாரம் செய்துகொண்டிருக்கிறார். (543) |

**क्वचिन्मूढो विद्वान्क्वचिदपि महाराजविभवः**
**कचिद्भ्रान्तः सौम्यः कचिदजगराचारकलितः ।**
**क्वचित्पात्रीभूतः क्वचिदवमतः क्वाप्यविदित**
**श्वरत्येवं प्राज्ञः सततपरमानन्दसुखितः ॥ ५४४ ॥**

**க்வசின்மூடோ⁴ வித்³வான்க்வசித³பி மஹாராஜவிப⁴வ:**
**கசித்³தா⁴ந்த: ஸௌம்ய: கசித³ஜக³ராசாரகலித: ।**
**க்வசித்பாத்ரீபூ⁴த: க்வசித³வமத: க்வாப்யவிதி³த**
**ஶ்வரத்யேவம் ப்ராஜ்ஞ: ஸததபரமானந்த³ஸுகி²த: ॥ 544 ॥**

| | | |
|---|---|---|
| **सतत परम आनन्द सुखितः** ஸதத பரம ஆனந்த³ ஸுகி²த: | = | எப்பொழுதும் உத்தமமான ஆனந்தத்தினுல் ஸுகமடைந்திருக்கும், |
| **प्राज्ञः** ப்ராஜ்ஞ: | = | (பிரஹ்மத்தை) நன்கு அறிந்தவர் (ஸாக்ஷரத்காரம் செய்தவர்), |
| **क्वचित्** க்வசித் | = | சில ஸ்மயங்கனில், |
| **मूढः** மூட⁴: | = | மோஹத்தையடைந்தவராகவும், |
| **क्वचित् अपि** க்வசித் அபி | = | சில ஸமயங்களில், |
| **विद्वान्** வித்³வான் | = | வித்வாஞகவும் (சில ஸமயங்களில்), |
| **महाराज विभवः** மஹாராஜ விப⁴வ: | = | மஹாராஜனுடைய பெருமை உடையவராகவும், |
| **क्ववित्** க்வவித் | = | சில ஸமயங்களில், |
| **भ्रान्तः** ப்⁴ராந்த:: | = | பித்துப்பிடித்தவராகவும், |
| **क्वचित्** க்வசித் | = | சில சமயங்களில், |
| **सौम्यः** ஸௌம்ய: | = | மிகவும ஸுமுகமாகவும் (சில ஸமயங்களில்) |
| **अजगरा आचार कलितः** அஜக³ரா ஆசார கலித: | = | (ஆட்டை விழுங்கக்கூடிய) மஜலப்பாம்பின் நடத்தையுடையவராய் (அதாவது இவர் எவ்வித பிரயத்தினம் செய்யாமல் பிராரப்த கர்மவசத்தினுல் வாயில்வந்து விழும் ஆஹாரத்தை புஜிப்பவராய்), |

**क्वचित्** = சில ஸமயங்களில்,
**க்வசித்**
**पात्रीभूतः** = (பூஜை வந்தனம் முதலான) உபசாரத்திற்குரியவராாய்,
**பாத்ரீபூ⁴த:**
**क्वचित्** = சில ஸமயங்களில்,
**க்வசித்**
**अवमतः** = அவமானம் செய்யப்பட்டவராய்,
**அவமத:**
**क्व अपि** = சில ஸமயங்களில் (அல்லது எங்கேயும்),
**க்வ அபி**
**अविदितः** = அறியப்படாதவராய்,
**அவிதி³த:**
**एवं** = இவ்விதமாக,
**ஏவம்**
**चरति** = ஸஞ்சரித்துவருவார்.
**சரதி**

மூடஞகை என்பதெல்லாம் (மூடஊனப்போல தோன்றும்படி என்று மாத்திரம் தாத்பர்யம். ‘சில சமயங்களில்’ என்பது ‘சிலவிடங்களில்’ ‘சில ஸந்தர்ப்பங்களில்’ ‘சிலர்களுடைய பார்வையில்' என்பதையெல்லாம் சேர்த்துக்குறிக்கும். ஜீவன் முக்தா நந்த லஹரீ என்ற பிரகரணத்தில் இவ்விஷயம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. **(544)**

**(அவதாரிகை)** ஞானிக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வித்தியாஸத்தை வேறு விதமாகவும் வர்ணிக்கிருர்: -

**निर्धनोऽपि सदा तुष्टोऽप्यसहायो महाबलः ।**
**नित्यतृप्तोऽपभुञ्जानोऽप्यसमः समदर्शनः ॥ ५४५ ॥**

**நிர்த⁴னோ(அ)பி ஸதா³ துஷ்டோ(அ)ப்யஸஹாயோ மஹாப³ல: ।**
**நித்யத்ருப்தோ(அ)பபு⁴ஞ்ஜானோ(அ)ப்யஸம: ஸமத³ர்ஶன: ॥ 545 ॥**

**निर्धनः अपि** = பணமில்லாதவராகயிருந்த போதிலும்,
**நிர்த⁴ன: அபி**
**सदा** = எப்பொழுதும்,
**ஸதா³**
**तुष्टः** = ஸந்தோஷமாயிருப்பவர்,
**துஷ்ட:**

| | | |
|---|---|---|
| **असहाय:**<br>**அஸஹாய:** | = | எவ்வித ஸஹாயமுமில்லாதவராஞலும், |
| **महाबल:**<br>**மஹாப³ல:** | = | மிகவும் பலமுள்ளவர், |
| **अभुञ्जान: अपि**<br>**அபு⁴ஞ்ஜாந: அபி** | = | சாப்பிடாமலிருப்பவராஞலும் (போகத்தை அனுபவிக்காதவராயிருந்தாலும்), |
| **नित्य तृप्त:**<br>**நித்ய த்ருப்த:** | = | எப்பொழுதும் திருப்தியுள்ளவர், |
| **असम: अपि**<br>**அஸம: அபி** | = | இவருக்கு எதுவும் ஸமமாகாது என்று இவர் இருந்த போதிலும், |
| **समदर्शन:**<br>**ஸமத³ர்ஶந:** | = | எல்லாவற்றிலும் ஸமமாயிருக்கும் பிரஹ்மத் தைப் பார்ப்பவர் (அல்லது எல்லாவற்றையும் ஸமமாகப்பார்ப்பவர்) **(545)** |

## अपि कुर्वन्नकुर्वाणश्चाभोक्ता फलभोग्यपि ।
## शरीर्यप्यशरीर्येष परिच्छिन्नोऽपि सर्वग: ॥ ५४६ ॥

**அபி குர்வன்னகுர்வாணஶ்சாபோ⁴க்தா ப²லபோ⁴க்³யபி ।**
**ஶரீர்யப்யஶரீர்யேஷ பரிச்சி²ன்னோ(அ)பி ஸர்வக³: ॥ 546 ॥**

| | | |
|---|---|---|
| **कुर्वन् अपि**<br>**குர்வன் அபி** | = | (ஏதேனும்) கார்யம் செய்கிறவராயிருந்தாலும், |
| **एष**<br>**ஏஷ** | = | இவர் ("நான் செய்கிறேன்" என்ற எண்ணமில்லாததிஞல்), |
| **अकुर्वाण: च**<br>**அகுர்வாண: ச** | = | செய்யாதவரும் கூட, |
| **फल भोगी अपि**<br>**ப²ல போ⁴கீ³ அபி** | = | (பிராரப்த கர்ம வசத்திஞல் ஏதேனும் ஸுகதுக்க ரூபமாயேற்படும்) பலஊ அனுபவிக்கிறவராயி ருந்தும், |
| **अभोक्ता**<br>**அபோ⁴க்தா** | = | ("நான் அனுபவிக்கிறேன்" என்ற எண்ணமில்லாததி ஞல்) அனுபவிக்காதவருமாவார், |
| **शरीरी अपि**<br>**ஶரீரீ அபி** | = | (பிராரப்த கர்மம் பாக்கியிருப்பதிஞல்) சரீரமுள்ளவராகி இருந்தாலும், |
| **अशरीरी**<br>**அஶரீரீ** | = | அதில் அபிமானமில்லாததிஞல்) சரீரமில்லாத வரும் அவரே, |
| **परिच्छिन्न: अपि**<br>**பரிச்சி²ன்ன: அபி** | = | (அந்த சரீரம் முதலியவைகளால்) அளவுக்குள்பட்டவராஞலும், |

| | | |
|---|---|---|
| **सर्वग:** **ஸர்வக³:** | = | எங்கும் வியாபித்திருக்கும் பிரஹ்ம ஸ்வரூபமே அவர். **(546)** |

**अशरीरं सदा सन्तमिमं ब्रह्मविदं क्वचित् ।**
**प्रियाप्रिये न स्पृशतस्तथैव च शुभाशुभे ॥ ५४७ ॥**

**அஶரீரம் ஸதா³ ஸந்தமிமம் ப்³ரஹ்மவித³ம் க்வசித் ।**
**ப்ரியாப்ரியே ந ஸ்ப்ருஶதஸ்ததை²வ ச ஶுபா⁴ஶுபே⁴ ॥ 547 ॥**

| | | |
|---|---|---|
| **अशरीरं** **அஶரீரம்** | = | சரீரமற்றவராக, |
| **सदा** **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **सन्त** **ஸந்த** | = | இருந்துவருகிற, |
| **इमं** **இமம்** | = | இந்த, |
| **ब्रह्मविदं** **ப்³ரஹ்மவித³ம்** | = | பிரஹ்ம வித்தை, |
| **क्वचित्** **க்வசித்** | = | ஒரு காலத்திலும், |
| **प्रिय अप्रिये** **ப்ரிய அப்ரியே** | = | பிரியமானது, பிரியமில்லாதது என்ற இரண்டும், |
| **न स्पृशत:** **ந ஸ்ப்ருஶத:** | = | தொடவே தொடாது, |
| **तथा एव** **ததா² ஏவ** | = | அவ்விதமே, |
| **शुभ अशुभे च** **ஶுப⁴ அஶுபே⁴ ச** | = | நல்லது நல்லதில்லாதது என்ற இரண்டும் (தொடாது.) |

சாந்தோக்ய உபநிஷத்தில் (8-12) உள்ள

**'अशरीरं बाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः'**

**'அஶரீரம் பா³வ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத:'**

என்ற மந்திரத்தை சிறிது மாற்றி அதன் கருத்து இங்கு கூறப்படுகிறது. இங்கு 'அசரீரம்' என்ற சொல்லுக்கு சரீரமில்லாதவன் என்று பொருள்ல்ல. சரீரத்தில் ஆத்மாபிமானமில்லாதவன் சரீரமே நான் நானே சரீரம் என்று சரீரத்தையும்

